# THE RAMAYANAM

BY

KAMBAN.



## KISHKINDHA KÁNDAM.

Specially edited for the use of Colleges and Schools.

*WITH ARGUMENTS TO THE CANTOS.*

**COPYRIGHT EDITION.**

MADRAS:

Published by the

MADRAS SCHOOL BOOK AND VERNACULAR LITERATURE SOCIETY,

AND SOLD AT THEIR DEPÔT, OLD COLLEGE.

1888.

கடவுள் துணை.

# கம்பராமாயணம்.

நான்காவது:

## கிட்கிந்தாகாண்டம்.

இஃது

வித்தியாசாலைகளின் உபயோகத்துக்காகப்

பிழையறப் பரிசோதிப்பித்து,

சென்னை ராஜதானி பாடசாலைப்

புத்தகச்சங்கத்தாரது

கருத்துக்கிணங்கப்

படலக்கதைகளின் சுருக்கத்து,



சென்னை:

கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௮.

# அட்டவணை.







# கம்பராமாயணம்.

## நான்காவது: கிட்கிந்தாகாண்டம்.

### 1-வது. பம்பைப்படலம்.

கிட்கிந்தாகாண்டம் கிட்கிந்தையென்னும் நகரத்தில் நடந்த செய்திக் கூட்டத்தை அறிவிக்கும் நூலுறுப்பு. இக்காண்டத்தில் ஸ்ரீராமபிரான் லட்சுமணரோடு பம்பை என்னும் பொய்கையில் நீராடியதுமுதல் அநுமான் மகேந்திரமலையின் சிகரத்திலேறி இலங்கைக்குப்பாய முயன்றதீறாக நடந்த காரியம் உணர்த்தப்படும்.

பம்பைப்படலம்,-பம்பையென்னும் பொய்கையின் வருணனையையும்,-சானகிப்பிராட்டியாரைப் பிரிந்தபிரிவால் சக்கரவாளம்முதலிய பறவைகளையும் தாமரைமுதலிய கொடிகளையும் ஸ்ரீராமபிரான் கண்டு இரங்கியதையும்,—லட்சுமணர் அங்கே ஸ்ரீராமபிரானை நோக்கி இப்போது, நீராடி உமது கீர்த்தியைப்போல வளர்ந்த திரிவிக்கிரமப் பெருமானுடைய சீர்பாதங்களைத் தொழுது சந்தியாவந்தனஞ் செய்விரென்று விண்ணப்பஞ் செய்துகொள்ள, அன்னவுருக்கொண்டு அபௌருஷேயமாகிய வேதங்களைப் பிரமனுக்குபதேசித்தருளிய பெருமான் சாத்திரவிதிப்படி நீராடிச் சந்தியாவந்தனஞ் செய்துகொண்டு, அங்கு முனிவர்கள் வசிக்கும் சோலையிலே தங்கியருளினரென்பதையும்,—உதயத்தில் அப்புறப்பட்டதையும்,—கூறுகின்றது.

காப்பு.

கலிவிருத்தம்.

1 மூன்றுருவெனக்குண மும்மையாமுதற்
றோன்றுருவெவையுமிம் முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவு மிடையினின்றவர்
சான்றுருவுணர்வினுக் *குவந்ததாயினான்.

* குணர்வதாயினன் எனவும் பாடம்.

## நூல்.

இதுவும் அது.

2 தேன்படிமலரது செங்கண்வெங்கைமாத்
தான்படிகின்றது தெளிவுசான்றது
மீன்படிமேகமும் படிந்துவேலைநீர்
வான்படிந்துலகிடைக் கிடந்தமாண்பது.

3 ஈர்ந்தநுண்பளிங்கெனத் தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணி படர்ந்தபித்திகை
சேர்ந்துழிச்சேர்ந்துழி நிறத்தைச்சேர்தலான்
ஓர்ந்துணர்வில்லவ ருள்ளமொப்பது.

4 குவான்மணற்றடந்தொறும் பவளக்கோலிவர்
கவானரசன்னமும் பெடையுங்காண்டலின்
தவாநெடுவானகந் தயங்குமீனொடும்
உவாமதியுலப்பில வுதித்ததொப்பது.

5 ஓதநீருலகமு முயிர்கள்யாவையும்
வேதபாரகனையும் விதிப்பவேட்டநாள்
சீதமவீங்குவரியைச் செகுக்குமாறொரு
காதிகாதலன்றரு கடலினன்னது.

6 எற்பொருநாகர்த மிருக்கையீதெனக்
இற்பதோர்காட்சிய தெனினுங்கீழுறக்
கற்பகமனைய*வக் கவிஞர்காட்டிய
சொற்பொருளாமெனத் தோன்றல்சான்றது.

7. களனவிலன்னமே முதலகண்ணகன்
தளமலர்ப்புள்ளொலி தழங்கியின்னதோர்
கிளவியென்றறிவருங் கிளர்ச்சித்தாகலான்
வளநகர்க்கூலமே போலுமாண்பது.

* வாய எனவும் பாடம்.

8 அரிமலர்ப்பங்கயத் தன்னமெங்கணுட
புரிகுழல்புக்கிடம் புகல்கிலாமையாட
திருமுகநோக்கல மிறந்துநீதுமென்
றெரிபுகுவனவெனத் தோன்றுமீட்டது.

9 காசடைவிளக்கிய காட்சித்தாயினும்
மாசடைபேதைமை யிடைமயக்கலான்
ஆசடைநல்லுணர் வனையதாமெனப்
பாசடைவயின்றொறும் பரந்தபண்பது.

10 களிப்படாமனத்தவன் காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள் விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்க டுளிப்பச்சோருமென்
றொளிப்படாதாயிடை யொளிக்குமீனது.

11 கழைபடுமுத்தமுங் கலுழிக்கார்மத
மழைபடுதரளமு மணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீ ரருவியெய்தலான்
குழைபடுமுகத்தியர் கோலமொப்பது.

12 ஆரியமுதலிய பதினெண்பாடையிற்
பூரியரொருவழி புகுந்தவாமென
ஓர்விலகிளவிக ளொன்றொடொப்பில
சோர்விலபறவைக டுவன்றுகின்றது.

13 தானுயிருறத்தனித் தழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப் பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம் வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச் செவியினேற்பது.

14 ஈறிடலரியமால் வரைநின்றீர்த்திழி
ஆறிடுவிரையகி லாரமாதியா
ஊறிடவொண்ணக ருரைத்தவெண்டளச்
சேறிடுபாணியிற் றிகழுநேரது

கலிநிலைத்துறை.

*　　*　　*

15 கவளயானைய ஞற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளையிகல மாவதுசெய்துமென்றருளா
திவளவன்னங்க டிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவ துவரிதழ்காட்டுவகுமுதம்.

16 பெய்கலன்களி னிலங்கொளிமருங்கொடுபிறழ
வைகலும்புனல் குடைபவர்வானரமகளிர்
செய்கையன்னங்க ளேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்க ளேந்தியபூங்கொம்பர்பொலிவ.

17 ஏலுநீர்நிழ லிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல் புகுந்துளவாமெனப்பொங்கி
ஆலுமீன்கண மஞ்சினவலம்வரவஞ்சிக்
கூலமாமரத் திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம்.

*　　*　　*

18 வலிநடத்திய வாளெனவாளைகள்பாய
ஒலிநடத்திய திரைதொறுமுகள்வனநீர்நாய்
கலிநடைக்கழைக் கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத் தேரைகள்புகழ்வனபோலும்.

19 அன்னதாகிய வகன்புனற்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங் கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கிய தளிரியற்குருகினன்றளர்வான்
உன்னுநல்லுணர் வொடுங்கிடப்புலம்பிடலுற்றான்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

20 வரியார்மணிக்கால்வாளமே மடவன்னங்காளனைநீங்கத்
தரியாணடந்தாளில்லளேற் றளர்ந்தபோதுந்தகைவேயோ
எரியாநின்றவாருயிருக் கிரங்கிஞலிதிசையன்றோ
பிரியாதிருந்தேற்கொருமாற்றம் பேசிற்பூசல்பெரிதாமோ.

21 வண்ணநறுந்தாமரைமலரும் வாசக்குவளைநாண்மலரும் [காய்
புண்ணினெரியுமொருநெஞ்சம் பொதியுமருந்திற்றரும்பொய்
கண்ணுமுகமுங்*காட்டுவாய் வடிவுமொருகாற்காட்டாயோ
ஒண்ணுமென்னினஃதுதவா துலோவிஞருமுய்ந்தாரோ.

* காட்டி எனவும் பாடம்.

22 விரிந்தகுவளைசேதாம்பல் விரைமென்கமலங்கொடிவள்ளை
தாங்கங்கெண்டைவராலாமை யென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனையாளவயவங்க ளவைநிற்கண்டேன்வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோ வாவியுரைதகியாமன்றே.

23 ஓடாநின்றகளிமயிலே சாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்ற நீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத் தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றுயாயிரங்க ளுடையாய்க்கொளிக்குமாறுண்டோ.

24 அடையீரெனினுமொருமாற்ற மறிந்ததுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோ பிழையாதேற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரே நடுவிலாதார்நணியவரோ
டுடையீர்பகைநானுமைநோக்கி யுவக்கின்றேனை முனிவீரோ.

25 பொன்பால்பொருவும்விரையல்லி புல்லிப்பொலிந்தபொலந்தா
தன்பாற்றழுவுங்குழல்வண்டு தமிழ்ப்பாட்டிசைக்குந்தாம [து
ரையே
என்பாலில்லையப்பாலோ விருப்பாரல்லர்விருப்புடைய
உன்பாலில்லையென்றக்கா லொளிப்பாரோடுமுறவுண்டோ.

26 ஒருவாசகத்தைவாய்திறந்திட் டுதவாய்பொய்கையுள்ளொடுங்
திருவாயனையசேதாம்பற் கயலேகிடந்தசெங்கிடையே [கும்
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும் வீழிச்செவ்விக்கொழுங்
[கனிவாய்
தருவாயவ்வாயின்னமிழ்துந் தண்ணென்மொழியுந் தாராயோ.

27 அலக்கணுற்றேற்குற்றுதவற் *கடைவொன்றுண்டேகொடிவள்
[ளாய்
மலர்க்கொம்பனையமடச்சீதை காதேமற்றென்றல்லையால்
பொலக்குண்டலமுங்கொடுங்குழையும் புனைதாழ்முத்தின்
[பொற்றோடும்
விலக்கிவந்தாய் †விளம்பாதே யின்னும்பூசல்விரும்புதியோ.

---

* கடைவுண்டன்றே எனவும் பாடம். † காட்டாயோ எனவும் பாடம்.

28 பஞ்சுபூத்தவிரற்பதுமம் பவளம்பூத்தவடியாளென்
நெஞ்சுபூத்ததாமரையி னிலயம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலாபூந்த குழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்ன நகுவாயென்னைநலிவாயோ.

கலிவிருத்தம்.

29 என்றயாவுயிர்க் கின்றவனேடவிழ்
கொன்றையாவிப் புறத்திவைகூறியான்
பொன்றயாதும் புகல்கிலேபோலுமால்
வன்றயாவிலி யெனனவருந்தினான்.

30 வாரளித்தழை மாப்பிடிவாயிடைக்
காரளிக்கனு ழிக்கருங்கைமமலே
நீரளிப்பது நோக்கினனின்றனன்
பேரளிக்குப் பிறந்தவில்லாயினான்.

31 ஆண்டவள்ளலே யன்பெனுமாரணி
பூண்டதம்பி பொழுதுகழிந்ததால்
ஈண்டிரும்புன ரேய்நதுன்னிசையென
நீண்டவன்கழ றூழ்நெடியோயென்றான்.

32 அரசுமவ்வழி நின்றரிதெய்தியத்
திரைசெய்தீரத்தமுஞ் செய்தவவுண்மையால்
வரைசெய்மாமத வாரணநாணுற
விரைசெய்பூம்புன லாடலேமேயினான்.

* * * .

இதுவும் அது. *

33 ஆடினானன்னமா யருமறைகள்பாடினான்
நீடுநீர்முன்னைநூ னெறிமுறையினேமிதாள்
சூடினான்முனிவர்தந் தொகுதிசெறிசோலைவாய்
மாடுதான்வைகினா னெரிகதிரும்வைகினான்.

34 அந்தியாள்வந்துநா னணுகவவணணுகுறுச்
சந்தவார்கொங்கையா டனிமைதனிநாயகன்
சிந்தியாநொந்துதேய் பொழுதுதெறுசீதநீர்
இந்துவானுந்துவா னெறிகதிரினேறினான்.

* தாழிசை ஒருபோகு கொச்சகம் என்பாருமுளா

இதுவுமது

35 பூவொடுங்கினவிரவு புள்ளொடுங்கினபொழில்கண
மாவொடுங்கினமரனு மலையொடுங்கினகிளிகள
நாவொடுங்கினமயில்க ணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறு குரலொடுங்கினகளிறு.

36 மண்டுயின்றனநிலைய மலைதுயின்றனபழுவில்
பண்டுயின்றனவிரவு பணிதுயின்றனபகரும
விண்டுயின்றனகழுதும் விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடிய கடறுயின்றனகளிறு.

37 பொங்கிமுற்றியவுணர்வு புணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினை பரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமல முகமெடுத்தனகடலின்
வெங்கதிர்க்கடவுளெழ விமலன்வெந்துயரினெழ.

38 காலையேகடிதுவா வேகினார்கடல்கவினு
சோலையேய்மலைதழுவு கானினீணெறிதொலைய
ஆலையேய்துழனியக ளூடார்கலியமிழ்து
போலவேயுரைசெய்புன மானொடுதலைபுரினார்.

பம்பைப்படலம் முற்றிற்று ஆகத் திருவிருத்தம் 13-ல் 38.



## 2-வது. மராமரப்படலம்



இப்படலம் ஸ்ரீராகவபிரான் மராமரங்கள் ஏழையும் அம்பினால் எய்து தொளைத்த செய்தியைத் தெரிவிப்பது.

இப்படலம்,—சவரியின் வேண்டுகோளின்படி ரிசியமூகமலையைச்சார்ந்த இராமலட்சுமணர்களைக்கண்டு சுக்கிரீவன் முதலானோர் பயந்தோடியதையும்,—அநுமான் வந்து, இப்பெருமானைக்கண்டு தண்டமிட்டு அங்கெழுந்தருளியதற்குக் காரணத்தை அறிந்துகொண்டு, சுக்கிரீவனை அழைத்து வந்து நட்புச்செய்வித்ததையும்,—அச்சுக்கிரீவனோடு மதங்கவனத்தையடைந்து தக்க ஆசனத்தில் எழுந்தருளியிருந்த காலையில், வானரத்தலைவன் ருமையென்னும் மனைவியின்றி உபசரிப்பதைக்கண்டு' ஸ்ரீராமபிரான் நீயும் என்னைப் போல மனைவியை இழந்தாய்போலும் என்று வினாவியருள, அப்போது ஆஞ்சநேயர் எழுந்து நின்று கை கூப்பி, வாலியினுடைய ஆண்மையையும்,

வெற்றியையும் பலவாறு எடுத்துரைத்து, எம்பெருமானே! அதிபலசாலியாகிய மாயாவிஅசுரன் வாலியுடன போர்க்கு வந்து தோற்று ஒருபிலத்திலொளித்துக்கொள்ளலும், அவனைப் பின்சென்று, அப்பிலவாயிலில் தம்பியாகிய சுக்கிரீவனைக் காவல்வைத்து இருபத்தெட்டுமாதம்வரையும் போர் புரிந்து நாள்கழிந்தமையால், சுக்கிரீவன் அவ்வாயிலை அடைத்துவந்து பெரியோர் வேண்டுகோளால் அரசுபுரியுங்காலையில் வாலி மீண்டுவந்து இவன் அரசையும் மனைவியையும் பறித்துக்கொண்டு துரத்தினனென்று கூற, அறத்தைக்காக்க அவதரித்த ஸ்ரீராமபிரான் வாலியைக்கொன்று, உன் மனைவியையும் அரசையும் நான் தருகிறேனென்று வாக்குத்தத்தஞ்செய்ததையும்,—அங்கிருந்து நடந்துபோகையில் துந்துபியினுடைய உலர்ந்துள்ள உடற்குவையினைக் கண்டு இஃது, யமன் வாகனமாகிய ஆணெருமையோ? கீழ்விழுந்த தெற்குத்திக்கின்மலையோ? சமுத்திரபுருஷனதுடலின் முழு எலும்போ? என வினவியருளியதையும்,—உணர்த்துகின்றது.

கலிவிருத்தம்.*

1 எய்தினார்சவரிநெடி தேயமால்வரையெளிதின்
நொய்தினேறினரதனி னோன்மைசால்கவியரசு
செய்வதோர்கிலனிவர்க டெவ்வராமெனவெருவி
உய்துநாமெனவிரைவி னோடினான்மலைமுழையின்.

2 காலின்மாமதலையிவர் காண்மினோகறவுடைய
வாலியேவலின்வரவி னார்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர் நீதியாய்நினைதியென
மூலமோர்கிலர்மறுகி யோடினார்முழையதனின்.

3 தாரனீலனைமருவு தாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன் மேருமால்வரையைநிகர்
பாரமாமலையிலொரு பாகமோடுதல்புரிய
ஆரமார்பருமதனி னாகுமாறுறல்கருதி.

4 மானைநாடுதல்புரிஞர் வாலியேவலின்வருதல்
ஆனவாறலர்மறுகி யாவிசோர்நிலையரென
ஏனைவானரர்சிலரு மேகிமாமுழையின்முழு
ஞானநாதரையறிவி னாடிமாருதிமொழியும்.

5 அவ்விடத்தவர்மறுகி யஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமறுகு தேவர்தானவர்வெருவல்
தவ்விடத்தனியருளு தாழ்சடைக்கடவுளென
இவ்விடத்தினிதிருமி னஞ்சலென்றிடையுதவி.

* தாழிசை ஒருபோகு கொச்சகம் என்பாருமுளர்.

6 அஞ்சனைக்கொருசிறுவ னஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொரு மாணவப்படிவமொடு
வெஞ்சினத்தொழிலர்தவ மெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறைய நின்றுகற்பினினினையும்.

7 தேவருக்கொருதலைவ ராமுதற்றேவரெனின்
மூவர்மற்றவரிருவர் மூரிவிற்கரிவரை
யாவரொப்பவருலகின் யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமை தேர்வதெக்கிழமைகொடு.

8 சிந்தையிற்சிறிதுதுயர் சேர்வுறத்தெருமரலின்
நொந்தயர்த்தவரனையர் நோய்வுறச்சிறியரலர்
அந்தரத்தமரரலர் மானுடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொரு டேடுதற்கொருநிலையர்.

9 தருமமுந்தகையுமிவர் தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதொர்பொருள் கருதியன்றதுகருதின்
அருமருந்தனையதிடை யழிவுவந்துளததனை
இருமருங்கினுநெடிது துருவுகின்றனரிவர்கள்.

10 கதமெனும்பொருண்மையிலர் கருணையின்கடலனையர்
இதமெனும்பொருளலதொ ரியல்புணர்ந்திலரிவர்கள்
சதமனஞ்சுறுநிலையர் தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர் மறலியஞ்சுறுவிறலர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

11 என்பனபலவும்பன்னி, யிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்ற வுள்ளத்தனார்வத்தோனை
முன்பிரிந்தனையர்தம்மை முன்னினானென்னநின்றான்
தன்பெருங்குணத்தாற்றன்னிற் றானலதொப்பிலாதான்.

12 தன்கன்றுகண்டவன்ன தன்மையதறுகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றுக்கோண்மா வேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப் பேய்கணித்திரங்குகின்ற
என்கன்றுகின்றதெண்ணிற் பற்பலவிவனையம்மா.

13 மயின்முதற்பறவையெல்லா மணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிமீதா விருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வருத்தெய்துகின்ற விண்முகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப் பயப்பயத்தழுவும்பாங்கா.

14 காயெரிகனலுங்கற்கள் கள்ளுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந் தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறு மரனொடுபுல்லுமெல்லாம்
சாய்வுறுந்தாழ்வபோலிங் கிவாகளோதருமமாவார்.

15 துன்பினைத்துடைத்துமாயத் தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளா நெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகுகின்ற திவர்கின்றதளவில்காதல்
அன்பினுக்கவதியில்லை யடைவென்கொலறிதறேற்றேன்.

16 இவ்வழியெண்ணியாண்டவ் விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந் தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றுகநுங்கள் வரவெனக்கருணையோனும்
*எவ்வழிநீங்கியோய்நீ யாரென*வியம்பலுற்றான்.

17 மஞ்செனத்திரண்டகோல மேனியமகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகி நளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்ய கண்ணயான்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றின்வந்தே னுமமுமநுமனென்றான்.

18 இம்மலையிருந்துவாழு மெரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன் றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையானேவ "வினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழ விசைசுமந்தெழுந்ததோளான்.

19 மாற்றமஃதுரைத்தலோடும் வரிசிலைக்குரிசின்மைந்தன்
தேற்றமுற்றிவனினூங்குச் செவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறைவுங்கல்வி யமைதியுமறிவு†மென்ப
வேற்றுமையிவனோடில்லை யாமெனவிளம்பலுற்றான்.

* வெவ்வழி, விளம்ப எனவும் பாடம். † மெனனும் எனவும் பாடம்.

20 இல்லாதவுலகத்தெங்கு மீங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக் கடலுமேயென்னுங்காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றே யார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீர விரிஞ்சனோவிடைவல்லானோ.

21 மாணியாம்படிவமன்று மற்றிவன்வடிவமைந்த
ஆணியிவ்வுலகுக்கெல்லா மென்னலாமாற்றற்கேற்ற
சேணுயர்பெருமைதன்னைச் சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்று தம்பிக்குக்கழறிக்கண்ணன்.

22 மற்றுமிவ்வுலகத்துள்ள முனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றைச் சுருதியின்றொழுதியாவும்
முற்றறிதருமிம்மாணி மொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும் பேராற்றலரிதுமன்றோ.

23 எவ்வழியிருந்தான்சொற்ற கவிக்குலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணு மருத்தியாலணுகவந்தேம்
இவ்வழிநின்னையுற்ற வெமக்குநீயின்சொலன்ன
செவ்வழியுள்ளத்தோனைக் காட்டுதிதெரியவென்றான்.

24 மாதிரப்*பொருப்பொடோங்கி வரம்பிலாவுலகின்மற்றிப்
பூதரப்புயத்துவீரர் நும்மொக்கும்புனிதர்யாரே
ஆதரித்தவனைக்காண்டற் கணுகினிரென்னினன்னான்
தீதவித்தமையச்செய்த செய்தவச்செல்வனன்றே.

25 இரவிதன்புதல்வன்றன்னை யிந்திரன்புதல்வனென்னும்
பரிவிலன்சீறப்போந்து பருவரற்கொருவனாகி
அருவியங்குன்றினென்றோ டிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர் வரையினும்வளர்ந்ததோளீர்.

26 ஒடுங்கலிலுலகம்யாவு முவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத் தொல்லறந்துணிவான்றேல்
கொடுங்குலப்பகைஞனாகிக் கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்கு மதனினுநல்லதுண்டே.

* பரப்பொ எனவும் பாடம்.

27 எம்மையேகாத்திரென்றற் கெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்ற சராசரஞ்சமைந்தவாற்றல்
மும்மையேழுலகங்காக்கு முதல்வர்நீர்முருகற்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக் கிதின்வருமுறுதியுண்டோ.

28 யாரெனவிளம்புகேனு னெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான் மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன் மரபுளிவாய்மையாதும்
சோர்விலனிலைமையெல்லாந் தெரிவுறச்சோறலுற்றான்.

29 சூரியன்மரபிற்றோன்றிச் சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகி யசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்து விண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்ன கண்ணனக்கவிகைமன்னன்.

30 புயறருமதத்திண்கோட்டுப் புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணர்யாரு மடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன் மனுமுதல்யாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத் தடமதிலயோத்திவேந்தன்.

31 அன்னவன்சிறுவனுமிவ் வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந் தம்பிக்குத்தகையினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தா னுமமுமிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக் கேவல்செய்யடியன்யானே.

32 என்றவன்றோற்றமாதி யிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப் புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்த னெடியவனடியிற்றாழ்ந்தான்.

33 தாழ்தலுந்தகாதசெய்த தென்னைநீதருமமன்றே
*வாழியமறைவலாளா வென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரன் மாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியேன்றானு மரிக்குலத்தொருவனென்றான்.

---

* கேள்வினான் எனவும் பாடம்.

34 மின்னுருக்கொண்டவில்லோர் வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும் பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேரு புயத்திற்குமுவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான் றருமத்தின்றனிமைதீர்ப்பான்.

35 கண்டிலனுலகமூன்றுங் காலினாற்கடந்துகொண்ட
புண்டரிகக்கணாழிப் புரவலன்பொலங்கொள்சோதி
குண்டலவதனமென்றாற் கூறலாந்தகைமைத்தன்றே
பண்டைநூற்கதிரோன்சொல்லப் படித்தனன்படிவமம்மா.

36 தாட்படாக்கமலமன்ன தடங்கணான்றம்பிக்கம்மா
கீட்படாநின்றநீக்கிக் கிளர்படாதாகியென்றும்
நாட்படாமறைகளாலு நவைபடாஞானத்தாலும்
கோட்படாப்பதமேயைய குராக்குருக்கொண்டதென்றான்.

37 நல்லனநிமித்தம்பெற்றே நம்பியைப்பெற்றேநம்பால்
இல்லையேதுன்பமான தின்பமேயெய்திற்றன்றே
வில்லினாயிவனைப்போலாங் கவிக்குலக்குரிசில்வீரன்
சொல்லினாலேவல்செய்வா னவனிலைசொல்லற்பாற்றோ.

38 என்றகமுவந்துகோல முகமலர்ந்தினிதினின்ற
குன்றுறழ்தோளினானை நோக்கியக்குராக்குச்சீயம்
சென்றவன்றன்னையின்னே கொணாகின்றேன்சிறிதுபோது
வென்றியிரிருத்திரென்று விடைபெற்றுவிரைவிற்போனான்.

கலிவிருத்தம்.

39 போனமந்தரமணிப் புயநெடும்புகழினான்
ஆனதன்பொருசினத் தரசன்மாடணுகினான்
யானுமுன்குலமுமிவ் வுலகுமுய்ந்தனமெனா
மானவன்குணமெலா நினையுமாமதியினான்.

40 மேலவன்றிருமகற் குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலா வலியினானுயிர்தெறக்
காலன்வந்தனனிடர்க் கடல்கடந்தனமெனா
ஆலமுண்டவனினின் றருநடம்புரிகுவான்.

41 மண்ணுளார்விண்ணுளார் மாறுளார்வேறுளார்
எண்ணுளாருளரவர்க் கியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினார் பகையுளார்க்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க் கமிழ்தமேபோலுளார்.

42 சூழிமால்யானையார் தொழுகழற்றயரதன்
பாழியாலுலகெலா மொருவழிப்படரவாழ்
ஆழியான்மைந்தர்பே ரறிவினாரழகினார்
ஊழியாரெளிதினிற் கரசுதந்துதவுவார்.

43 நீதியார்கருணையின் னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையா ரெவரினும்பெருமையார்
போதியாதளவிலா வுணர்வினார்புகழினார்
காதிசேய்தருகடற் கடவுள்வெம்படையினார்.

44 வேலிகற்சினவுதா டகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள் புதல்வனைக்கொன்றுதன்
காலியற்பொடியினா னெடியகற்படிவமாம்
ஆலிகைக்கரியபே ருருவளித்தருளினான்.

45 நல்லுறுப்பமையுநம் பியரின்முன்பவனயந்
தெல்லுறுப்பரியபே ரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக் கமைதியம்பகமெனும்
வில்லிறுத்தருளினான் மிதிலைபுக்கனையநாள்.

46 உளைவயப்புரவியா னுதவவுற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற் றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ் மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவியித் தரையெழுந்தருளினான்.

47 தெவ்விராவகைநெடுஞ் சிகைவிராமழுவினான்
அவ்விராமனையுமா வலிதொலைத்தருளினான்
இவ்விராகவன்வெகுண் டெழுமிராவணனையும்
வெவ்விராதனையிரா வகைதுடைத்தருளினான்.

48 கான்முதற்கருணையற் றவர்கடற்படையொடும்
சிரமுகசசிலைகுனித் துதவுவார்திசையுளார்
பரமுகப்பகைதுமித் தருளுவாரபரமராம்
அரன்முதற்றலைவருக் கதிசயத்திறலினா.

49 ஆயமானாகர்தா மூழியானையலால்
காயமானாயினான் யாவனேகாவலா
நீயமானோர்தியா னிருதமாரீசனா
மாயமானாயினான் மாயமானாயினான்.

50 உக்கவந்தமுமுடற் *பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக் குரைசெயும்புரையவோ
திக்கவந்தாநெடுந் திரள்கரஞ்சினவுதோள்
அக்கவந்தனுநினைந் தமரர்தாழ்சவரிபோல்.

51 முனைவரும்பிறருமேன் முடிவரும்பகலெலாம்
இனையர்வந்துறுவரென் றியறவம்புரிகுவார்
வினையெனுஞ்சிறைதுறந் துயர்பதம்விரவினர்
எனையரென்றுரைசெய்கே ளிரவிதன்சிறுவனே.

52 மாயையான்மதியிலா நிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்த தனனவட்டேடுவார்
நீயையாதவமிழைத் துடைமையானெடுமனம்
தூயையாவுடையையா லுறவினைத்திணிருவார்.

53 தந்திருந்தனரருட் டகைநெடும்பகைஞனும்
இந்திரன்சிறுவனுக் கிறுதியின்றிசைதரும
புந்தியின்பெருமையாய் †போதியென்றுரைசெய்தான்.
மந்திரங்கெழுமுநான் மரபுணர்ந்துதவுவான்.

54 அன்னவாமுறையெலா மறிவினாலுணர்குவான்
உன்னையேயுடையவெற் கரியதெப்பொருளரோ
பொன்னையேபொருவுவாய் போதெனப்போதுவான்
தன்னையேயனையவன் சரணம்வந்தணுகினான்.

* பொறை எனவும் பாடம் † போதரென எனவும் பாடம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

55 கண்டனனென்பமன்றோ கதிரவன்சிறுவன்காமர்
குண்டலந்துறந்தகோல வதனமுங்குளிர்ந்தகண்ணும்
புண்டரிகங்கள்பூத்துப் புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்த மரகதக்கிரியனானை.

56 நோக்கினனெடிதுநின்று னெடிவருங்கமலத்தண்ணல்
ஆக்கியவுலகமெல்லா மன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாங் குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்று வீரராய்விளைந்தவென்பான்.

57 தேறினனமரர்க்கெல்லாந் தேவராந்தேவரென்றே
மாறியிப்பிறப்பின்வந்தார் மானுடராகிமன்னோ
ஆறுகொள்சடிலத்தானு மயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லா மானுடம்வென்றதன்றே.

58 எனநினைந்தினையவெண்ணி யிவர்கின்றகாதலோதக்
கனைகடற்கரைநின்றேறிக் கண்ணிணைகளிப்பநோக்கி
அநகனைக்குறுகினனவ் வண்ணலுமருத்திகூரப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப் போந்தினிதிருத்தியென்றான்.

59 தவாவலியரக்கரென்னுந் தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்ற காலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தை யநகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடு முடுபதியிரவியொத்தார்.

60 கூட்டமொத்திருந்தவீரர் குறித்ததோர்பொருட்குமுன்னர்
ஈட்டியதவமும்பின்னர் முயற்சியுமியைந்ததொத்தார்
மீட்டும்வாளரக்கரென்னுந் தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடு ஞானமுங்கிடைத்ததொத்தார்.

61 ஆயதோரவதியின்க ணருக்கன்சேயரசைநோக்கித்
தீவினைதீயநோற்று ரென்னினையார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லா மென்னலாநலமிக்கோயை
மேயினன்விதியேநல்கின் மேவலாகாதென்னென்றான்.

62 மையறுதவத்தின்வந்த சவரியிம்மலையினீவந்
தெய்தினையிருந்ததன்மை யியம்பினள்யாங்களுற்ற
கையறுதுயரநின்றாற் கடப்பதுகருதிவந்தேம்
ஐயநிற்றீருமென்ன வரிக்குலத்தரசன்சொல்வான்.

63 முரணுடைத்தடக்கையோச்சி முன்னவன்பின்வந்தேனை
இருணிலைப்புறத்தின்காறு முலகெங்குந்தொடரவிக்குன்
றரணுடைத்தாகியுய்ந்தே னுருயிர்துறக்கலாற்றேன்
சரணுனைப்புகுந்தேனென்னைத் தாங்குதறருமமென்றான்.

64 என்றவக்குரக்குவேந்தை யிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்ப துன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோகமேல்வந் துறுவன *தீரதலின்றி
நின்றனவெனக்குநிற்கு நேரெனமொழியுநேரா.

65 மற்றினியுரைப்பதென்னே வானிடைமண்ணினின்னைச்
செற்றவரெம்மைச்செற்றார் தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெமக்குமுற்றா ருன்கிளையெமதெங்காதற்
சுற்றமுன்சுற்றநீயெம் மின்னுயிர்த்துணைவனென்றான்.

66 ஆர்த்தனகுரக்குச்சேனை யஞ்சனைசிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப் புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ் சொரிந்தன †வநகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்கு மறையினுமெய்யென்றுன்னா.

67 ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்த வஞ்சனைசிங்கம்வாழி
தூண்டிரடடந்தோண்மைந்த தோழனுநீயும்வாழி
ஈண்டுநுங்கோயிலெய்தி யினிதினுமிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான் வீரனும்விழுமிதென்றான்.

68 ஏகினனிரவிசேயு மிருவருமரிகளேறும்
ஊகவெஞ்சேனைசூழ வறந்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநரந்தைக்காவு நளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும் புதுமலர்ச்சோலைபுக்கார்.

* தீரப்பலன்றி எனவும் பாடம். † கனகமண்ணல் எனவும் பாடம்.

69 ஆரமுமகிலுந்துன்றி யவிர்பளிக்கறையளாவி
நாரநின்றனபோற்றேன்றி நவமலர்த்தடங்களுடும்
பாரமுமருங்குந்தெய்வத் தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரமகளிருச றுவன்றியசும்மைத்தன்றே.

கலிவிருத்தம்.

70 அயர்வில்கேள்விசா லறிஞர்வேலைமுன்
பயில்வில்கல்வியார் பொலிவில்பான்மைபோல்
குயிலுமாமணிக் குழுவுசோதியால்
வெயிலும்வெள்ளிவெண் மதியுமேம்படா.

71 ஏயவன்னதா மினியசோலைவாய்
மேயமைந்தருங் கவியின்வேந்தனும்
தூயபூவணைப் பொலிந்துதோன்றினர்
ஆயவன்பிறே டளவளாவுவார்.

72 கனியுங்கந்தமுங் காயுந்தூயநன்
இனியயாவையுங் கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத் தொழில்புரிந்துபின்
இனிதிருந்துநல் விருந்துமாயினுன்.

73 விருந்துமாகியம் மெய்ம்மையன்பிறே
டிருந்துநோக்கிநின் றிறைவன்சிந்தியாப்
பொருந்துநன்மனைக் குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோ நீயும்பின்னென்றுன்.

74 என்றவேலையி னெழுந்துமாருதி
குன்றுபோலநின் றிருகைகூப்பினுன்
நின்றநீதியாய் நெடிதுகேட்டியால்
ஒன்றியானுனக் குரைப்பதுண்டெனு.

75 நாலுவேதமா நவையிலார்கவி
வேலியன்னதோன் மூலையின்மேலுளான்
சூலிதன்னருட் டுறையின்முற்றினுன்
வாலியென்றுளான் வரம்பிலாற்றலான்.

76 கழறுதேவரோ டவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத் துருவுதேயமுன்
அழலுங்கோளரா வகடுதேய்விடச்
சுழலும்வேலையைக் கடையுந்தோளினான்.

77 நிலனுநீருமாய் நெருப்புங்காற்றுமென்
றுலைவில்பூதநான் குடையவாற்றலான்
அலையின்வேலைசூழ் கிடந்தவாழிமா
மலையினின்றுமிம் மலையின்வாவுவான்.

78 கிட்டுவார்பொரக் கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம் பாகமெய்துவான்
எட்டுமாதிரத் திறுதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள் பணியுமாற்றலான்.

79 கால்செலாதவன் முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன் மார்பின்வென்றியான்
வால்செலாதவா யலதிராவணன்
கோல்*செலாதுவெண் குடைசெலாதரோ.

80 மேருவேமுதற் கிரிகள்வேரொடும்
பேருமேயவன் பேருமேனெடுங்
காரும்வானமுங் கதிருநாகமும்
தூருமேயவன் பெரியதோள்களால்.

81 †பார்கிடந்தவாண் பன்றிபண்டைநாள்
‡நீர்கடைந்தபே ராமைநேருளான்
மார்பிடந்தமா வெனினுமற்றவன்
தார்கிடந்ததோ டகைபவல்லதோ.

82 படர்ந்தநீணெடுந் தலைபரப்பிநீ
தடர்ந்துபாரம்வந் துறவநந்தனும்
கிடந்துதாங்குமிக் கிரியைமேயினான்
நடந்துதாங்குமிப் புவனநாளெலாம்.

---

*செலாதவனு் எனவும் பாடம். †பாரிடந்தவெம்பன்றி எனவும் பாடம்.
‡நீர்கிடந்த எனவும் பாடம்.

83 கடலுளைப்பதுங் கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர் மீதுசெல்வதும்
தொடாமற்றவன் சுழியினெற்றலான்
அடலின்வெற்றியா யயலினுவவோ.

84 வெள்ளமேழுபத் துள்ளமேருவைத்
தள்ளலானதோ ளரியின்றுணையான்
உள்ள*மின்றியவ் வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன் வாழவாழுமால்.

85 மழையிடிப்புறு வயவெஞ்சியமா
முழையிடிப்புறு முரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறுச் சார்வுறுதவன்
விழைவிடத்தின்மேல் விளிவையஞ்சலால்.

86 மெய்க்கொள்வாலினுன் மிடலிராவணன்
தொக்கதோளுறத் தொடர்ப்படுத்தநாள்
புக்கிலாதவெம் பொழியாத்தநீர்
உக்கிலாதவே றுலகம்யாவதோ.

87 இந்திரன்றனிச்
சந்திரன்றழைத் தனையதனமையான
அந்தகன்றனக் கரியவாணையான்
முந்திவந்தன னிவனின்மொய்ம்பினேய்.

88 அன்னவன்னெமக் கரசனுகவே
இன்னவன்னிளம் பதமியற்றுநாள்
முன்னவன்குலப் பகைஞன்முட்டினுன்
மின்னெயிற்றுவா ளவுணன்மேன்மையான்.

89. முட்டிநின்றவன் முரணுரத்தினேர்
ஒட்டவஞ்சிநெஞ் சுலையவோடினுன்
வட்டமண்டலத் தரிதுவாழ்வெனு
எட்டரும்பெரும் பிலனுளெய்தினுன்.

---

* உள்ளநொந்துமற் றுயிருமெஞ்சுமால், வள்ளலேயவன் வலியின்வுண்மையால் எனவும் பாடம்.

90 எய்துகாலையப் பிலனுளெய்தியர்ன்
நொய்தினங்கவற் கொணர்வெஞோன்மையாய்
செய்திகாவனீ சிறிதுபோழ்தென
வெய்தினெய்தினன் வெருளிமேயினன்.

91 ஏகிவாலியு மிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந் தடவிவெம்மையான்
மோகவென்றிமேன் முயல்வின்வைகிடச்
சோகமெய்திநின் றுணைதுளங்கினன்.

92 அழுதழுங்குறும் மவனையன்பினிற்
றொழுதிரந்துநின் றொழிலிதாதலான்
எழுதுவென்றியா யரசுசெய்கெனப்
பழுதிதென்றனன் பரியுநெஞ்சினன்.

93 என்றுதானுமவ் வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற் றேடுவேனவற்
கொன்றுளான்றனைக் கொலவொணாதெனின்
பொன்றுவேனெனாப் புகுதன்மேயினன்.

94 தடுத்துவல்லவர் தணிவுசெய்துநோய்
கெடுத்துமேலையோர் கிளத்துநீதியின்
அடுத்தகாவலு மரிகளாணையால்
கொடுத்ததுண்டிவன் கொண்டிலன்கொலாம்.

95 அன்னநாளின்மா யாவியப்பிலத்
தின்னவாயினூ டெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப் பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலா முடனடுக்கினேம்.

96 சேமமவ்வழிச் செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக் கொண்டுவந்தியாம்
மேவுகுன்றின்மேல் வைகும்வேலைவாய்
ஆவியுண்டன னவனையன்னவன்.

97 ஒளித்தவன்னுயிர்க் கள்ளையுண்டுளம்
களித்தவாலியுங் கடிதினெய்தினான்
விளித்துநின்றுவே றுணாபெறானிருந்
தளித்தவாறுநன் றிளவலாரெனா.

98 வால்விசைத்துவான் வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன் கடிதினெற்றலும்
நீனிறத்துவிண் ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும் பெரியவெற்பெலாம்.

99 ஏறினானவ னெவருமஞ்சுறச்
சீறினானெடுஞ் சிகரமெய்தினான்
வேறிலாதவன் புதல்வ* மெய்ம்மையால்
ஆறினானும்வந் தடிவணங்கினான்.

100 வணங்கியண்ணா னின்வரவிலாமையான்
உணங்கியுன்வழிப் படரவுன்னுவேற்
கிணங்கரின்மையா லிறைவ †நம்முடைக்
கணங்கள்காவலுன் கடன்மையென்றனர்.

101 ஆணையஞ்சியிவ் வரசையெய்திவாழ்
நாணிலாதவென் னவையை ‡நன்குவாய்
பூணுலாவு§தோ ளிணைபொறாயெனக்
கோணினானெடுங் கொடுமைகூறினான்.

102 அடல்கடந்ததோ ளவனையஞ்சிவெங்
குடல்கலங்கியெங் குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங் கரதலங்களால்
உடல்கடைந்தன னிவனுலைந்தனன்.

103 இவனுலைந்துலைந் தெழுகடற்புறத்
தவனியுங்கடந் தெயிலடைந்தனன்
கவனமொன்றிலான் கால்கடாவென
அவனிவேலையே பூரியின்வாவினான்.

* * *

* புதல்வன் என்பதும் பாடம். † வெம் எனவும் பாடம். ‡ நல்கு எனவும் பாடம்.
§ தோளிணை எனவும் பாடம்.

104 நக்காக்கடற் புறத்துநண்ணுநாள்
செக்கர்மெய்த்தனிச் சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப் பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன் கடிதுபற்றினான்.

105 பற்றியஞ்சிலன் பழியைவெஞ்சினம்
முற்றிநின்றதன் முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத் தெழுதலும்பிழைத்
தற்றமொன்றுபெற் றிவனகன்றனன்.

106 எந்தைமற்றவ னெயிறதுக்குமேல்
அந்தகற்குமோ ரரணுமில்லையால்
இந்தவெற்பின்வந் திவனிருந்தனன்
முந்தையுற்றதோர் சாபமுண்மையால்.

107 உருமையென்றிவற் குரியதாரமாம்
அருமருந்தையு மவன்விரும்பினான்
இருமையுந்துறந் திவனிருந்தனன்
கருமமிங்கிதே கடவுளென்றனன்.

கலித்திலைத்துறை.

108 பொய்யிலாதவன் வரன்முறை யிம்மொழிபுகல
ஐயனாயிரம் பெயருடை யமலர்க்குமமலன்
வையநுங்கிய வாயிதழ் துடித்ததுமலர்க்கட்
செய்யதாமரை யாம்பலம் போதெனச்சிவந்த.

* * *

109 ஈரநீங்கிய சிற்றவை சொற்றனளென்ன
*ஆரம்வீங்குதோட் டம்பிக்குத் தன்னரசுரிமைப்
பாரமீந்தவன் பரிவில னொருவன்றனிளையோன்
தாரம்வவ்வின னென்றசொற் றரிக்குமாறுளதோ.

110 உலகமேழினோ டேழும்வந் தவனுயிர்க்குதவ
விலகுமென்னினும் வில்லிடை வாளியின்வீட்டித்
தலைமையோடுநின் றாரமு முனக்கின்றுதருவேன்
புலமையோயவ னுறைவிடங் காட்டெனப்புகன்றான்.

* வாரநீங்கலா விளவற்குமன் எனவும் பாடம்.

111 எழுந்துபேருவ கைக்கடற் பெருந்திரையிரைப்ப
அழுந்துதுன்பத்துக் *கக்கரை கண்டனனனையான்
விழுந்ததேயினி வாலிதன் வலியெனவிரும்பா
மொழிந்தவீரற்கியா மெண்ணுவ துண்டெனமொழிந்தான்.

112 அனையவாண்டுரைத் தநுமனே முதலியவமைச்சர்
நினைவுங்கல்வியு நீதியுஞ் சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவ ரோடும்வே றிருந்தனனிரவி
தனையனவ்வழிச் சமீரணன் மகனுரைதருவான்.

113 உன்னினேனினா துள்ளத்தி னுள்ளத்தையுர்வோய்
அன்னவாலியைக் காலனுக் களிப்பதோராற்றல்
இன்னவீரர்பா லில்லையென் றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவை கடைப்பிடிப் பாயெனச்சொற்றான்.

114 சங்குசக்கரக் குறியுள தடக்கையிற்றாளின்
எங்குமித்தனை யிலக்கணம் யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத் திராமனத் திருநெடுமாலே
இங்குதித்தன னீண்டற †மிருவுதற்கின்னும்.

115 செறுக்கும்வன்றிறற் றிரிபுரந் தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக் காலன்றன் காலமுங்காலால்
அறுக்கும்புங்கவ னாண்டபே ராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம் மாயவற் கன்றியேயெளிதோ.

116 என்னையீன்றவ னிவ்வுல கியாவையுமீன்றான்
தன்னையீன்றவற் கடிமைசெய் தவமஃதையா
உன்னையீன்றவெற் குறுபத முளதெனவுரைத்தான்
இன்னதோன்றலே யவனிதற் கேதுவுண்டிறையோய்.

117 துன்புதோன்றிய பொழுதுடன் றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலை யறிதற்கு முடிவெனென்றியம்ப
அன்புசான்றென வுரைத்தன னையவென்யாக்கை
என்புதோன்றல வுருகின வினிப்பிறிதெவனோ.

* கரைகண்ட கடகளிறனையான எனவும் பாடம். † நிறுவு எனவும் பாடம்.

118 பிறிதுமன்னவன் பெருவலி யாற்றலைப்பெரியோய்
அறிதியென்னினுண் டுபாயமு மஃதருமரங்கள்
நெறியினின்றன வேழினைன் றுருவவிற்நெடியோன்
பொறிகொள்வெஞ்சரம் போவது காணெனப்புகன்றான்.

119 நன்றுநன்றென நன்னெடுங் குன்றமுநாணும்
தன்றுணைத்தனி மாருதி தோளிணைதழுவிச்
சென்றுசெம்மலைக் குறுகியான் செப்புவதுளதால்
ஒன்றுகேளென விராமனு முரைத்தியஃதென்றான்.

120 ஏகவேண்டுமிந் நெறியென வினிதுகொண்டேகி
மாகநீண்டன குறுகிட நிமிர்ந்தனமரங்கள்
ஆகவஞ்சினை டிராண்டினைன் றுருவிநின்னம்பு
போகமன்றவென் மனத்திடர் போமெனப்புகன்றான்.

121 மறுவிலானது கூறலும் வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன் முன்னிய முயற்சியையுன்னி
எறும்வலித்தடந் தோளினிற் சிலையைநாணேற்றி
அறிவினாலளப் பரியவற் றருகுசென்றணைந்தான்.

122 ஊழிபேரினும் பேர்வில வுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந் தாழ்வில தயங்குபே*ர்மொய்ம்பால்
ஆழிமாநிலந் தாங்கிய வரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென் றெருவழி நின்றெனவியைந்த.

123 கலைகொண்டோங்கிய மதியமுங் கதிரவன்றானும்
தலைகண்டோடுதற் கருந்தவந் தொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்ப தல்லது மலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத் தெரிப்பருந் தரத்தனவேழும்.

124 ஒக்கநாளெலா முழல்வன †வுலைவிலவாக
மிக்கதோர்பொரு ளுளதென வேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ் செறிந்தவத் தருநிழற்சீதம்
புக்குநீங்கலிற் றளர்வில விரவிதேர்ப்புரவி.

---

* நிருள்சூழ் எனவும் பாடம். † வுலைவிலாவானம் எனவும் பாடம்.

125 நீடுநாள்களுங் கோள்களு மென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவ மலரெனப் பொலிகின்றவளத்த
ஓடுமாச்சுடர் வெண்மதிக் குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற் களங்கமுற் றுமெனுங்குறிய.

126 நீதரும்பெருஞ் சாகைக டழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந் தருவன விசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன் பளித்தவ னுலகினங்கவனூர்
ஓதிமந்*துணைப் பெடையொடு புடையிருந்துறைவ.

127 நாற்றமல்குபோ தடைகனி காய்முதனுனு
வீற்றுமண்டலத் தியாவையும் வீழ்கிலயாண்டும்
காற்றலம்பினுங் கலிநெடு வானிடைக்கலந்த
ஆற்றின்வீழ்ந்துபோ யலைகடல் பாய்தருமியல.

128 †அடியநான்மறை யந்தண னண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்ற முடியன வாதலின்முடியா
நெடியமாலெனு நிலையன நீரிடைக்கிடந்த
படியின்மேனின்ற மேருமால் வரையினும் ‡பழைய.

129 வள்ளலிந்திரன் மைந்தற்குந் தம்பிக்கும்வயிர்த்த
உள்ளமேயென வொன்றினொன் றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக் கிடந்தபார் சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங் குடைந்துகீழ் போகியவேர.

130 சென்றுதிக்கினை யளந்தன பணைகளிற்றேவர்
என்றுநிற்குமென் றிசைப்பன விருசுடர்திரியும்
குன்றினுக்குயர்ந் தகன்றன வொன்றினுங்குறுகா
ஒன்றினுக்கொன்றி னிடைநெடி தியோசனையுடைய.

131 ஆயமாமர மனைத்தையு நோக்கிநின்றமலன்
தூயவார்கணை தூரப்பதோ ராதரந்தோன்றச்
சேயவானமுந் திசைகளுஞ் செவிடுறத்தேவர்க்
கேய்விலாததோர் பயம்வரச் சிலையைநாணெறிந்தான்.

* தனி எனவும் பாடம். † அடியினுலகளந்தவ எனவும் பாடம்.
‡ பரிய எனவும் பாடம்.

132 ஒக்கநின்றதெவ் வுலகமு மங்கங்கேயோசை
பக்கநின்றவர்க் குற்றது பகர்வதெப்படியோ
திக்கயங்களு மயங்கின திசைகளுந்திகைத்த
புக்கயன்பதி சலிப்புற வொலித்ததப்பொருநாண்.

133 அரிந்தமன்சிலை நாணெறிந் தார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர் கற்பத்தி னிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியே பாங்குநின் றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையை யுரைசெயிற் பழியவர்ப்புணரும்.

134 எய்தல்காண்டுங்கொ லின்னுமென் றரிதின்வந்தெய்திப்
பொய்யின்மாருதி முதலினோர் புகழ்வுறும்பொழுதின்
மொய்கொள்வார்சிலை நாணினை முறையுறவாங்கி
வெய்யவாளியை யாளுடை வில்லியும்விட்டான்.

135 ஏழுமாமர முருவிக்கீ ழுலகமென்றிசைக்கும்
ஏழுமுடுபுக் குருவிப்பி னுடனடுத்தியன்ற
ஏழிலாமையான் மீண்டதவ் விராகவன்பகழி
ஏழுகண்டபி னுருவுமா லொழிவதன்றின்னும்.

136 ஏழுவேலையு முலகமே லுயர்ந்தனவேழும்
ஏழுகுன்றமு மிருடிக ளெழுவரும்புரவி
ஏழுமங்கைய ரெழுவரு நடுங்கினவென்னை
ஏழுபெற்றதோ விக்கணைக் கிலக்கமென்றெண்ணி.

137 அன்னதாயினு மறத்தினுக் காருயிர்த்துணைவன்
என்னுந்தன்மையை நோக்கினர் யாவருமெவையும்
பொன்னின்வார்கழற் புதுநிறத் தாமரைபூண்டு
சென்னிமேற்*கொளூஉ வருக்கன்சே யிவ்வயினவசெப்பும்.

கலிவிருத்தம்.

138 வையநீவானுநீ மற்றுநீமலரின்மேல்
ஐயனீ†யாழிநீ யாழிவாழமலனீ
செய்யதீவினைதெறுந் தேவுநீநாயினேன்
உய்யவந்துதவினா யுலகமுந்துதவினாய்.

* கொண்ட எனவும் பாடம். † யாழிமே வாழிவாழ்கையனீ எனவும் பாடம்.

139 என்னெனக்கரியதெப் பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத் துதவினார்விதியினார்
அன்னையொப்புடையவுன் னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசவென் றுரைசெய்தான்வசையிலான்.

140 ஆடினார்பாடினா ரங்குமிங்கும் *கலந்
தோடினாருவகை†யார் நறவையுண்டுணர்கிலார்
நேடினும்வாலிகா லனையெனாநெடிதுநாள்
வாடினார்தோளெலாம் வளரமற்றவரெலாம்.

141 அண்டமும்மகிலமும் மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும் பசைவறந்திடினும்வான்
மண்டலந்தொடுவதம் மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக் கடலனானுடலரோ.

142 தென்புலக்கிழவனூர் மகிடமோதிசையின்வாழ்
வன்புலக் ‡கிரிமடிந் ததுகொலோமகர§ நீர்
என்புலப்புறவுலாந் ததுகொலோவிதுவெனா
அன்புலப்பரியகோ யுரைசெயாயெனவவன்.

மராமரப்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 145–ல் 142.

இப்படலத்தின் முதல் 38 திருவிருத்தமும் அநுமப்படலமெனறும், அதன்பின் 83 திருவிருத்தமும் நட்புகோட்படலமெனறும், எஞ்சியன மராமரப்படலமெனறும் சில பிரதிகளில் பிரிக்கப்பட்டிருக்கின்றன.



## 3–வது. துந்துபிப்படலம்.



துந்துபியென்னும் அசுரனுடைய எலும்புக்கூட்டை, ஸ்ரீராமபிரானுடைய ஏவலாலே இளையபெருமாள் தமது இடக்காலின் பெருவிரலால் தள்ளியெறிந்ததைக் கூறுவது.

இப்படலத்தில் அடங்கிய கதை.—மாயாவியினுடைய உடன்பிறந்தானாகிய துந்துபியென்னும் தைத்தியன் எருமைக்கடாவினுருக்கொண்டுபோய்ப் பாற்கடலையடைந்து திருமாலைப் போர்க்கழைக்க, அத்திருமால் சிவன்பால் செல்க என்ன, அவ்வாறே சென்று அழைத்தான், அச்சிவன் தேவர்களிடத்

* களித் எனவும் பாடம். † யின்னறவை எனவும் பாடம். ‡ கரி எனவும் பாடம். § மீன எனவும் பாடம்.

தில்போக என்ன, அப்படியேபோய் இந்திரனை அழைத்தான், அவன் வாலியினிடத்தில்போக என்ன, விரைந்துவந்து, கிட்கிந்தையை அடைந்து வாலியைப்போர்க்கு அழைக்க, அவன் தடையின்றிவந்து போர்தொடங்கினான், இவ்விருவரும் சாரிதிரிந்தமையினால் எழுந்த காலின்றுகள் விண்ணுலகையும், மண்ணுலகையும் மறைத்தது. இவ்வாறு போர்நடக்கையில் வானரராஜன் அவ்வசுரனுடைய இரண்டு கொம்புகளையும் பிடுங்கி யெறிந்து, இடியோசை யுண்டாம்படி குத்தி, அவனுடலைக் குமைத்து ஆகாயத்தில் உயர விட்டெறிந்தான். அத்திரள் இங்குவந்து வீழ்தலும் மதங்கமுனிவர் கோபங்கொண்டு, இவ்விறைச்சிப் பிண்டத்தை எறிந்தவனும், அவனைச்சார்ந்தவரும் இங்கு வருவாராயின் சாகக்கடவரென்று சபித்தனர். அச்சாப உதவியினால் நான் என்னைச்சார்ந்தாரோடு இவ்விடத்தில் இனிதிருக்கின்றேனென்று சுக்கிரீவன் கூற, அம்மொழியைத் திருச்செவிசார்த்திய பெருமாள் இளையபெருமாளை நோக்கி, உன்காலால் அவ்வென்புக்குவையை எற்றிவிடுக என்று சொல்லியருள, அதனைக்கேட்டு, தன் இடப்பாதத்தின் கட்டைவிரலால் தள்ளலும், அது பிரமனுலகைத் தீண்டிவந்து இங்கு வீழ்ந்தது. பின்னர்ச் சிறிது நடந்து ஓர் சோலையில் ஸ்ரீராமபிரான் எல்லாரோடும் சுகமாக வீற்றிருக்கையில், சுக்கிரீவன் எங்கள் நாயகனே! நான் உணர்த்துவதொன்று உண்டென்று சொல்லுவானாயினான் என்பது.

கலிவிருத்தம்.

1 துந்துபிப்பெயருடைச் சுடுசினத்தவுணன்மீ
திந்துவைத்தொடநிமிர்ந் தெழுமருப்பிணையினான்
மந்தரக்கிரியெனப் பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருநிறத் தரியினைத்தேடுவான்.

2 அங்குவந்தரியெதிர்ந் தறைதியென்றலுமவன்
பொங்குவெஞ்செருவினிற் பொருதியென்றுரைசெயக்
கங்கைதங்கணிசடைக் கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக் கொருவனென்றுரைசெய்தான்.

3 கடிதுசென்றவனுமக் கடவுடன்கைலையைக்
கொடியகொம்பினின்மடுத் தெழுதலுங்குறுகிமுன்
நொடிதிநின்குறையெனென் றலுநுவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக் கருள்செய்வான்முயல்கென.

4 மூலமேவீரமே மூடினாயோடுபோர்
ஏலுமேதேவர்பா லேகெனாவேவினான்
சாலநாள்போர்செய்வா யாதியேற்சாரல்போய்
வாலிபாலேகெனா வானுளோர்வானுளான்.

5 அன்னவன்விடவுவந் தவனும்வந்தரிகடம்
மன்னவன்வருகபோர் செய்கெனுமலையினைச்
சின்னபின்னம்படுத் தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந் தனையவன்முனைதலும்.

6 இருவருந்திரிவுறும் பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந் திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார் விழுவர்நின்றெழுவரால்
மருவருந்தகையர்தா னவர்கள்வானவர்கடாம்.

7 தீயெழுந்தனவிசும் புறநெடுந்திசையெலாம்
போயெழுந்தனமுழக் குடனெழுந்தன*புகை
தோயநன்புணரியுஞ் சுடர்தடங்கிரிகளும்
சாயழிந்தனவடித் தலமெடுத்திடுதலால்.

8 புயலும்வானகமுமப் புணரியும்புணரிசூழ்
அயலும்வீழ்தூளியா லறிவருந்தகையவாம்
மயனின்மாமகனும்வா லியுமறத்துடலினர்
இயலுமாமதியமீ ராறும்வந்தெய்தவே.

9 அற்றதாகியசெருப் புரிவுறும்மளவினிற்
கொற்றவாலியுமவன் குவவுதோள்வலியொடும்
பற்றியானையினெடும் பணைமருப்பிணைபறித்
தெற்றினானவனும்வா னிடியினின்றுரறினான்.

10 தலையின்மேலடிபடக் கடிதுசாய்நெடிதுதாள்
உலையவாய்முழைதிறந் துதிரவாறொழுகமா
மலையின்மேலுருமிடித் தென்னவான்மண்ணொடும்
குலையமாதிசைகளுஞ் செவிடுறக்குத்தினான்.

11 கவரி†யிங்கிதுவெனக் கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட் டிசைதொறுந்திசைதொறும்
துவரணிந்தனவெனப் பொசிதுதைந்தனதுணைப்
பவர்நெடும்பணைமதப் ‡பகையின்வன்கரிகளே.

---

புயல் எனவும் பாடம். † யங்கிரியெனக் எனவும் பாடம்.
‡ பயிலும்வன்கிரிகளே எனவும் பாடம்.

12 புயல்கடந்திரவிதன் *புவிகடந்தயலுளோர்
இயலுமண்டில்மிகந் தனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத் தவன்வலித்தெறியவன்
†றுயிரும்விண்படரவிவ் வுடலுமிப்பரிசரோ.

13 முட்டிவான்முகடுசென் றளவியிம்முடையுடற்
‡கட்டமால்வரையைவந் துறுதலுங்கருணையான்
இட்டசாபமுமெனக் குதவுமிவ்வியல்பினிற்
பட்டவாமுழுவதும் பரிவினாலுரைசெய்தான்.

இதுவும் அது.

14 கேட்டனனமலனுங் கிளந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலை யிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல் விரலினுந்தினான்
மீட்டதுவிரிஞ்சனா டுற்றுமீண்டதே.

15 ஆயிடையரிக்குல மசனியஞ்சுற
வாய்திறந்தார்த்தது வள்ளலோங்கிய
தூயநற்சோலையி னிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவ துண்டுநானெனா.

துந்துபிப்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 15.



## 4–வது. கலன்காண்படலம்.

ஜானகிபிராட்டியாருடைய திருவாபரணங்களைக் கொண்டுவந்து காட்ட ஸ்ரீராமபிரான் கண்டருளிய செய்திக்கூட்டத்தைத் தெரிவிப்பது.

இப்படலத்தாலுணர்த்தப்படும் கதை.— இவ்விடத்தில் நாங்கள் சுகமாய்க் கூடியிருந்தபோது, சில நாள்களுக்குமுன் தீயநெறியிலொழுகுகின்ற இராவணன் எடுத்துவர உற்றுப்பார்த்தோம். அப்பெண்ணரசி துன்பத்தினால் கதறினாள். ஆகாயத்தில் நெடுந்தூரத்திலிருந்தனள். பிராட்டிதானோ? அறியேம. தன் திருவாபரணங்களை ஒருகிழியில் வைத்து முடிந்து இங்கு இட்டனள். தூதர்களைப்போலத் தான் சென்ற திக்கைத் தெரிவிக்குமென்று கருதியோ? அப்பெருமாட்டியினுடைய் திருவுளக்குறிப்பு இன்னதெனத் துணிந்திலேம். அம்முடிச்சு தரையில் விழாமுன்னமே நாங்கள் ஏந்திக் கொண்டோமென்று, அத்திருவாபரணங்களைக் கொண்டுவந்து பெருமாள்

* புகல் எனவும் பாடம்
† றுயிருமுன்படரவின் னுடலுமிம்பரினரோ எனவும் பாடம்.
‡ கட்டி எனவும் பாடம்.

திருமுன்னர் வைக்க, அவற்றை இராமசந்திரர் நோக்கியபோது, அவை அணிதற்குரிய அவ்வவ்வவயவங்களாகவே தோன்றின. தோன்றலும் பெருமாள் மூர்ச்சித்துச்சாய, அருகிலிருந்த சுக்கிரீவர் தமது மார்பின் மயிர்கள் திருமேனியில் சுறுக்கொண்டு தைக்குமாறு சாய்த்துக்கொண்டு, எம்பெருமானே! பிரமனுடைய அண்டம்வரையுந்தேடி, பிராட்டியாரைக் கொண்டுவந்து உதவுகின்றேன். முன்னே பிராட்டியாரைத் தேடுமுயற்சி நடக்கட்டும்; பின்னே என்காரியம் நடக்கட்டுமென்று இவ்வண்ணம் பலவாறு சொல்லித் தேற்றினர். அம்மகாராஜருடைய சொல்லினால் சற்றுத்தேறி முன்னதாக நின்னுடைய காரியத்தை முடித்து, பின் என் மனைவியைத்தேடும் முயற்சி நடக்கக்கடவதென்று சொல்லியருளி, ஆண்யாளியும், வேங்கையும், யானையும், இரண்டுஆண்சிங்கங்களோடுகூடிச் செல்லுதல்போல, சுக்கிரீவர், அங்கதப்பெருமான், சாம்பவன் முதலியோர் இராமலட்சுமணர்களோடுகூடி, பதுமராகமணிகள் செந்நெருப்புப்போல ஒளிவீச, தீயையவிக்கும் நீர்ப்பெருக்குப்போலப் பொன்ஒளி யெறிக்கின்ற மலைச்சாரலின் வழியேநடந்து, சுவர்க்கம் பூமியில்வந்து தங்கியிருந்தாலொத்த கிட்கிந்தைக்கு அருகே வந்து யாவரும் ஒன்றுகூடி இனி நடத்தவேண்டுவது யாதென்று பேசுவாராயினரென்பது.

---

கலிவிருத்தம்.

1 இவ்வழியாமியையந் திருந்ததோரிடை
வெவ்வழியிராவணன் கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கினின் றேவியேகொலாம்
கவ்வையினரற்றினள் கழிந்தசேணுளாள்.

2 உழையரினுணர்த்துவ துளதென்றுன்னியோ
குழைபொருகண்ணினாள் குறித்ததோர்ந்திலம்
மழைபொருகண்ணிணை வாரியோடுதன்
இழைபொதிந்திட்டனள் யாங்களேற்றனம்.

3 வைத்தனமிவ்வழி வள்ளனின்வயின்
உய்த்தனதந்தபோ துணர்தியாலெனாக்
கைத்தலத்தன்னவை கொணர்ந்துகாட்டினன்
நெய்த்தலைப்பால்கலந் தனையநேயத்தான்.

4 தெரிவுறநோக்கினன் றெரிவைமெய்யணி
எரிகனலெய்திய மெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கல முயிரிற்கூற்றமாய்ப்
பருகினனென்கலம் பகர்வதென்கொலாம்.

* * *

5 விட்டபேருணர்வினை விளிந்தவென்கெனோ
அட்டனவுயிரையவ் வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக் குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோ யாதுசொல்லுகேன்.

6 மோந்திடநறுமல ராயமொய்ம்பினில்
ஏந்திடவுத்தரீ யத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளி தழுவப்போர்த்தலால்
பூந்துகிலாயவப் பூவைபூண்களே.

7 ஈர்த்தனசெங்கணீர் வெள்ளம்யாவையும்
போர்த்தனமயிரப்புறம் புளகம்பொங்குதோள்
வேர்த்தனவென்கெனோ வெதும்பினானென்கோ
தீர்த்தனையவ்வழி யாதுசெப்புகேன்.

8 விடங்*காந்தனையதோர் வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்வினோ டுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத் தாங்கினான்றன
துடம்பினிற்செறிமயிர் சுறுக்கொண்டேறவே.

9 தாங்கினனிருத்தியத் துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சின னிரங்கிவிம்முவான்
வீங்கியதோளினாய் வினையினேனுயிர்
வாங்கினெனிவ்வணி வருவித்தேனெனா.

10 அயனுடையண்டத்தி னப்புறத்தையும்
மயர்வறநாடியென் வலியுங்காட்டியுன்
உயர்புகழ்த்தேவியை யுதவற்பாலெனால்
துயருழந்தயர்தியோ சுருதிநூல்வலாய்.

11 திருமக†ளனையவத் தெய்வக்கற்பினாள்
வெருவரச்செய்துள வெய்யவன்புயம்
இருபதுமீரைந்து தலையுமேவினுன்
ஒருகணைக்காற்றுமோ வுலகமேழுமே.

---

* கலங் எனவும் பாடம். † எருந்ததி எனவும் பாடம்.

12 ஈண்டுநீயிருந்தரு ளேழொடேழனைப்
பூண்டபேருலகங்கள் வலியிற்புக்கிடைத்
தேண்டியவ்வரக்கனைத் திருகித்தேவியைக்
காண்டியானிவ்வழிக் *கொணருங்கைப்பணி.

13 ஏவல்செய்துணைவரேம் யாங்களீங்கிவன்
தாவரும்பெருவலித் தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற் சிறுகநோக்கலென்
மூவகையுலகுநின் மொழியின்முந்துமோ.

14 பெருமையோராயினும் பெருமைபேசலார்
†கருமையேயல்லது பிறிதென்கண்டது
தருமநீயல்லது தனித்துவேறுண்டோ
அருமையேதுனக்குநின் றவலங்கூர்தியோ.

15 முளரிமேல்வைகுவான் முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான் றடக்கையாழியான்
அளவியொன்றுவரே யன்றியையமில்
கிளவியாய்தனித்தனிக் கிடைப்பரோதுணை.

16 என்னுடைச்சிறுகுறை முடித்தலீண்டொரீஇப்
பின்னுடைத்தாயினு மாகபேதுறும்
மின்னிடைச்சனகியை மீட்டுமீடுமால்
பொன்னுடைச்சிலையினாய் விரைந்துபோயென்றான்.

17 எரிகதிர்க்காதல னினையகூறலும்
அருவியங்கண்டிறந் தன்பினோக்கினான்
திருவுறைமார்பனுந் தெளிவுதோன்றிட
ஒருவகையுணர்வுவந் துரைப்பதாயினான்.

18 விலங்கெழிற்றோளினாய் வினையினேனுமிவ்
விலங்கு ‡நற்புவியிலி னிருக்கவேயவள்
கலங்கழித்தனளிது கற்புமேவிய
பொலங்குழைத்தெரிவையர் புரிந்துளோர்கள்யார்.

---

* கொணர்வல் காவலோய் எனவும் பாடம். † கருமமே எனவும் பாடம்.
‡ விற்கரமுமிங் கிருக்கவே எனவும் பாடம்.

19 வாணெடுங்கண்ணியென் வரவுநோக்கயான்
தாணெடுங்கிரியொடுந் தடங்கடம்மொடும்
பூணெடும்புலம்பியிப் பொழுதுபோக்கினேன்
நாணெடுஞ்சிலைசுமந் துழலநாணிலேன்.

20 ஆறுடன்செல்பவ ரஞ்சொன்மாதனை
வேறுளார்வலிசெயின் விலக்கிவெஞ்சமத்
தூறுறத்தம்முயி ருகுப்ப*ர்யானெனை
தேறினடன்றுயர் தீர்க்ககிற்றிலேன்.

21 கருங்கடற்றெட்டனர் கங்கைதந்தனர்
பொரும்புலிமானொடு புனலூட்டினர்
பெருந்தகையென்குலத் தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான் றீர்க்கநோற்றிலேன்.

22 இந்திரற்குரியதோ ரிடுக்கண்டீர்த்திகல்
அந்தகற்கரியபோ ரவுணற்றேய்த்தனன்
எந்தைமற்றவனின்வந் துதித்தயானுளேன்
வெந்துயர்க்கொடும்பழி வில்லிற்றாங்கினேன்.

23 விரும்பெழிலெந்தையார் மெய்ம்மைவீயுமேல்
வரும்பழியென்றலான் மகுடஞ்சூடலேன்
கரும்பழிசொல்லியைப் பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன் பிழைத்ததென்னரோ.

24 என்னநொந்தின்னன பன்னியீடழிந்
துன்னருந்துயரொடு சோர்கின்றான்றனைப்
பன்னருங்கதிரவன் புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனு மளக்கர்நீக்கினான்.

25 ஐயநீயாற்றலி னாற்றினேனல
துய்வனேயெனக்கினி யுறுதிவேறுண்டோ
வையகத்திப்பழி தீரமாய்வது
செய்வனின்குறைமுடித் தன்றிச்செய்கலேன்.

---

* ரென்னையே எனவும் பாடம்.

26 என்றனனிராகவ னினையகாலையில்
வன்றிறன்மாருதி வணங்கினானெடுங்
குன்றிவர்தோளினாய் கூறவேண்டுவ
தொன்றுளததனைநீ யுணர்ந்துகேளெனா.

27 கொடுந்தொழில்வாலியைக் கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மக னாக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டினா லன்றிநேடரி
தடும்படையரக்கர்த மிருக்கையாழியாய்.

28 வானதோமண்ணதோ மாறுவெற்பதோ
ஏனைமாநாகர்த மிருக்கைப்பாலதோ
தேனுளதெரியலாய் *தெரிவதன்றவர்
ஊர்நமக்குற்றுழி யுறுதலுண்மையால்.

29 எவ்வுலகங்களு மிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழி மகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தென வருவர்மீள்வரால்
அவ்வவருறைவிட மறியற்பாலதோ.

30 ஒருமுறையேபரந் துலகம்யாவையும்
திருமகளுறைவிடந் தேரவேண்டுமால்
வரன்முறைநாடிட வரம்பின்றாலுல
கருமையுண்டளப்பரு மாண்டுவேண்டுமால்.

31 ஏழுபத்தாகிய வெள்ளத்தெண்படை
ஊழியிற்கடலென வுலகம்போர்க்குமால்
†ஆழியைக்குடிப்பினு மயன்செயண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங் கிடைத்தசெய்யுமால்.

32 ஆதலானன்னதே யமைவதாமென
நீதியாய்நினைந்தனெ னெனநிகழ்த்தினான்
சாதுவாமென்றவத் தனுவின்செல்வனும்
போதுநாம்வாலிபா லென்னப்போயினார்.

---

* தெரிவதன்று நாம்
ஊனுடை மானிட மானதுண்மையால் எனவும் பாடம்.

† ஆழியைக்குடிப்பினுங் குடிக்குமண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினு மெடுக்குங்கீர்த்தியாய எனவும் பாடம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியச் சந்தவிருத்தம். *

33 வெங்கணாளியேறுமீளி மாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந் திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார் தமாலமேலம்வாழைமாப்
பொங்குநாகமுந்துவன்று சாரனூடுபோயினார்.

34 உழையுலாநெடுங்கண்மாத ரூசலூசலல்லவேல்
தழையுலாவுசந்தலர்ந்த சாரல்சாரலல்லவேல்
மழையுலாவுமுன்றிலல்ல மன்றனாறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலை யல்லபொன்செய்குன்றமே.

35 அறங்கனாறுமேனியா ரரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோது மீறிலாதவோதையால்
கறங்குவார்கழற்கலன் கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்து மாகமீதுலாவுமே.

36 நீடுநாகமூடுமேக மோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமான யானையோடவாளிபோம்
மாடுநாகமூடுசாரல் வாளையோடும்வாவியூ
டோடுநாகமோடவேங்கை யோடும்யூகமோடவே.

37 மருண்டமாமலைத்தடங்கள் செல்லலாவதல்லமால்
தெருண்டமாமதத்தயானை சீறிநின்றுசிந்தலால்
இருண்டகாரகிற்றடத் தொடிதுலர்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததே னொழுக்குபேரொழுக்கரோ.

38 மினன்மணிக்குலந்துவன்றி வில்லலர்ந்துவிண்குலாய்
அனல்பரப்பவொப்பமீ திமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவெப்பிருந்த பொன்பரப்புமென்பரால்
இனையவிற்றடக்கைவீர ரேறுகின்றகுன்றமே.

39 மருவியாடும்வாவிதோறும் வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனி னேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றிநொன்றி னூனைபாயுமேனவில்
குருவிபாயுமோடிமந்தி கோடுபாயுமாடெலாம்.

* கலிச்சந்தவிருத்தம் எனபாருமுளர்.

40 தேனிழுக்குசாரல்வாரி செல்லமீதுசெல்லுநாள்
மீனிழுக்குமன்றிவான வில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவு கோளிழுக்குமென்பரால்
வானிழுக்குமேலவாக மன்றனூறுகுன்றமே.

41 அன்னதாயகுன்றினூறு சென்றவீரரைந்தொடைந்
துன்னலாயயோசனைக்கு மும்பரேறியிம்பரின்
பொன்னினூடிழிந்ததன்ன வாலிவாழ்பொருப்பிடம்
துன்னினூர்கள்செய்வதென்னை யென்றுநின்றுசொல்லுவார்.

கலன்காண்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 42–ல 41.



## 5–வது. வாலிவதைப்படலம்.



வாலியென்னும் வானரவேந்தன் கொலையுண்ட செய்தியை உணர்த்துவது.

இப்படலத்திலுணர்த்தப்படுவன:—அக்காலையில் ஸ்ரீராமசந்திரர் சூரிய புத்திரனைநோக்கி, வாலியும் நீயும் போர்செய்கையில் நான் தனியே மறைந்து நின்று அவன்மேல் அம்பு தொடுத்தெய்யக் கருதினேனென்று சொல்ல, பகைவனை வெற்றிகொள்ளவேண்டுமென்னுங் கருத்துடைய சுக்கிரீவனும் அச்சொல்லுக்கிணங்கி, அலையெறிகின்ற கடலும் கார்மேகமும் கூசவும், விண்ணவரும் மண்ணவரும் அச்சங்கொள்ளவும், ஓசை அண்டமுற்றும் நிரம்பவும் கொக்கரித்து, தொடைதட்டி, தோள்புடைத்து இரைந்த குரலொலி, அணையின்மேல் படுத்துள்ள வாலியினுடைய செவித்தொளையில் புக்கது. மதயானையினது முழக்கத்தை ஆண்சிங்கம் செவியிலேற்பதுபோல, அவ்வொலியைக்கேட்டு, நகைசெய்து, பொருக்கென எழுந்து புறப்படுகையில், மனைவியாகிய தாரைவந்து, அரசனே! உன்னுடைய புயவலிக்கு முன் அஞ்சி ஓடிய தம்பி இன்று அதிக வல்லமைபெற்று வந்தவனல்லன். பெரிய துணை உடையானதலால் போர்க்குவந்தனன், இஃதறி என்றாள். அறிவில்லார் என்னை எதிர்ப்பார்; எதிர்ப்பாராயின், அவருடைய உடல்வலியும், பெற்றுள்ள வரங்களும், பாதி என் உடைமையாகும். நீ துயரற்க எனக்கூற, தாரை அதுகேட்டு ஸ்ரீராமபிரானைத்துணைபெற்றுளன் சுக்கிரீவனென்று சிலர் சொல்லக் கேட்டேனென்றலும், மறத்தை வீட்டி அறத்தை நாட்ட அவதரித்த பெருமானுக்கு இயற்கையல்லாத செய்தியைச்சொல்லிய பிழைசெய்தாய் பாவி! குரங்கொடு நட்புக்கொள்வானோ? அண்டத்திலுள்ளவர்களெல்லாம் வந்தெதிர்ப்பினும் தனக்குத்துணை வில்லேயல்லாமல் வேறு வேண்டாத ஐயன் என்றுரைத்து, இரணியன்கட்டிய தூணில் தோன்றிய நரசிங்கப்பெருமான் நிமிர்ந்து நின்றாற்போல மலையின் சிகரத்தில் நின்று, சுக்கிரீவனை நோக்கிக் கொக்கரித்துப் போர்செய்யத் தொடங்கினன். இருவரும் பெரும்போர் செய்யாநிற்க,

இளையபெருமாள் இச்சுக்கிரீவன் தன் அண்ணனுடைய வாழ்நாளை முடிக்கும்படி கொடியகூற்றுவனைக் கொண்டு வந்துளனென்பதை அறியான்; அறிவானாயின் நிந்தையில்லாத குரங்குப் போர்க்கு இசையான். நீர் துணையாக வந்த செய்தி உள்ளத்திலூன்றச் சிறிதும அறிந்தவனல்லனென்று ஸ்ரீராமருக்குச் சொன்னார். மேலும் இலட்சுமணா ஆற்றாமல் அறத்தின் நெறி தவறும்படி ஆலோசியாமல் செய்வார்களை அறிவுடையோர் நமபுதல் அழகியதன்று. தன் மூத்தோனைப் பகைவனென்று துணிந்து கொல்லும்படி வந்து நின்ற இவன் அயலாரிடத்து வைத்த அன்பு என்னதன்மையதாகுமென்றும் சொல்லினர். தமது தம்பியார கூறியதைத் திருச்செவிசார்த்தியருளிய ஸ்ரீராமபிரானார் என்னபபனே! பேதையாகிய இவ்விலங்கின ஒழுக்கத்தை எடுத்துப்பேசுதல் முறையன்று; ஒவ்வொரு தாய்மார வயிற்றில் பிறந்த தம்பிமார் மூத்தோனுக்கு ஒத்துநடப்பாராயின், பரதன் மிகுதியும் உத்தமன் ஆகுதலுண்டோ? மெய்மமையாகிய அன்புடையார் உலகத்தில் சிலரே. அப்படி மெய்யன்பு இல்லாதவரே பலா என்று கருதுவதே உண்மை. அறிவுடை ஒருவன் நட்புக் கொண்டாரிடத்தில் தான் பெறத்தக்க பயனைப் பெற்றுக கொள்ளவேண்டியதல்லாமல், குற்றமில்லாரைத் தேடி நட்புக்கொள்ள யாவருளரென்று கூறினார். இவ்வாறு இருவரும் வார்த்தையாடுகையில் வாலி தன் தம்பியைத் தாக்கித் தரையில் அறைய முயல்கையில் தப்பி ஓடி வந்து பெருமானை வணங்கினன். பெருமான் அவனை நோக்கி உங்களிருவிருக்கும் வேற்றுமை அறிந்திலேன்; நீ பூங்கொடியைத் தரித்துச் செல்க என, அவன் அப்படியே சென்று போருகையில் ஸ்ரீராமர் அம்பொன்றை எய்தலும, அது கனிந்த வாழைக்கனியில் ஊசி யிறங்குவதுபோல உருவியது. அதனைக் கையினால் இறுகப்பிடித்து, அதில் எழுதிய பெயரை உணர்ந்து, எதிர்நின்ற எமபிரானைநோக்கி, உண்மையைக் காப்பதனபொருட்டு உயிர் துறந்த சக்கரவர்த்தி திருமகனே! நீ பரதனுக்கு முன்னே பிறந்தாயே, என்ன காரியஞ் செய்தனை. அரக்கனொருவன் பிழைசெய்தால் அதற்குக் குரக்குத் தலைவனைக் கொல்ல மனுநூல் சொல்லியுளதோ? எனப் பலவாறு ஏசி, பின் ஞானம் உதயமாகிய பற்பல துதிசெய்து பரமபதத்தை அடைந்தனன். சுக்கிரீவனையும், அங்கதனையும் கொண்டு ஈமக்கடன் செய்வித்து, இலட்சுமணரால் சுக்கிரீவனுக்கு முடிதரிப்பித்து, மாரிகாலம் கழிந்த பின் நின் சேனையோடு வருக எனக் கட்டளையிட்டருளினர் என்பன.

1 அவ்விடத்திராமனீ யழைந்துவாலியானதோர்
வெவ்விடத்தைவந்துபோா வினைக்குமெல்லைவெறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்த தென்கருத்திதென்றனன்
செவ்வடக்கும்வென்றியானு நன்றிதென்றுசிந்தியா.

2 வார்த்தையன்னதாகவா னியங்குதேரினான்மகன்
நீர்த்தரங்கவேலையஞ்ச நீலமேகநாணவே
வேர்த்துமண்ணுளோர்களஞ்ச விண்ணுளோர்கள்விம்மநேர்
ஆர்த்தவோசையீசனுண்ட வண்டமுற்றுமுண்டதே.

3 இடித்துரப்பிவந்துபோ ரெதிர்த்தியேலடர்ப்பலென்
றடித்தலங்கள்கொட்டிவாய் மடித்தடுத்தலங்கறோள்
புடைத்துநின்றழைத்தபூசல் புக்கதென்பமிக்கிடம்
துடிப்பவன்குறங்குவாலி திண்செவித்தொளைக்கணே.

கலிவிருத்தம்.

4 மாற்பெருங்கடகரி முழக்கமவாளரி
எற்பதுசெவித்தலத் தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டன னமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததே யனையபான்மையான்.

5 உருத்தனன்பொரவெதிர்ந் திளவலுற்றமை
வரைத்தடந்தோளினான் மனத்தினெண்ணினான்
சிரித்தனனவ்வொலி திசையினப்புறத்
திரித்ததவ்வுலகமோ ரேழொடேழையே.

6 எழுந்தனன்வல்விரைந் திறுதியூழியின்
கொழுந்திரைக்கடல்கிளர்ந் தனையகொள்கையான்
அழுந்தியதக்கிரி யருகின்மால்வரை
விழுந்தனதோள்புடை விசித்தகாற்றினே.

7 போய்ப்பொடித்தனமயிர் புறத்தவெம்பொறி
காய்ப்பொடுற்றெழுவட கனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழி தேவர்நாட்டினும்
மீப்பொடித்தனபுகை யுயிர்ப்புவீங்கவே.

8 கைக்கொடுகைத்தலம் புடைப்பக்காவலின்
திக்கயங்களுமதச் செருக்குச்சிந்தின
உக்கனவுருமின முலைந்தவும்பரும்
நெக்கனநெரிந்தன நின்றகுன்றமே.

9 வந்தனென்வந்தனெ னென்றவாசகம்
இந்திரன்முதற்றிசை யெட்டுங்கேட்டன
சந்திரன்முதலிய தாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிச சிகரந்தீண்டவே.

10 வீசினகரத்தின்வேர் பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றன வண்டப்பித்திகை
பூசினவெண்மயிர் பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன் குலைந்ததும்பரே.

11 கடித்தவாளெயிறுகு கனல்கள்கார்விசும்
பிடித்தவாயுகுமுரு மினத்திற்சிந்தின
தடித்துவீழ்வனவெனத் தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின் வயங்குகாசரோ.

12 ஞாலமுநாற்றிசைப் புனலுநாகரும்
மூலமுமுற்றிட முடிவிற்*றீக்குமக்
காலமுமொத்தனன் கடலிற்றன்கடை
ஆலமுமொத்தன னெவருமஞ்சவே.

13 ஆயிடைத்தாரையன் றமிழ்திற்றோன்றிய
வேயிடைத்தோளினா †ளிடைவிலக்கினாள்
வாயிடைப்புகைவர வாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங் கூந்தறீகின்றாள்.

14 விலக்கலைவிடுவிடு விளிந்துளாரெனும்
கலக்கியக்கடல்கடைந் தமுதுகண்டென
உலக்குவித்துயிர்குடித் தொல்லைமீள்குவல்
மலைக்குலமயிலென மடந்தைகூறுவாள்.

15 கொற்றவநின்பெருங் குவவுத்தோள்வலிக
‡கிற்றனன்முன்னைநா ளீடுண்டேகுவான்
பெற்றிலன்பெருந்திறல் பெயர்தரும்போர்செயற்
குற்றதுநெடுந்துணை யுடைமையாலென்றாள்.

16 மூன்றெனமுற்றிய முடிவில்பேருல
கேன்றுடனுற்றன வெனக்குநேரென
தோன்றினுந்தோற்றலை தொலையுமென்பது
சான்றுளதன்னது தையல்கேட்டியால.

---

* தீர்க்குமக் எனவும் பாடம். † ள் விளைவிறபற்றினள எனவும் பாடம்.
‡ கிறறையனலலனு வீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன் எனவும் பாடம்.

17 மந்தரநெடுவரை மத்துவாசுகி
அந்தமில்கடைகயி றடைகலாழியான்
சந்திரன்றுணைதறி தருக்கின்வாங்குநர்
இந்திரன்முதலிய வமரரேனையோர்.

18 பெயர்வுறவலிக்கவு மிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றநா ளருளைநோக்கியான்
தயிரெனக்கடைந்தவர்க் கமுதந்தந்தது
மயிலியற்குயின்மொழி மறக்கலாவதோ.

19 ஆற்றலினமரரு மவுணர்யாவரும்
தோற்றனரேனையர் சொல்லற்பாலரோ
கூற்றமென்பெயர்சொலக் குலையுமாரினி
*மாற்றலராகிவந் தெதிருமாண்பினோர்.

20 பேதையரெதிர்குவ ரெனினும்பெற்றுடை
ஊதியவரங்களு முரமுமுள்ளதிற்
பாதியுமென்னதாற் பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழியென நின்றுகூறினான்.

21 அன்னதுகேட்டவ ளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந் திராமனென்பவன்
உன்னுயிர்கோடலுக் குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர் சொல்லினாரென்றாள்.

22 உழைத்தவல்விருவினைக் கூறுகாண்கலா
தழைந்தயருலகினுக் கறத்தினாறெலாம்
இழைந்தவறவியல்பல வியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன் பெண்மையாலென்றான்.

23 இருமையுநோக்குறு மியல்பினாற்கிது
பெருமையோவீங்கிதிற் பெறுவதென்கொலோ
அருமையினின்றுயி ரளிக்குமாறுடைத்
தருமமேதவிர்க்குமோ தன்னைத்தானரோ.

* மாற்றவராகி என்றும் பாடம்.

24 ஏற்றபேருலகெலா மெய்தியீன்றவள்
மாற்றவளேவமற் றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையா லளித்தவையனைப்
போற்றலையின்னன புகறற்பாலையோ.

25 நின்றபேருலகெலா நெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலால் வேறுவேண்டுமோ
தன்றுணையொருவருந் தன்னின்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடு புணருநட்பனோ.

26 தம்பியரல்லது தனக்குவேறுயிர்
இம்பரினிலதென வெண்ணியேய்ந்தவன்
எம்பியுமியானுமுற் றெதிர்ந்தபோரினில்
அம்பிடைதொடுக்குமோ வருளினாழியான்.

27 இருத்திநீயிறையிவ ணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடிந் துடனவந்தானையும்
கருத்தழித்தெய்துவன் கலங்கலென்றனன்
விரைக்குழல்பின்னனை விளம்பவஞ்சினாள்.

[illegible]துறை.

28 ஒல்லைச்செருவேட் டெயர்வெல்புய வோங்கலும்பர்
எல்லைக்குமப்பா லிவர்கின்ற விரண்டினோடும்
மல்லற்கிரியின் றலைவந்தனன் வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின் றலைதோற்றிய ஞாயிறென்ன.

29 நின்றானெதிரா வருநெஞ்சு நடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற் றரைமால்வரை சாலும்வாலி
குன்றாடுவந்துற் றனன்கோ ளவுணன்குறித்த
வன்றாணிடைத்தோன் றியமா நரசிங்கமென்ன.

30 ஆர்க்கின்றபின்னோன் றனைநோக்கினன் றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத் துருமேறு வெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லா வுலகும் பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னா னிலந்தா வியகாலிதென்ன.

31 அவ்வேலேயிராமனு மன்புடைத் தம்பிக்கைய
செவ்வேசெலநோக் குதிதானவர் தேவர்நிற்க
எவ்வேலேயெம்மேரு வெக்காலொ டெக்காலவெந்தீ
வெவ்வேறுலகத் திவன்மேனியை மானுமென்றான்.

32 வள்ளற்கிளேயான் பகர்வானிவன் றம்முன்வாளுள்
கொள்ளக்கொடுங்கூற் றுவனைக்கொணர்ந் தான்குரங்கின்
எள்ளற்கரும்போரம் திசைகல னென்னுமின்னல்
உள்ளததினூன்ற வுணர்வுற்றில ஞென்றுமென்றான்.

33 ஆற்றாதுபின்னும் பகர்வானறத் தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார் களைத்தேறுதல் செவ்விதன்றால்
மாற்றானெனத்தம் முனைக்கொல்லிய வந்துநின்றான்
வேற்றார்கடிறத்திவன் றஞ்சமென் வீரவென்றான்.

34 அத்தாவிதுகே ளெனவாரியன் கூறுவானிப்
பித்தாயவிலங்கி ஞெழுக்கிளைப் பேசலாமோ
எத்தாயர்வயிற் றினும்பின் பிறந்தார்களெல்லாம்
ஒத்தாற்பரதன் பெரிதுத்தம னாதலுண்டோ.

35 விற்றாங்குவெற்பன்ன விலங்கெழிற் றோளமெய்ம்மை
உற்றார்சிலரல் லவரேபல ரென்பதுண்மை
பெற்றாருழைப்பெற்ற பயன்பெறும் பெற்றியல்லால்
அற்றாரநவையென்றலுக் காருந ரார்கொலென்றான்.

36 வீரத்திறலோ ரிவையின்ன விளம்பும்வேலைத்
தேரிற்றிரிவான் மகனிந்திரன் செம்மலென்றிப்
பாரிற்றிரியும் பனிமால்வரை யன்னபண்பார்
போரித்திசையானை யிரண்டென முட்டினாரே.

37 குன்றோடுகுன்றுத் தனர்கோளரிக் கொற்றவல்லே
றொன்றோடுசென்றொன் றெதிருற்றன வேயுமொத்தார்
நின்றார்திரிந்தார் நெடுஞ்சாரி நிலந்திரிந்த
வன்றேட்குயவன் *றிணிமட்கலத் தாழியென்ன.

---

*திரி எனவும் பாடம்.

38 தோளோடுதோடேய்ந் தலிற்றன்னிலந் தாங்கலாற்றாத்
தாளோடுதாடேய்ந் தலிற்றந்த கழற்பிறங்கல்
வாளோடுமின்னொடுவ போனெடு வானினொடைக்
கோளோடுகோளுற்றன வொத்தடர்ந் தார்கொதித்தார்.

39 தந்தோள்வலிமிக் கவர்தம்மொரு தாய்வயிற்றின்
வந்தோர்மடமங் கைபொருட்டு மலைக்கலுற்றார்
சிந்தோடரியுண்கட் டிலோத்தமை காதல்செற்ற
சுந்தோபசுந்தப் பெயாத்தொல்லையி னோருமொத்தார்.

40 கடலொன்றினொடொன்று மலைக்கவுங் காவன்மேருத்
திடலொன்றினொடொன்றமர் செய்யவுஞ் சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகி யுடற்றவுங் கண்டிலாதேம்
மிடலிங்கிவர்வெந் தொழிற்கொப்புரை வேறுகாணேம்.

41 ஊகங்களினாயகர் வெங்க ணுமிழ்ந்ததீயான்
மேகங்களெரிந்தன வெற்புமெ ரிந்ததிக்கின்
நாகங்கணடுங்கின நானில முங்குலைந்த
மாகங்களொருங்கண் ணியவிண்ணவர் போய்மறைந்தார்.

42 விண்மேலினரோ நெடுவெற்பின் முகட்டினாரோ
மண்மேலினரோ புறமாதிர வீதியாரோ
கண்மேலினரோ வெனயாவருங் காணநின்றார்
புண்மேலிரத்தம் பொடிப்பக்கடிப் பாரபுடைப்பார்.

43 எழொத்துலகந் திசையெட்டொ டிரண்டுமுட்டி
ஆழிக்கிளரார் கலிக்கெண்மடங் கார்ப்பினோசை
பாழித்தடந்தோ ளினுமார்பினுங் கைகள்பாய
ஊழிக்கிளர்கா ரிடியொத்தது குத்துமோதை.

44 வெவ்வாயெயிற்றான் மிடல்வீரர் கடிப்பமீச்சென்
றவ்வாயெழுசோ ரிகளாசைக டோறும்வீச
எவ்வாயுமெழுந்த கொழுஞ்சுடர் மீன்கள்யாவும்
செவ்வாயைநிகர்த் தனசெக்கரை யொத்தமேகம்.

59 சையம்வேரொடு முருமுறச் சாய்ந்தெனச்சாய்ந்தான்
வையமீதிடைக் கிடந்தபோ ரடுதிறல்வாலி
வெய்யவன்றரு மதலையை மிடல்கொடுகவரும்
கைநெகிழ்ந்தன னெகிழ்ந்திலன் கடுங்கணைகவர்தல்.

60 வெற்றிவீரன தடுகணை யவன்மிடலுரத்தூ
டுற்றதப்புறத் துருதமு னுறுவலிக்கரத்தால்
பற்றிவாலினுங் காலினும் பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடு மறலியுஞ் சிரத்தினைக்குனித்தான்.

61 எழுந்துவான்முக டிடித்துகப் படுப்பலென்றிவரும்
உழுந்துபோர்வுழி இத் திசைதிரிந் திறுப்பலென்றுறுக்கும்
விழுந்துபாரினை வேரொடும் பறிப்பலென்றேரும்
அழுந்துமிச்சர மெய்தவ ளுர்கொலென்றயிர்க்கும்.

62 எற்றுங்கையினை நிலத்தொடு மெரிபொறிபறப்பச்
சுற்றுநோக்குறுஞ் சுடுசரத் தைந்துணைக்கரத்தால்
பற்றிவாலினுங் காலினும் பல்லினும்பறிப்பான்
உற்றுருமையி னுலைவுறு மலையெனவுருளும்.

63 தேவரோவென வயிர்க்குமத் தேவரிச்செயலுக்
காவரோவவர்க் காற்றலுண் டோவெனுமயலோர்
யாவரோவென நகைசெயு மொருவனேயிறைவர்
மூவரோடுமொப் பான்செய லாமெனமொழியும்.

64 நேமிதான்கொலோ நீலகண் டன்னெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோ *வறுமுக னயில்கொலோவன்றேல்
நாமவிந்திரன் வச்சிரப் படையுமென்னடுவட்
போமெனுந்துணை போதுமோ யாதெனப்புழுங்கும்.

65 வில்லினூற்றுப் பரிதிவ்வெஞ் சரமெனவியக்கும்
சொல்லினுனெடு முனிவரோ தூண்டினுரென்னும்
பல்லினுற்கடிப் புறும்பல காலுந்தன்னூரத்தைக்
கல்லியார்ப்பொடு பறிப்பவன் பகழியைக்கண்டான்.

* வானறெனிற் குனறுருவயிலும் எனவும் பாடம்.

66 சரமெனும்படி தெரிந்தது பலபடச்சலித்தென்
உரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்றைக்
கரமிரண்டினும் வாலினுங் காலினுங்கழற்றிப்
பரமனன்னவன் பெயரறிகுவெனெனப்பறிப்பான்.

67 ஓங்கரும்பெருந் திறலுடை மனத்தினனுரவோன்
வாங்கினான்மற்றவ் வாளியை யாளிபோல்வாலி
ஆங்குநோக்கின னமரரு மவுணரும்பிறரும்
வீங்கினார்கடோள் வீரரை யாரவியவார்த்தார்.

68 மோடுதெண்டிரை முரிதரு கடலெனமுழங்கி
ஈடுபேருல கிழந்தன தாமெனத்தெளிந்தோர்
காடுமாநெடு விலங்கலுங் கடந்ததக்கடலின்
ஊடுபோதலுந் தாக்கையொத்தயர்களத்துதிரம்.

69 வாசத்தாரவன் மார்பெனு மலைவழங்கருவி
ஓசைச்சோரியை நோக்கின னுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப் புண்டவத்தம்பியும்பைங்கண்
நேசத்தாரைகள் சொரிதர நெடிதிலஞ்சோர்ந்தான்.

70 பறித்தவாளியைப் பருவலித்தடக்கையாற்பற்றி
இறுப்பெனென்றுகொண் டெழுந்தனன் மேருவையிரண்டாய்
முறிப்பெனென்னினு முறிவதன் றுமெனமொழியாப்
பொறித்தநாமத்தை யறிகுவா னோக்கினன்புகழோன்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

71 மும்மைசாலுலகுக்கெல்லா மூலமந்திரத்தைமுற்றும்
தம்மையேதமர்க்குநல்குந் தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேயெழுமைநோய்க்கு* மருந்தினையிராமனென்னும்
செம்மைசேர்நாமந்தன்னைக் கண்களிற்றெரியக்கண்டான்.

72 இல்லறந்துறந்தநம்பி யெம்மனோர்க்காகத்தங்கள்
வில்லறந்துறந்*தவீரன் றோன்றலால்வேதநூலில்
சொல்லறந்துறந்திலாத சூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னா நகைவரநாணுட்கொண்டான்.

---

* தவவீரா எனவும் பாடம்.

73 வெள்கிடுமகுடஞ்சாய்க்கும் வெடிபடச்சிரிக்குமீட்டும்
உள்கிடுமிதுவுந்தானோ ரோங்கறமோவென்றுன்னும்
முள்கிடுங்குழியிற்புக்க மூரிவெங்களிநல்யானை
நொள்கொடுங்கிடந்ததென்னத் துயருழந்தழிந்துசோரும்.

74 இறைதிறம்பினனாலென்னே யிழிந்துளோரியற்கையென்னே
முறைதிறம்பினனாலென்று மொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மை மன்னர்க்கு* முன்னஞ்சொல்லும்
துறைதிறம்பாமற்காப்பத் தோன்றினான்வந்துதோன்ற.

75 கண்ணுற்றான்வாலிநீலக் கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்தி வருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரி பொறியொடும்பொடிப்பநோக்கி
எண்ணுற்றாயென்செய்தாயென் றேசுவானியம்பலுற்றான்.

76 வாய்மையுமரபுங்காத்து மன்னுயிர்துறந்தவள்ளற்
றூயவன்மைந்தனேநீ பரதன்முன்றோன்†றினாயே
தீமைதான்பிறரைக்காத்துத் தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந் தருமத்தைத்தழுவிநின்றாய்.

77 குலமீதுகல்வியீது கொற்றமீதுற்றுநின்ற
நலமீதுபுவன‡மூன்று நாயகமுன்னீதன்றே
வலமீதிவ்வுலகந்தாங்கும் வண்மையீதென்றாற்றிண்மை
அலமரச்செய்யலாமோ வறிந்திருந்தயர்ந்துளார்போல்.

78 கோவியற்றருமநுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணா வுருவத்தாயுடைமையன்றே
ஆவியைச்சனகன்பெற்ற வன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத் திகைத்தனைபோலுஞ்செய்கை.

79 அரக்கரோரழிவுசெய்து கழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ
இரக்கமெங்குகுத்தாயென்பா லெப்பிழைகண்டாயப்பா
பாக்கழியிதுநீபூண்டாற் புகழையார்பரிக்கற்பாலார்.

* மனுவிடை எனவும் பாடம். † [illegible] எனவும் பாடம்
‡ [illegible]

80 ஒலிகடலுலகந்தன்னி லூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்து பரந்ததோகருணைவள்ளால்
மெலியவர்பாலதேயோ வொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவ*ரிளிவுசெய்தாற் புகழன்றிவசையுமுண்டோ.

கூட்டொருவரையும்வேண்டாக் கொற்றவபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கே தம்பிக்குக்கொடுத்துப்போந்து
நாட்டொருகருமஞ்செய்தா யெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய் கருமந்தானிதன்மேலுண்டோ.

அறைகழலலங்கல்வீர ராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றே தொன்மையினன்றூற்கெல்லாம்
இறைவனீயென்னைச்செய்த தெனினிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்று முனிதியோமுனிவிலாதாய்.

இருவர்போரெதிருங்காலை யிருவருநல்லுற்றாரே
ஒருவர்மேற்கருணை†தூண்டி யொருவர்மேலொளித்துநின்று
வரிசிலைகுழையவாங்கி வாயம்புமருமத்தெய்தல்
தருமமோபிறிதொன்றாமோ தக்கிலதென்னும்பக்கம்.

84 வீரமன்று விதியன்றுமெய்ம்மையின்
வாரமன்றுநின் மண்ணினுக்கென்னுடல்
பாரமன்று பகையன்றுபண்பொழிந்
தீரமன்றிது வென்செய்தவாறரோ.

85 இருமைநோக்கிநின் றியாவர்க்குமொக்கின்ற
அருமையாற்றலன் றேயறந்தாங்கின்ற
பெருமையென்பது தென்பிழைபேணல்விட்
‡டொருமைநோக்கி யொருவற்குதவலே.

86 செயலைச்செற்ற பகைதெறுவான்றெரிந்
தயலைப்பற்றித் துணையமைந்தாயெனின்
புயலைப்பற்றுமப் பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவ தென்னமுயற்சியோ.

* ரழி [illegible] எனவும் பா[illegible] † அன்னாட் எனவும் பாடம்.
‡ டொருமைநோக்கி[illegible]ருவறுதுடியல்லோ எனவும் பாடம்.

87 காரியன்ற களங்கநிறந்தொன்மை
ஊரியன்ற மதிக்குளதாமென்ப
சூரியன்மா புக்குமோர்தொன்மறு
ஆரியன்பிறந் தாக்கினையாமரோ.

88 மற்றொருந்தன் வலிந்தறைகூறவந்
தற்றவென்னை யொளிந்துயிருண்டநீ
*இற்றையிற்பிறர்க் கும்மிகலேறென
நிற்றிபோலுங் கிடந்தநிலந்தரோ.

89 நாலியற்கையு நுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ் சிலமும்போற்றலை
வாலியைப்படுந் தாயலைமன்னற
வேலியைப்படுந் தாய்விறல்வீரனே.

90 தாரமற்றொருவன்கொளத்தன்கையின்
பாரவெஞ்சிலை †நாணும்பழுதுற
நேருமன்றும றைந்துநிராயுதன்
மார்பினெய்யவோ வில்லிகல்வல்லதே.

91 என்றுதானு மெயிறுபொடிபடத்
தின்றுகான்று விழிவழித்தீயுக
வென்றிவாலி யினைய விளம்பினான்
நின்றவீரனு நீநிகழ்த்தினான்.

92 பிலம்புக்காய்நெடு நாள்பெயராயெனுப்
புலம்புற்றுன்வழிப் போதலுற்றான்றனைக்
குலம்புக்கான்ற முதியர்குறிக்கொணீ
அலம்பொற்றாரவ னேயாசென்றலும்.

93 வானமாளவென் றம்முனைவைத்தவன்
தானுமாளக் கிளையினிறத்தடிந்
தியானுமாள்வெ னிருந்தரசாள்கிலென்
ஊனமான வுரைபகர்ந்தீரென.

* எற்றெயும்படியாவி எனவும் பாடம். † வீரம் பரிப்பதே எனவும் பாடம்.

94 பற்றியான்ற படைத்தலைவீரரும்
முற்றுணர்ந்த முதியருமுன்பரும்
எற்றுநும்மர செய்திலையேயெனக்
கொற்றநன்முடி கொண்டநக்கோதிலான்.

95 வந்தவுன்னை வணங்கிமகிழ்ந்தனன்
எந்தையென்க ளினைத்தவராற்றலின்
தந்தவுன்னர சென்றுதருக்கிலான்
முந்தையுற்றது சொல்லமுனிந்துநீ.

96 கொல்லலுற்றனை யும்பியைக்கோதவற்
றில்லையென்ப துணர்ந்துமிரங்கலை
அல்லல்செய்ய லுனக்கபயம்பிழை
புல்லலென்னவும் புல்லலைபோங்கினாய்.

97 ஊற்றமுற்றுடை யானுனக்காரமர்
தோற்றுமென்று தொழுதுயர்கையனைக்
கூற்றமுண்ணக் கொடுப்பெனென்றெண்ணினாய்
காற்றிசைக்கும் புறந்தையுநண்ணினான்.

98 அன்னதன்மை யறிந்துமருளலை
பின்னவன்னிவ னென்பதும்பேணலை
மன்னமாமுனி சாபவாம்புடைப்
பொன்மலைக்கவ னண்ணலிற்*போகலை.

99 ஈரமாவது மிற்பிறப்பாவதும்
வீரமாவதுங் கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவது மற்றொருவன்புணர்
தாரமாவதைத் தாங்குநர்†தருக்கதோ.

100 மறந்திறம்பல் வலியமெனுமனம்
புறந்திறம்ப லெளியவர்ப்பொங்குதல்
அறந்திறம்ப லருங்கடிமங்கையர்
திறந்திறம்ப றெளிவுடையோர்க்கெலாம்.

---

* பொன்றலை எனவும் பாடம். † தருக்கரோ எனவும் பாடம்

101 தருமமின்னதெ னுந்தகைத்தன்மையும்
இருமையுந்தெரிந் தெண்ணலையெண்ணினால்
அருமையும்பிதன் னாருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினை யெய்தப்பெறுதியோ.

102 ஆதலானு மவனெனக்காருயிர்க்
காதலானென லானுநிற்கட்டனென்
ஏதிலாரு மெளியரென்றாரையும்
தீதுதீர்ப்பதென் சிந்தைக்கருத்தரோ.

103 பிழைத்ததன்மை யிதுவெனப்பேரெழில்
தழைத்தவீர னுரைசெயத்தக்கிலா
திழைத்தவாலி யியல்பெனக்கித்துணை
விழைத்திறத்தொழி லென்னவிளம்புவான்.

104 ஐயநுங்க ளருங்குலக்கற்பினைப்
பொய்யின்மங்கையர்க் கேய்ந்தபுணர்ச்சிபோல்
செய்திலன்னெனைத் தேமலர்மேலவன்
எய்தினெய்திய தாகவியற்றினான்.

105 மணமுமில்லை மறைநெறிவந்தன
குணமுமில்லைக் குலமுதற்கொத்தன
உணர்வுசென்றுழிச் செல்லுமொழுக்கலால்
நிணமுநெய்யு மிணங்கியநேமியாய்.

106 பெற்றிமற்றிது பெற்றதொர்பெற்றியின்
குற்றமுற்றிலெ னீயதுகோடியால்
வெற்றியுற்றதொர் வெற்றியினாயெனாச்
சொற்றசொற்றுறைக் குற்றதுசொல்லுவான்.

107 நலங்கொடேவரிற் றோன்றிநவையறக்
கலங்கலாவற நன்னெறிகாண்டலின்
விலங்கலாமை விளங்கியதாகலான்
அலங்கலார்க்கி தடுப்பதன்றுமரோ.

108 பொறியின்யாக்கைய தோபுல*ஞகிய
அறிவின்மேலதன் ருேவறத்தாறுதான்
நெறியிஞேன்மையி னோர்நின்றுணர்ந்தநீ
பெறுதியோபிழை யுற்றுறுபெற்றிதான்.

109 மாடுபெற்றி யிடங்கர்வலித்திடக்
கோடுபற்றிய கொற்றவற்கூயநோர்
பாடுபெற்ற வுணர்வின்பயத்திஞல்
வீடுபெற்ற விலங்கும் †விலங்கநோ.

110 சிந்தைநல்லறத் தின்வழிச்சேர்த்தலால்
பைந்தொடித்திரு வின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல் வீடுபெற்றெய்திய
எந்தையும்மெரு வைக்கரசல்லஞே.

111 நன்றுநீதென் றியநெறிநல்லறி
வின்றிவாழ்வதன் ருேவிலங்கின்னியல்
நின்றநன்னெறி நீயறியாநெறி
ஒன்றுமின்மையுன் வாய்மையுணர்த்துமால்.

112 தக்கவின்ன தகாதனவின்னவென்
றுக்கவுன்னல ராகினுயர்ந்துள
மக்களும்விலங் கேமனுவின்னெறி
புக்கவேலவ் விலங்கும்புத்தேளிரே.

113 காலஞற்றல் கடிந்தகணிச்சியான்
பாலிஞற்றிய பத்திபயத்தலான்
மாலிஞற்றரு மன்பெரும்பூதங்கள்
நாலிஞற்றலு ‡மாற்றுழிநண்ணிஞய்.

114 மேவருந்தரு மத்துறைமேவிஞர்
ஏவரும்பவத் தாலிழிந்தோர்களும்
தாவருந்தவ ரும்மதன்றன்மைசால்
தேவரும்முளர் நீமைதிருத்திஞர்.

---

* ஞேக்கிய எனவும் பாடம். † விலங்கரோ எனவும் பாடம்.
‡ மாறுற எனவும் பாடம்

115 இனையதாகலி னெக்குலத்தியாவர்க்கும்
வினையினுல்வரு மேன்மையுங்கீழ்மையும்
அனையதன்மை யறிந்துமழித்தனை
மனையின்மாட்சியென் றுன்மனுநீதியான்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

116 அவ்வுரையமையக்கேட்ட வரிகுலத்தரசுமாண்ட
செவ்வியோயனையதாக செருக்களத்*தெதிர்த்தெய்யாதே
வெவ்வியபுளினுரென்ன விலங்கினைமறைந்துவில்லால்
எவ்வியதென்னையென்று னிலக்குவனியம்பலுற்றுன்.

117 முன்புநின்றம்பிவந்து சரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பெனென்று செப்பினன்செருவினீயும்
அன்பினையுயிருக்காகி யடைக்கலம்யானுமென்பாய்
என்பதுகருதியண்ணன் மறைந்துநின்றெய்ததென்றுன்.

118 கவிகுலத்தரசுமன்னன் கட்டுரைமனத்திற்கொண்டான்
அவியுறுமனத்தனுகி யறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலென்ப தெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறுகேள்விச்செல்வன் சென்னியினிறைஞ்சிச்சொன் [றுன்.

119 தாயெனவுயிர்க்குநல்கித் தருமமுந்தகையுஞ்சால்பும்
நீயெனநின்றநம்பி †நெறியினிறேக்குநோன்மை
நாயெனநின்றவெம்பா னவைய்றவுணரலாமே
தீயனபொறுத்தியென்றுன் சிறியனசிந்தியாதான்.

120 இரந்தனன்பின்னுமெந்தை யாவதுமெண்ணறேற்றுக்
குரங்கெனக்கருதிநாயேன் கூறியமனத்துக்கொள்ளேல்
அரந்தைவெம்பிறவிவெந்நோய்க் கருமருந்தனையவையா
வரந்தருவள்ளாலொன்று கேளெனமறித்துஞ்சொல்வான்

கலிவிருத்தம்.

121 ஏவுகூர்வாளியா லெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேலைவா யறிவுதந்தருளினுய்
மூவர்நீமுதல்வனீ முற்றுநீமற்றுநீ
பாவநீதருமநீ பகையுநீயுறவுநீ.

---

துருத் எனவும் பாடம். † நெடிதுயிர்நோக்குநேர்மை எனவும் பாடம்.

122 புரமெலாமெரிசெய்தோன் முதலினோர்பொருவிலா
வரமெலாமுருவியென் வசையிலாவலிமைசால்
உரமெலாமுருவியென் னுயிரெலாநுகருநின்
சரமலாற்பிறிதுவே றுளதரோதருமமே.

*　　　*　　　*

123 யாவரும்மெவையுமா யிருதுவும்பயனுமாய்ப
பூவுநல்வெறியுமொத்த தொருவரும்பொதுமையாய்
ஆவனீயாவதென் றறிவினாருளினார்
தாவரும்பதமெனக் கருமையோதனிமையோய்.

124 உண்டெனுந்தருமமே யுருவமாயுடையநிற்
கண்டுகொண்டனெனினிக் காணவெண்கடவெனோ
பண்டொடின்றளவுமே யென்பெரும்பழவினைத்
தண்டமேயடியனேற் குறுபதந்தருவதே.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

125 மற்றினியுதவியுண்டோ வானினுமுயர்ந்தமானக்
கொற்றவநின்னையென்னைக் கொல்லியகொணர்ந்துதொல்லைச்
சிற்றினக்குரங்கினோடுந் தெரிவுறச்செய்தசெய்கை
வெற்றரசெய்தியெம்பி வீட்டரசெனக்குவிட்டான.

126. ஓவியவுருவநாயே னுளதொன்றுபெறுவதுன்பால்
பூவியனறவமாந்திப் புந்திவேறுற்றபோது
தீவினையியற்றுமேனு மெம்பிமேற்சீறியென்மேல்
ஏவியபகழியென்னுங் கூற்றினையேவலென்றான்.

127 இன்னுமொன்றிரப்பதுண்டா லெம்பியையும்பிமார்கள்
தன்முனைக்கொல்வித்தானென் றிகழ்வரேற்றடுத்திதக்கோய்
முன்னமேமொழிந்தாயன்றே யிவன்குறைமுடிப்பதைய
பின்னிவன்வினையின்செய்கை யதனையும்பிழைக்கலாமோ.

128 மற்றிலெனெனினுமாய வரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டந்து குரக்கியற்றொழிலுங்காட்டப்
பெற்றிலென்கடந்தசொல்லிற் பயனிலைபிழைப்பதின்றி
யுற்றதுசெய்கென்றாலு முரியனிவ்வனுமனென்றான்.

129 அனுமனென்பவனையாழி யையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென் றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்றே ரனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிக்கோடி வானினுமுயர்ந்ததோளாய்.

130 என்றவற்கியம்பிப்பின்ன ரிருந்தனனிளவறன்னை
வன்றுணைந்தடக்கைநீட்டி வாங்கினன்றழுவிமைந்த
ஒன்றுனக்குரைப்பதுண்டா லுறுதியஃதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய் வருந்தலையென்றுகூறும்.

131 மறைகளுமுனிவர்யாரு மலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந் துணிபொருடுணிவிற்றாக்கி
அறைகழலிராமனாகி யறநெறிநிறுத்தவந்த
இறையொருசங்கையின்றி யெண்ணுதியெண்ணமிக்கோய்.

132 நிற்கின்றசெல்வம்வேண்டி நெறிநின்றவுயிர்களெல்லாம்
கற்கின்றதிவன்றனாமங் கருதுவதிவனைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய் பொதுநின்ற*தலைமைநோக்கின்
மற்கொன்றவலியேசாலு மிதற்கொன்றுமேதுவேண்டா.

133 கைதவமியற்றியாண்டுங் கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரும் வானுயர்நிலைமைவள்ளல்
எய்தவர்பெறுவரென்றா லிணையடியிறைஞ்சியேவல்
செய்தவர்பெறுவதையா செப்பலாஞ்சீர்மைத்தாமோ.

134 அருமையென்விதியினாலே யுதவுவானமைந்தகாலை
இருமையுமெய்தினாய்மற் றினிச்செயற்பாலதெண்ணின்
திருமறுமார்பனேவல் சென்னியிற்சேர்த்திச்சிந்தை
ஒருமையினிறுவிமும்மை யுலகினுமுயர்தியன்றே.

135 மதவியற்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ளல்
உதவியையுன்னியாவி யுற்றிடத்துதவுகிற்றி
பதவியையெவர்க்குநல்கும் பண்ணவன்பணித்தயாவும்
சிதைவிலசெய்துநொய்திற் றீர்வரும்பிறவிதீர்தி.

---

* நிலைமை எனவும் பாடம்.

136 அரசியற்பாரம்பூரித் தயர்ந்தனையிகழாதையன்
மரைமலர்ப்பாதநீங்கா வாழுதிமன்னரென்பார்
எரியனற்குரியாரென்றே யெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம் பொறுப்பரென்றெண்ணவேண்டா.

137 என்னவித்தகையவாய வுறுதிகள்யாவுமேங்கும்
பின்னவற்கியம்பிநின்ற பேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்த மற்றிவன்சுற்றத்தோடும்
உன்னடைக்கலமென்றுய்த்தே யுயர்கரமுச்சிவைத்தான்.

138 வைத்தபின்னுரிமைத்தம்பி மாமுகநோக்கிவல்லே
உய்த்தனைகொணர்தியுன்ற னோங்கருமகனையென்ன
அத்தலையவனையேவி யழைத்தலினணைந்தானென்ப
மைத்தலத்துவரிநீரைக் கலக்கினுன்பயந்தகாளை.

139 சுடருடைமதியமென்னத் தோன்றினன்றோன்றியாண்டும்
இடருடையுள்ளத்தோரை யெண்ணினுமுணர்ந்திலாதான்
மடலுடைநறுமென்சேக்கை மலரின்றியுதிரவாரிக்
கடலிடைக்கிடந்தகாதற் றுதையைக்கண்ணிற்கண்டான்.

140 கண்டகண்கனலுநீருங் குருதியுங்காலமாலைக்
குண்டலமலம்புகின்ற குவவுத்தோட்குரிசிறிங்கண்
மண்டலமுலகின்வந்து கிடந்ததம்மதியின்மீதா
விண்டலிந்தன்னினின்றோர் மீன்விழுந்தென்னவீழ்ந்தான்.

141 எந்தையேயெந்தையேயிவ் வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர் தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்க நின்முகநோக்கிக்*கூற்றம்
வந்ததேயன்றோவஞ்சா தியாரதன்வலியைத்தீர்ப்பார்.

142 தறையடித்ததுபோற்றீராத் தகையவித்திசைகடாங்கும்
கறையடிக்கழிவுசெய்த கண்டகனெஞ்சமுன்றன்
நிறையடிக்கோலவாலி னிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றவந்தப் பயமறப்பறந்ததன்றே.

---

* கூற்றம்
வந்ததேயன்றோவஞ்சா தியாவாதம்விதியைவெல்வார் எனவும் பாடம்.

43 குலவரைநேமிக்குன்ற மென்றுவானுயர்ந்தகோட்டின்
தலைகளுநின்பொற்றாளிற் றழும்பினித்தவிர்ந்தவன்றே
*மலையுடனரவுமற்று மதியமும்பலவுந்தாங்கி
அலைகடல்கடையவேண்டி ஞாரினிக்கடைவரையா.

44 பஞ்சின்மெல்லடியாள்பாகன் † பதயுகமல்லதியாவும்
அஞ்சலித்தறியாச்செங்கை யாணையாயமரர்யாரும்
எஞ்சலிருந்தாருண்ண வின்னமுதீந்தநீயோ
அஞ்சினைவள்ளியோர்க ணின்னினியார்சொல்லற்பாலார்.

45 ஆயனபலவும்பன்னி யழுங்கினன்புழுங்கி ‡ நோக்கத்
தீயுறுமெழுகிற்சிந்தை யலம்வருஞ்செங்கண்வாலி
நீயினியயர்வாயல்லை யென்றுதன்னெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்த நல்வினைப்பயனீதென்றான்.

146 தோன்றலும்பிறத்தலுன்றுந் துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்தினோர்க்கு மூலத்தேமுடிந்தவன்றே
யான்றவமுடைமையாலிவ் விறுதிவந்திசைந்ததியார்க்கும்
சான்றெனநின்றவீரன் றான்வந்துவீடுதந்தான்.

147 பாலமைதவிர்நீயென்சொற் பற்றுதியாயிற்றன்னின்
மேலொருபொருளுமில்லா மெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்று கட்புலக்குற்றதம்மா
மால்தரும்பிறவிநோய்க்கு மருந்திவன்வணங்குமைந்த.

148 என்னுயிர்க்கிறுதிசெய்தா னென்பதையிறையுமெண்ணு
துன்னுயிர்க்குறுதிசெய்தி யிவற்கமருற்றதுண்டேல்
பொன்னுயிர்த்தொளிரும்பூணாய் போதுநிலைமைநோக்கி
மன்னுயிர்க்குறுதிசெய்வான் மலரடிசுமந்துவாழ்தி.

149 என்றனனினையவாய வுறுதிகள்யாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாரத் தனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட் குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றிணிவயிரப்பைம்பூட் புரவலன்றன்னைநோக்கி.

---

* மலைமகளரவுமற்றும் பலவுளமத்துந்தாம்பும் எனவும் பாடம்.

† பாதகமல்லயாவும்.

‡ நோக்கித்
தீயுறுமெழுகிற்சிந்தை யுருகினன்செங்கண்வாலி எனவும் பாடம்.

150 நெய்யடைநெடுவேற்றானை நீனிறநிருதரென்னும்
துய்யடைகனலியன்ன தோளினன்றொழிலுந்தூயன்
பொய்யடையுள்ளத்தார்க்குப் புலப்படாப்புலவமற்றுன்
கையடையாகுமென்றவ் விராமற்குக்காட்டுங்காலை.

151 தன்னடிதாழ்தலோடுந் தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டி நீயிதுபொறுத்தியென்றான்
என்னலுமுலகமேழு மேத்தினவிறந்துவாலி
அந்நிலைதுறந்துவானுக் கப்புறத்துலகனானான்.

152 கையவனெகிழ்த்தலோடுங் கடுங்கணைகாலவாலி
வெய்யமார்பகத்துட்டங்கா துருவிமேக்குயரமீப்போய்த்
துய்யநீர்க்கடலுட்டோய்ந்து தூய்மலரமரர்சூட்ட
ஐயன்வெங்விடாதகொற்றத் தாவம்வந்தடைந்ததன்றே.

5-வது. வாலிவதைப்படலம்முற்றிற்று ஆக திருவிருத்தம் 153-ல் 152



## 6-வது. அரசியற்படலம்.



அஃதாவது சுக்கிரீவனது அரசாட்சியின் இயல்பைக்கூறுவது.

இப்படலத்தில் தாரை தன் கணவன் வாலி மரித்த செய்தியை உணர்ந்து வந்து அவன்மேல்விழுந்து, என்னைப் பகையாத தன்மையுடையானே! நீ பட்டதைக்கண்டும் உயிர்மாயாத என்னையும் இனி நட்புக்கொள்வாயோ? தெய்வமே! உயிர்நீங்கினால் உடல் தனித்துப்பிழைக்குமோ? நினது நெஞ்சில் நானிருந்தது மெய்ம்மையாயின் பகைவருடைய அம்பு என்னுயிரையும் வாங்கவேண்டும்; தமியேனுடைய நெஞ்சில் நீயிருந்தது மெய்ம்மையாயின் நீ உயிர்பிழைத்திருக்கவேண்டும். இப்படியில்லாமையால் நாம் இருவரும் ஒருவருள்ளத்தில் ஒருவர் இருந்திலோம் என்று புலம்பி அழ, அநுமான் அவளை அரண்மனைக்கு அழைத்துப்போம்படி தோழியர்களுக்குக் கட்டளையிட்டு, நடந்தசெய்தியை ஸ்ரீராமருக்கு விண்ணப்பஞ் செய்தனர். அதுகாலையில் வாலியினுடைய முகம்போல ஒளிகுறைந்து சிவந்து சூரியன் அஸ்தமித்தான். கருணைவள்ளலாகிய ஸ்ரீராமர் சீதாபிராட்டியாருடைய தனிமையைக் கருதித் துன்பமுற்று அன்றிராவாகிய கடலை நீந்தினார். கதிரவன் தன் குமாரனாகிய சுக்கிரீவன் முடிசூடும் நாளாதலால் திருமகன் அவனைச்சேரும்படி செந்தாமரையின் இதழ்க்கதவுகளைத் திறக்கவந்தவன்போலச் சிவந்தகரங்களை நீட்டிக்கொண்டு உதித்தனன். கருணைவள்

ளலானவர் திருத்தம்பியைநோக்கி, இற்றைத்தினஞ் சுக்கிரீவனுக்கு விதி முறைப்படி முடிதரிப்பியெனக் கட்டளையிட்டருள, அவ்வண்ணமே ஆகுக என்று, மாருதியைக்கொண்டு கங்கைநீர்முதலிய தீர்த்தங்களையும், மலர், மாவிலைமுதலிய மங்கலப்பொருள்களையும் வருவித்துச், சுக்கிரீவனைச் சிங்காதனத்திலேற்றி, வானவர் பூமழைபொழிய, அந்தணர் ஆசிவழங்க, நல்ல முகூர்த்தத்தில் முடிசூட்டினர். முடிசூடப்பெற்றுச் சூரியபுத்திரன்சென்று தண்டமிடப் பெருமான் எடுத்து மார்போடு அணைத்துப் பக்கத்தில் இருக்கச் செய்து, மந்திரத்தலைவரோடும், படைத்தலைவரோடுந் தூய்மையாகிய நட்புப் பாராட்டி, மிக்க நெருக்கமும் நெருக்கமின்மையுமாயிராமல், உலகநடையை ஒட்டிநடந்து, பகைவரிடத்தும் முகமலர்ந்து இனிதுபேசி, நம் அரசன் நல்லன், நம்மைத் தாய்காப்பதுபோலக் காக்குமியல்புடையானென்று குடிகள் சொல்லும்படி பாதுகாத்து, அங்கதனை இளவரசாக்கி அரசுபுரிக. இனி வரும் மாரிகாலமாகிய ஆவணிமுதலிய நான்குமாதம் கழிந்தபின் நினது சேனையோடு என்னிடம்வருகவென அநுஞ்ஞைசெய்தருள, வானரவரசன் நின்னிற்பிரிந்து யான் அடையுஞ்செல்வம் வறுமையுளொன்றே ஆம். எம் ஐயனே! நீயும் அங்கெழுந்தருள்வீரென இரந்துகேட்டகாலையில் விரதம் பூண்டவர்க்கு நகரவாசம் தக்கதன்றென்று மறுத்துரைக்கலாயினர். உடனே அநுமான் வந்து தண்டமிட்டுநின்று, அடியேனலியன்றமட்டில் குற்றேவல் செய்துகொண்டு இங்கிருப்பேனென்று விண்ணப்பஞ்செய்துகொள்ளலும், எம் ஆளுடையான் புதிது அரசாளுதலால் அதனில் நன்மையும் தீமையும் உண்டாம். நின்னை ஒத்த அறிவாளன் அங்கிருத்தல்வேண்டும். நீ அங்குச் செல்க என நியமித்து, எம்பெருமான் வைதிகமுனிவராகிய மதங்கமுனிவருடைய ஆச்சிரமத்தினருகே ஒருபுறத்தில் இளையபெருமானால் சமைக்கப்பட்ட தழைக் குடிசையில் வீற்றிருந்தனரென்பது உணர்த்தப்படும்.

---

1 வாலியுமேகினன்விண் வரம்பிலாவாற்றலோடும்
பாலியாமுன்னர்நின்ற பரிதிசேய்செங்கைபற்றி
ஆலிலைப்பள்ளியானு மங்கதனோடுநிற்ப
வேல்விழித்தாரைகேட்டாள் வந்தவன்*மேனிவீழ்ந்தாள்.

2 குங்குமங்கோட்டியென்ன குவிமுலைக்குவட்டிற்கோத்த
பொங்குவெங்குருதிபோர்ப்பப் புரிகுழல்சிவப்பப்பொற்றோள்
அங்கவனலங்கன்மார்பிற் புரண்டனளகன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன்று மின்னெனத்துவளுமெய்யாள்.

3 வேய்ங்குழல்விளரிநல்யாழ் வீணையென்றினையநாண
ஏங்கினளிரங்கிவிம்மி யுருகினளிருகைகூப்பித்
தாங்கினடலையிற்சோர்ந்து சரிந்துதாழ்குழல்கடள்ளி
ஓங்கியகுரலாற்பன்னி யினையனவுரைக்கலுற்றாள்.

---

* மேவில் எனவும் பாடம்.

4 வரைசேர்தோளிடை நாளும்வருவேன்
கரைசேராவிடர் வேலைகாண்கலேன்
உரைசேராருயி ரேயென்னுள்ளமே
அரசேயானிது காணவஞ்சினேன்.

5 துயராலேதொலை யாதவென்னையும்
பயிராயோபகை யாதபண்பினோய்
செயிர்தீராய்விதி யானதெய்வமே
உயிர்போனாலுட லாருமுய்வரோ.

6 நறிதாநல்லமிழ் துண்ணநல்கலின்
பிறியாவின்னுயிர் பெற்றபெற்றிதாம்
அறியாரோநம னாதன்றெனின்
சிறியாரோவுப காரஞ்சிந்தியார்.

7 அணங்கோர்பாகனை யாசைநோறுமுற்
றுணங்காவொண்மலர் கொண்டுள்ளன்பொடும்
இணங்காக்காலமி ரண்டோடொன்றினும்
வணங்காதித்துணை வைகவல்லையோ.

8 அரைசேபூவணை யாடைவைகுவாய்
தரைமேலாயுறு தன்மையீதென
கரைவேனின்றிடு பூசல்கண்டுமோன்
றுரையாயென்வயி னானம்யாவதோ.

9 நையாநின்றனெ னானிருந்திங்ஙன்
மெய்வானோர்திரு நாடுமேவினாய்
ஐயாநீயென தாவியென்பதும்
பொய்யோபொய்யுரை யாதபுண்ணியா.

10 செருவார்தோளநின் சிந்தையேனெனின்
மருவார்வெஞ்சர மென்னையும்வவ்வுமால்
ஒருவேனுள்ளுனை யாகினுய்தியால்
இருவேமுள்ளிரு வேமிருந்திலேம்.

11 எந்தாய்நீயுயிர் தீயயாமெலாம்
உய்ந்தேமென்றுப காரமுன்னுவார்
நந்தாநாண்மலர் சிந்திநண்பொடு
வந்தாரோவெதிர் வானுள்ளோரெலாம்.

12 ஓயாவாளியொ ளித்துநின்றெய்வான்
ஏயாவந்தவி ராமனென்றுளான்
வாயாலேயின னென்னின்வாழ்வெலாம்
ஈயாயோவுயிர் தேயுமீகுவாய்.

13 சொற்றேன்முந்துற வன்னசொற்கொளாய்
அற்றானன்னது செய்கலானென
உற்றாயும்பியை யூழிகாணுநீ
இற்றாய்நானுனை யென்றுகாண்பனே.

14 நீறாமேருவு நீநெருக்கினால்
மாறோர்வாளியுன் மார்பையீர்வதோ
தேறேன்யானிது தேவர்மாயமோ
வேறோர்வாலிகொ லாம்விளிந்துளான்.

15 தகைநேர்வண்புகழ் நின்றுதம்பியார்
பகைநேர்வாருள ராயபண்பினால்
உகநேர்சிந்தியு லந்தழிந்ததால்
மகனேகண்டிலை யோநம்வாழ்வெலாம்.

16 அருள்வந்தற்றம கற்றும்வில்லியார்
ஒருமைந்தற்கும டாததுன்னினார்
தருமம்பற்றிய தக்கவர்க்கெலாம்
கருமங்கட்டளை யென்றல்கட்டதோ.

17 என்றாளின்னன பன்னியின்னலோ
டொன்றாவுள்ளுணர் வேதுமுற்றிலள்
நின்றாளங்கிலை நோக்கிநீதிசால்
வன்றோண்மால்வரை யன்னமாருதி.

18 மடவாராலம் மடந்தைமுன்னர்வாழ்
இடமேவும்படி யேவிவாலிபால்
கடன்யாவுங்கடை கண்டுகண்ணனோ
டுடனுவுற்றவெ லாமுணர்த்தலும்.

19 அகம்வேறாக வீசருக்கனூர்
புகுமேலைக்கிரி புக்கபோழ்தினின்
நகமேயொத்தகு ரக்குநாயகன்
முகமேயொத்தது மூரிமண்டிலம்.

20 மறைந்தான்மாலைய ருக்கன்வள்ளியோன்
உறைந்தான்மங்கைதி றத்தையுன்னுவான்
குறைந்தானெஞ்சுகு றைந்தழுங்குவான்
நிறைந்தார்கங்குலின் வேலைநீந்தினான்.

21 புதல்வன்பொன்மகு டம்பொறுக்கலான்
முதல்வன்பேருவ கைக்குமுந்துவான்
உதவும்பூமகள் சேரவொண்மலர்க்
கதவஞ்செய்யக ரத்தினீக்கினான்.

22 அதுகாலத்தி லருட்குநாயகன்
மதிசாறம்பியை வல்லையேவினான்
கதிரோன்மைந்தனை யையகைகளான்
விதியான்மௌலிமி லைச்சுவாயென.

23 அப்போதேயரு ளின்றவண்ணலும்
மெய்ப்போர்மாருதி தன்னைவீரநீ
இப்போதேகொண ரின்னசெய்வினைக்
கொப்பாம்யாவையு மென்றுணர்த்தலும்.

24 மண்ணுங்கீர்முதன் மங்கலங்களும்
எண்ணும்பொன்முடி யாதும்யாவையும்
நண்ணும்வேலையி னம்பிதம்பியும்
திண்ணஞ்செய்வன செய்துசெம்மலே.

25 மறையோராசிவ முங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர் தூவநன்னெறிக்
கிறையோன்றன்னிளை யோனவ்வேந்தலைத்
துறையோர்நூன்முறை மௌலிசூட்டினான்.

26 பொன்மாமௌலிபு னைந்துபொய்யிலான்
தன்மானக்கழ றாழும்வேலையின்
நன்மார்பிற்றழு வுற்றநாயகன்
சொன்னான்முற்றிய சொல்லினெல்லையான்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

27 ஈண்டுநின்றேகிநீநின் னியல்பமையிருக்கையெய்தி
வேண்டுவமாபினெண்ணி விதிமுறையியற்றிவீர
பூண்டபேரரசுக்கேற்ற யாவையும்புரிந்துபோரின்
மாண்டவன்மைந்தனோடும் வாழ்திநற்றிருவின்வைகி.

28 வாய்மைசாலறிவின்வாய்ந்த மந்திரமாந்தரோடும்
தீமைதீரொழுக்கின்வந்த திறத்தொழின்மறவரோடும்
தூய்மைசால்புணர்ச்சிபேணித் துகளறுதொழிலையாகிச்
சேய்மையோடணிமையின்றித் தேவரிற்றெரியநிற்றி.

29 புகையுடைத்தென்னினுண்டு பொங்கனலங்கென்றுன்னும்
மிகையுடைத்துலகநூலோர் வினையமும்வேண்டற்பாற்றே
பகையுடைச்சிந்தையார்க்கும் பயனுறுபண்பிற்றீரா
நகையுடைமுகத்தையாகி யின்னுரைநல்குநாவால்.

30 தேவரும்வெஃகற்கொத்த செயிரறுசெல்வமஃதுன்
காவலுக்குரியதென்று லன்னதுகருதிக்காண்டி
ஏவருமினியநண்ப ரயலவர்விரவாரென்று
மூவகையியலோராவர் முனிவர்க்குமுலகமூன்றின்.

31 செய்வனசெய்தல்யாண்டுந் தீயனசிந்தியாமல்
வைவனவந்தபோதும் வசையிலவினியகூறல்
மெய்சொலல்வழங்கல்யாவு மேவினவெஃகலின்மை
உய்வனவாக்கித்தம்மோ டுயர்வனவுவந்துசெய்வாய்.

32 சிறியரென்றிகழ்ந்துநோவு செய்வனசெய்யன்முற்றும்
நெறியிகந்தியானோர்தீமை யிழைத்தலாலுணர்ச்சிநீண்டு
குறியதாமேனியாய கூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்தின் வெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன்.

33 மங்கையர்பொருட்டாலெய்து மாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலி செய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்தினானே யல்லலும்பழியுமாதல்
எங்களிற்காண்டியன்றே யிதனின்வேறுறுதியுண்டோ.

34 நாயகனல்லனம்மை நனிபயந்தெடுத்துநல்கும்
தாயெனவினிதுபேணித் தாங்குதிதாங்குவாரை
ஆயதுதன்மையேனு *மறம்வரம்பிகவாவண்ணம்
தீயனவந்தபோது சுடுதியாற்றீமையோரை.

35 இறத்தலும்பிறத்தறானு மென்பனவிரண்டும் யாண்டும்
திறத்துளிநோக்கிற்செய்த வினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னே பூவின்மேற்புனிதற்கேனும்
அறத்தினதிறுதிவாழ்நாட் கிறுதியஃதுறுதியென்ப.

36 ஆக்கமுங்கேடுந்தாஞ்செ யறத்தொடுபாவமாய
போக்கிவேறுண்மைதேறார் பொருவரும்புலமைநூலோர்
தாக்கினவொன்றோடொன்று தருக்குறுஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமன்றியொன்றும் பாவத்தைப்பற்றலாமோ.

37 இன்னதுதகைமையென்ப வியல்புளிமரபினெண்ணி
மன்னரசியற்றியென்கண் வருவழிமாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன் பெருங்கடற்சேனையோடும்
துன்னுதிபோதியென்றான் சுந்தரனவனுஞ்சொல்வான்.

38 குரங்குறையிருக்கையென்னுங் குற்றமேருற்றமல்லால்
அரங்குறுதுறக்கநாட்டுக் காசெனலாயதன்றே
மரங்கிளரருவிக்குன்றம் வள்ளனீமனத்தினெம்மை
இரங்கியபணியாஞ்செய்ய விருத்தியாற்சின்னாளைப்பால்.

* மறவரம் எனவும் பாடம்.

39 அரிந்தமநின்னையன்மி யருளுக்குமுரியேமாகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம் வெறுமையிற்பிறிதொன்றாமால்
கருநதடங்கண்ணினாளை நாடலாங்காலங்காறும்
இருந்தருடருதியெம்மோ டென்றடியிணையின்வீழ்ந்தான்.

40 ஏந்தலுமிதனைக்கேளா வின்னிளமுறுவனாற
வேந்தமையிருக்கையெம்போல் விரதியர்விழைதற்கொவ்வா
போந்தவணிருப்பினெம்மைப் போற்றவேபொழுதுபோமால்
தேர்ந்தினிதியற்றுமுன்ற னரசியற்றருமந்நீதி.

41 ஏழிரண்டாண்டியான்போய் நெறிவனத்திருக்கவென்றேன்
வாழியாயரசாவைகும் வளநகர்வைகலொல்லேன்
பாழியந்தடந்தோளவீர பாரதிலைபோலுமன்றே
யாழிசைமொழியோடன்றி யானுறையின்பமென்னோ.

42 தேவிவேறரக்கன்வைகத சேமத்துளிருப்பத்தான்றன்
ஆவிபோறுணைவரோடு மளவிடற்கரியவின்பம்
மேவினானிராமனென்றா லையவிவ்வெய்யமாற்றம்
மூவகையுலகமுற்றுங் காலத்துமுற்றவற்றோ.

43 இல்லறந்துறந்திலாதோ ரியற்கையையிழந்துபோரின்
வில்லறந்துறந்துவாழ்வேற் கின்னனமேன்மையில்லாச்
சில்லறம்புரிந்துநின்ற தீமைகடருமாறு
நல்லறந்தொடர்ந்தநோன்பி னவையறநோற்பலென்றான்.

44 அரசியற்குரியயாவு மாற்றுழியாற்றியான்ற
திரைசெயற்குரியசேனைக் கடலொடுந்திங்கணான்கின்
விரசுகவென்பானின்னை வேண்டினென்வீரவென்றான்
உரைசெயற்கெளிதுமாகி யரிதுமாமொழு*கின்றான்.

45 மறித்தொருமாற்றங்கூறான் வானுயர்கொற்றத்தன்னான்
குறிப்பறிந்தொழுகன்மாதோ கோதிலாதலென்னா
நெறிப்படர்கண்கள்பொங்கி நீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்னாக் கவிக்குலத்தரசன்போனான்.

---

* ககினி எனவும் பாடம்.

46 வாலிகாதலனுமாண்டு மலரடிவணங்கினானை
நீலமாமேகமன்ன நெடியவனருளினோக்கிச்
சீலநீயுடையையாத லிவன்சிறுதாதையென்று
மூலமேதந்தநுந்தை யாமெனமுறையினிற்றி.

47 என்னமற்றினையகூறி யேகவற்றொடரவென்றான்
பொன்னடிவணங்கிமற்றப் புகழுடைக்குரிசில்போனான்
பின்னர்மாருதியைநோக்கிப் பேரெழில்வீரநீயும்
அன்னவனரசுக்கேற்ற தாற்றுதியறிவினென்றான்.

48 பொய்த்தலிலுள்ளத்தன்பு பொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநாயே னேயினவெனக்குத்தக்க
கைத்தொழில்செய்வெனென்று கழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின்றவீர னிவ்வுரைவிளம்புகின்றான்.

49 நிரம்பினாளொருவன்காத்த நிறையாசிறுதிநின்ற
வரம்பிலாததனைமற்றோர் தலைமகன்வலிதிற்கொண்டால்
அரும்புவாலனுந்தீங்கு மாகலிலையாநின்போல்
பெரும்பொறையறிவினோரா னிலையிலைப்பெறுவதம்மா.

50 ஆன்றவற்குரியதாய வாசினைநிறுவியப்பால்
ஏன்றெனக்குரியதாய கருமமுமியற்றற்கொத்த
சான்றவாநின்னினில்லை யாகலாற்றருமந்தானே
போன்றநீயானேவேண்ட வத்தலைபோதியென்றான்.

51 ஆழியானனையகூற வானையிதாகினஃதே
*வாழியான்புரிவெனென்று வணங்கிமாருதியும்போனான்
சூழிமால்யானையன்ன தம்பியுந்†தாரனுந்தொல்லை
ஊழிநாயகனும்வேறே றுயர்தடங்குன்றமுற்றார்.

52 ஆரியனருளிற்போயவ் வகன்மலையகத்தனைய
சூரியன்மகனுமானத் துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்று டாயெனத்தந்தைமுந்தைச்
சீரியன்சொல்லேயென்னச் செவ்விதினரசுசெய்தான்.

* வாழியாய் எனவும் பாடம். † தாரை என்றும் பாடம்.

53 வளவரசெய்திமற்றை வானரவீரர்யாரும்
கிளைஞரினுதவவாணை கிளர்திசையளப்பக்கேளோ
டளவிலவாற்றலாண்மை யங்கத*னறங்கொள்செல்வத்
திளவரசியற்றவேவி யினிதினினிருந்தானிப்பால்.

54 வள்ளலுமவணின்றேகி மதங்கனதிருக்கையாய
வெள்ளவான்குடுமிக்குன்றத் தொருசிறைமேவிமெய்ம்மை
அள்ளூறுகாதற்றம்பி யன்பினுலமைக்கப்பட்ட
எள்ளலில்சாலையெய்தி யினிதினினிருந்தகாலை.

6–வது. அரசியற்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 51.



## 7–வது. சரற்காலப்படலம்.



என்பது மழைகால வருணனையைக் கூறுவது.

இப்படலத்தில் பரந்தாமராகிய ஸ்ரீராமபிரான் சித்திரப்பிரதிமைபோல ஒளியமைந்து அழகுநிரம்பிய தமது தேவியாரிடத்து ஏவிய தூதுவன்போலக் கதிரவன் வடதிசையினின்று தென்றிசைக்கண் சென்றனன். சென்றகாலையில் வலியுள்ள பூமியாகிய தகழியில் கடலினீராகிய நெய்யில் மேருமலையாகிய திரியில் சூரியனாகிய சுடர்பபிழம்பில் எடுத்த மைபோலக் கார்மேகங்களால் வானமெங்கும் படியப்பட்டது. பாற்கடலிற் பிறந்த விஷத்தைவிழுங்கிய சிவனது கண்டத்தைப்போல ஆகாயம் கறுத்துத் தோன்றியது. சூரியனுடைய வெப்பமாகிய கதிர்கள் குளிர்ந்தன. வெள்ளியமேகங்கள் சூல்கொண்டன. விஷத்தைப்போலவும், பெரிய கருங்கடலைபபோலவும், மாதர்களுடைய மையெழுதிய கண்ணையும், அவிழ்ந்த கூந்தலையும்போலவும், வஞ்சகமுடைய அரக்கர்களது உருவத்தினையும், அவர்களது தொழிலையும் மனத்தையும்போலவும், நீலநிறந்தங்கிய வானம் இருண்டது. பலநாளாகக் குளிர்ந்த கடலினீரை விருப்பத்தோடு தம் நாவினாலுண்ட மேகங்கள் மின்னுகின்ற மின்னல்கள், இன்னார் வீசிய வாளென வேற்றுமையுணரப்படாத போர்க்களத்தில் ஒழுகுகின்ற மதநீரையுடைய யானைகள் அவ்வாள்களினால் புண்படுவனபோலத் தோன்றும். கருநிறமாகிய பெரியயானையை நிரைத்துவைத்தாற்போலக் கருப்பங்கொண்ட மேகங்கள் நிறைந்து, பெரிய கருங்கடலினீரை வலிமைமிகுந்த வானத்தின்கண் வைத்துளதுபோலப் பேரோசைமிகுந்தன. மின்னல்கள், ஹரியென்னும் பெரும்பெயரையுடைய திருமால் முதலிய கடவுளருடைய கௌஸ்துவாதி ஆபரணங்களை விரித்தாற்போலவும், மலைகளின்மேல் உலைத்துருத்தியால் தீயை எரித்தாற்போலவும், புறங்கூற லில்லாத திக்குகளெல்லாம் ஒன்றனை ஒன்றுகண்டு சிரித்தாற்போலவும்

* அறங்கள் எனவும் பாடம்.

விளங்கின. மேலும் வடதிசையாகிய கருமான் கரியபொருள்கள் யாவற்றிலும் கறுத்த மேகமாகிய கரிக்குவியலில் வாடைக்காற்றாகிய துருத்திக்கருவியை அமைத்து ஊதுகின்ற தீ எழுகின்ற உலைக்களத்தையும் ஒத்தன. தலைவனைப்பிரிந்து வசிக்கின்றமாதர்களும், பிலத்திலுள்ள பாம்புகளும் வெதும்பி உயிர்நடுங்கும்படி சூரிய கிரணங்களைப்போலவும், இடிகளினுடைய நாவுகளைப்போலவும் நெடிய திக்குகளில் மின்னல்கள் விரிந்தன. இரத்தினமுடிகளணிந்த வித்தியாதரர்கள் ஆகாயத்தில்செய்யும் போரில் உறையினின்று வாங்கிய வாள்களும், திக்குப்பாலகர்களாகிய யானைவீரர்கள் இடம்விட்டுச் செல்லும்தோறும் நடக்கின்ற திக்குயானைகளினது நெற்றிப்பட்டங்களும் விட்டுவிட்டு ஒளிசெய்வனபோல மின்னல்கள் தோன்றின. எட்டுதிக்குகளிலுள்ள வாசுகிமுதலிய எண்வகை நாகங்களும் பலமுறை நாவைநீட்டி வளைப்பனபோல மின்னல்கள் விளங்கவும், ஸ்ரீராமபிரானுடைய திருவுருப்போல வானம் கறுக்கவும், எம்பெருமாட்டியாரை எண்ணியெண்ணிவிடுகின்ற பெருமூச்சுப்போல ஊதைவீசவும், இரைநதெழுகின்ற தூகள் ஆகாயத்தை அடைதலாலும், கூரியனவாய் வீசுகின்ற வாள்களைபபோல மின்னல்கள் உலாவுதலாலும், பெரிய போர்முரசுகள்போலக் கார்மேகங்கள் வன்மையாக முழங்கலாலும், போர்க்களம்போல ஆகாயம் விளங்கியது. இனிய பற்களையுடைய பிராட்டியாரைப் பிரிந்த தெய்வநாயகன்மேல் மன்மதன் பூங்கணைகளை வழங்குகின்றான்போல, பெரிய பொன்மலையின்மேல் மின்னல் எறிகின்ற மேகங்கள் தாரைகளைப் பொழிந்தன. பொன்மலையின்மேல் விழுகின்ற நீர்த்தூறல்களால் சிதறுகின்ற செம்மணிகள் பகற்காலத்தில் சூரியகாந்தம வீசும் தீப்போன்று, விழுகின்ற இடியிற்பிறந்த தீப்போலத் தோன்றின. போர்வீரர்கள் பகைவருடைய வலிய யானைகளின்மேல் வெள்ளியினாற்செய்த கணைகளை எய்வனபோல மேகங்கள் பொழிகின்ற வெள்ளியதாரைகள் படுகின்ற கருமலைகள் நிலைகெட்டுச்சாய்ந்து, அங்குசத்தின் முனைபட்டு முகத்தில் புள்ளிகள்வாய்ந்த அவ்யானைகள் புரள்வனபோல் புரண்டன. மேகமாகிய காமன் வானவில்லாகிய கரும்புவில்லை வளைத்து எய்யும மலரம்புகள்போல வீழ்கின்ற துளிகள் துணைவரைப் பிரிந்தவர்களுக்கு உடம்பில் தைத்துருவுவனபோல இருந்தன. தூயோனாகிய ஸ்ரீராமபிரானும், வானரர்களும் ஒன்றிக்கூடி நம் பகைவர்களை ஒழித்தார்களென்று துணிந்துபேசி, மகிழ்ந்திமையோர் பூமழை சொரிந்தாற்போல மேகங்கள் முழங்கித் துளிந்த துளிவெள்ளம ஆர்த்தன. இவைபோன்ற பற்பல நடக்கின்ற கார்காலத்தில் ராகவபிரான் மேகத்தை நோக்கி, ஜானகியாரைபபிரிந்த பிரிவால் துயருழந்து, வெம்மைமிகுந்த மின்னல்களாகிய வளைபற்களையுடையாய், ஆகாயத்தில் எப்புறத்திலும் கறுத்து எழுகின்றாய். பாதகத்துக்குரிய வஞ்சனைத்தொழிலைச் செய்கின்ற அரக்கர்களை ஒப்பாய். ஆகையால் என்னுயிரை வாங்கியல்லாமல் நீங்கிப்போகாயோ? நீங்காதுள்ள என் உயிரே! பாடகமணிந்துள்ள பாதங்கள் பஞ்சுபோன்ற ஜானகியார் நின்பால் சிறிதுகுற்றமுமில்லார், அவர்பால் நீங்குகின்றாயோ? அவரிடத்து ஐயமில்லாமல் அவரோடு பிரியாமல் நீங்குவாயல்லாயோ? அழிவாய், நீவிர் இருவீரும் செய்துள்ள உறவாம் தன்மையை உணர்கின்றிலையோ? என்று புலம்பி நைகின்ற ஊழிமுதல்வனாகிய ஸ்ரீராமபிரானை இளையபெருமாள் கைகூப்பி நோக்கி, நீளுந்தன்மையதாகிய துளிக்கின்ற மாரிகாலமும் வந்ததென்னும் கவலையினாலோ? கறுத்தமேனியையுடைய அரக்கரது வீரத்தைக் கருதிய துன்பத்தினாலோ? பிராட்டியார் சிலற

கிடக்கின்ற இடத்தைத் தேடும்படி வாலியினது சேனை வராமையினாலோ? நிறைந்த தூய உணர்வையும், கேள்வியையும் உடைய வீரனே! திருவுளங் கலங்குவது யாது? அறங்களுக்குத் தலைவனே! வேதங்கள் கலங்கினும், சந்திரசூரியர்கள் கலங்கினும், ஆழமாகிய கடலும் பூமியும் நிலைகலங்கினும், இயற்கை கலங்குகின்ற நிலை நின்னிடத்து நிலைக்குமோ? பிறைச்சந்திரர்கள் அசைகின்றனபோன்ற பெரும்பற்களையுடைய பேதையர்களாகிய அரக்கர்களது பெருமை சிறிது துடிப்பதாகிய நினது புருவமென்னும் வில் சற்றுத் துடித்தால் நிலைக்குமா? தண்டகக்காட்டில் பரம வைதிகமுனிவர் நின்னடைக்கலம் யாங்களென்ன, அரக்கர்களைச் சந்ததியோடு அழித்து, உங்கள் துன்பங்களைக் களைவேனென்று திருவாய் மலர்ந்தருளினாய். அந்தக் குறையும் அரக்கருடைய ஊழினால் முடிந்தது என்றுசொல்லி முடிக்கையில், ஸ்ரீராமபிரான் சற்றுத் தெளிந்தகாலை முதற்பெயலொழிந்து, பிற்பெயல் மாரி பிணியின்மேல் மற்றொரு பிணி நேர்ந்தாற்போலத் தொடங்கியதாக, நிறங்கருகிய இரவும்பகலும் தாம் நின்றநிலை நீங்காமல், அடர்ச்சியினால் தனித்தனி விளங்குதலில்லாமல் மலைபோலவும், பெருந்தவத்தினர்போலவும், உறங்காமல் ஒன்றையொன்றுவிட்டுப் பிரியாமல் அசைவற்று நின்றன யானைகள். குளிர்கொண்ட அன்னங்கள் மேடைகளில் சந்தனமரத்தினிலைகளாற்செய்த படல்களின்கீழ் வேடுவப்பெண்கள் குளிருக்காக எரிக்கின்ற அகிற்கட்டையின் புகையில் நுழைந்துவசிக்கும். மலைத்துவாரங்களில் பெண்குரங்குகள் தூங்கின; அவற்றின் வாயில்களில் வலியுள்ள ஆண்குரங்குகள் இந்திரியங்களை வெற்றிகொண்ட யோகிகளைப்போலக் கண்களை மூடிக்கொண்டு உடலசையாமலிருந்தன. இத்தன்மையதாகிய மாரிகாலத்தில் பிராட்டியாருடைய பிரிவால் ஸ்ரீராமபிரான் வேதனையுழந்து இலக்குமணனை நோக்கித் தம்பி! இங்கிருந்து அரக்கர்களுடைய இருப்பிடத்தைத் தேடுவதில் பலநாள்செல்லும்; ஆதலால் சீதையைத் தேடுவதென்பது வேண்டுவதன்று; விருப்பநோயின் வருத்தத்தினால் இறந்தேனென்பது பெருமையைத் தருவதாகும் என்றனர். அதுகேட்டுத் தம்பியார் பசும்பொன்வளையணிந்த எம் பெருமாட்டியார்க்குத் துன்பத்தைப் போக்குகின்றகாலம் வந்தடுத்தது. இனி வருந்தல்வேண்டாம் எனப் பலவகையாகச் சொல்லித் தேற்றினர். அப்போதுபின்பெயல் மாரி ஒழிந்தது. குறைதலில்லாத பெரியவள்ளல் இரவலர் கருதியபொருள்களைக் கொடுத்து இல்லாமையடைந்தபின்னர், அவ்வள்ளலுடைய தன்மையை உணர்ந்துவந்து ஏற்பவர்க்குக்கொடுக்க இயலாமையால் வெட்கிய அவரைப்போல் மேகங்கள் வெளுத்தன. சங்குகள் தாம்பெற்ற முத்துகள் அங்குள்ள வேடுவமாதர்களது பற்களுக்குத் தோற்றமையால் நாணி ஒளிப்பனபோலச் சேற்றில் புதைந்தன. தாமரையிலைகளின் கீழ் தங்கும் ஆண்ஞெண்டுகள் தம் பெடைகளோடு துவாரங்களில்சேர்ந்து உலுத்தர்போல வழியைச் சேற்றால் அடைத்து ஒடுங்கின. இவைபோன்ற வருணனை அடங்கியுளது.

கலிவிருத்தம்.

1 மாவியல்வடதிசை நின்றுவானவன்
ஓவியமேயென வொளிக்கவின்குலாம்
தேவியைநாடிய முந்தித்தென்றிசைக்
கேவியதாதென விரவியேகினான்.

2 பையணைப்பஃறலைப் பாந்தளேந்திய
மொய்ந்நிலத்தகளியின் முழங்குநீர்நெயின்
வெய்யவன்விளக்கமா மேருப்பொன்றிரி
மையெடுத்தொத்தது மழைத்தவானமே.

3 நண்ணுதலருங்கட னஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின் காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டது வெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்தன தழைத்தமேகமே.

4 நஞ்சினினளிர்நெடுங் கடலினங்கையர்
அஞ்சனநயனத்தி னவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம் வடிவிற்செய்கையின்
நெஞ்சினினிருண்டது நீலவானமே.

5 நாட்களினளிர்கட ஞாரநாவுற
வேட்கையிற்பருகிய மேகமின்னுவ
வாட்கணமயங்கிய செருவின்வார்மதப்
பூட்கைகணிறைந்தபுண் டிறப்பபோன்றவே.

6 நீனிறப்பெருங்கரி நிரைத்தநீர்த்தெனச்
சூனிறமுகிற்குலந் துவன்றிச்சூழ்திரை
மானிறநெடுங்கடல் வாரிமூரிவான்
மேனிறத்துளதென முழக்கமிக்கதே.

7 அரிப்பெரும்பெயரவன் முதலினோரணி
விரிப்பவுமொத்தன வெற்புமீதுதீ
எரிப்பவுமொத்தன வேசிலாசைகள்
சிரிப்பவுமொத்தன தெரிந்தமின்னெலாம்.

8 மாதிரக்கருமகன் மாரிக்கார்மழை
யாதினுமிருண்டன விருந்தைக்குப்பையின்
கூதிர்வெங்கானெடுங் துருத்திகோளமைத்
தூதுவெங்கனலுமி ழுலையுமொத்தவே.

9 பிரிந்துறைமகளிரும் பிலத்தபாந்தளும்
எரிந்துயிர்நடுங்கிட விரவியின்கதிர்
அரிந்தனவாமென வசனிநாவென
விரிந்தனதிசைதொறு மிசையின்மின்னெலாம்.

10 சூடினமணிமுடித் துகளில்விஞ்சையர்
கூடுறநீக்கிய குருதிவாட்களும்
ஆடுறுந்தொறுந்தொறு மாசையானையின்
ஓடைகளொளிபிறழ் வனவுமொத்தவே.

11 எண்வகைநாகங்க டிசைகளெட்டையும்
நண்ணினநாவலைத் தனையமின்னகக்
* கண்ணுதன்மிடறெனக் கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பென வூதைபொங்கவே.

12 தலைமையுங்கீழ்மையுந் தவிர்தலின்றியே
மலையினுமாத்தினு மற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழி விலங்கும்வேசையர்
உலைவுறுமனமென வுலாயதூதையே.

13 அழுங்குறுமகளிர்த மன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலை கொதிப்பப்புக்குலாய்க்
கொழுங்குறைந்தசையிலென் பீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயென வாடைவீங்கிற்றே.

14 ஆர்த்தெழுதுகள்விசும் படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப் பிறழுங்கொட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண் டழுங்கலானுமோர்
போர்ப்பெருங்களமெனப் பொலிந்ததும்பரே.

---

* கண்ணன்மெய்வடிவென எனவும் பாடம்.

15 இன்னகைச்சனகியைப் பிரிந்தவேந்தன்மேல்
மன்மதன்மலர்க்கணை வழங்கினானெனப்
பொன்னெடுங்குன்றின்மேற் பொழிந்ததாரைகள்
மின்னொடுந்துவன்றின மேகராசியே.

16 கல்லிடைப்படுந்துளித் திவலைகாரிடு
வில்லிடைச்சரமென விசையின்வீழ்ந்தன
செல்லிடைப்பிறந்தசெங் கனல்கள்சிந்தின
அல்லிடைமணிசிறந் தழலியற்றல்போல்.

17 மள்ளர்கண்மறுபடை மானயானைமேல்
வெள்ளிவேலெறிவன போன்றமேகங்கள்
தள்ளருந்துளிபடத் தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரி புரள்வபோன்றவே.

18 வாணிடுதனுநெடுங் கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன் பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணை பிரிந்ததன்மையர்
ஊனுடையுடம்பெலா மூழ்க்கலொத்தவே.

19 தீர்த்தனுங்கவிகளுஞ் செறிந்துநம்பகை
பேர்த்தனரினியெனப் பேசிவானவர்
ஆர்த்தெனவார்த்தன மேகமாய்மலர்
தூர்த்தனவொத்தன துள்ளிவெள்ளமே.

20 வண்ணவிற்கரதலத் தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண் டேகும்வேலையின்
பெண்ணினுக்கருங்கல மனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்தது காலமாரியே.

21 * பரஞ்சுடர்ப்பண்ணவன் பண்டுவிண்டொடர்
புரஞ்சுடவிடுசரம் புரையுமின்னினம்
அரஞ்சுடப்பொறிநிமி ரயிலினாடவர்
உரஞ்சுடவுளைந்தனர் பிரிந்துளாரெலாம்.

* சிரஞ்சுடாமதிபுனைதேவன் எனவும் பாடம்

22 பொருடாப்போயினர்ப் பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசை யுயிர்கொண்டுய்த்தலான்
மருடருபிரிவினை மாசுணங்கெடக்
கருடனைப்பொருவின காலமாரியே.

23 முழங்கினமுறைமுறை மூரிமேகநீர்
வழங்கினமிடைவன மானயானைகள்
தழங்கினபொழிமதத் திவலைதாழ்தாப்
புழுங்கினவெதிரெதிர் பொருவபோன்றவே.

24 விசைகொடுமாருத மறித்துவீசலால்
அசைவுறுசிறுதுளி யப்புமாரியின்
இசைவுறவெய்வன வியைவவாய்ப்பெருந்
திசையொடுதிசைசெருச் செய்தலொத்தவே.

25 விழைவுறுபொருடாப் பிரிந்தவேந்தர்வந்
துழையுறவுயிருற வுயிர்க்குமாதரின்
மழையுறமாமுக மலர்ந்துதோன்றின
குழையுறப்பொலிந்தன வுலவைக்கொம்பெலாம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

26 பாடலம்வறுமைகூரப் பகலவன்பசுமைகூரக்
கோடல்கள்பெருமைகூரக் குவலயஞ்சிறுமைகூர
ஆடினமயில்கள்பேசா தடங்கினகுயில்களன்பாற்
கேடுறத்தளர்ந்தார்போன்றுந் திருவுறக்கிளர்ந்தார்போன்றும்.

27 நானிறச்சுரும்பும்வண்டு நவமணியணியிற்சாரத்
தேனுகமலர்ந்துசாய்ந்த் சேயிதழ்க்காந்தட்செம்பூ
வேனிலைவென்றதம்மா காரெனவியந்துநோக்கி
மானிலக்கிழத்திகைகண், மறித்தனபோன்றமன்னோ.

28 வாளெயிற்றரவம்போல வன்றலைகான்றமானத்
தாளுடைக்கோடறம்மைத் தழீஇயனகாதறங்க
மீளலவவையுமன்ன விழைவனவுணர்வுவீந்த
கோளரவென்னப்பின்னி யவற்றொடுங்குழைந்துசாய்ந்த.

29 எளண்டவ்டனுமின்றி யெழுந்தனவிலங்குகோபம்
தள்ளுறத்தலைவர்தம்மைப் பிரிந்தவர்த்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங் கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பை சிதர்ந்தெனவிரிந்தமாதோ.

30 தீங்கனிநாவலோங்குஞ் சேணுயர்குன்றிற்செம்பொன்
வாங்கினகொண்டுபாரின் மண்டுமால்யாறுமான
வேங்கையின்மலருங்கொன்றை விரிந்தனவீயுமீர்த்துத்
தாங்கினகலுழிசென்று தலைமயக்குறுவதம்மில்.

31 நன்னெடுங்காந்தட்போதி னறைவிரிகடுக்கைமென்பூத்
துன்னியகோபத்தோடுந் தோன்றியதோற்றந்தும்பி
இன்னிசைமுரல்வநோக்கி யிருநிலப்பெண்கையேந்திப்
பொன்னெடுங்காசையீட்டிக் கொடுப்பதேபோன்றவன்றே.

32 கிளைத்துணைமழலைவண்டு கின்னரநிகர்த்தமின்னும்
துளிக்குரன்மேகம்வள்வார்த் தூரியந்துவைப்பபோன்ற
வளைக்கையர்போன்றமஞ்ஞை தோன்றிகளரங்கின்மாடே
விளக்கினமொத்தகாண்போர் விழிகருவிளம்வியொத்த.

33 பேடையுஞிமிறும்பாயப் பெயர்வுழிப்பிறக்குமோசை
ஊடுறத்தாக்குந்தோறு மொல்லொலிபிறப்பநல்லார்
ஆடியற்பாணிக்கொக்கு மாரியவமுதப்பாடற்
கோடியதாளங்கொட்டன் மலர்ந்தகூதாளமொப்ப.

34 வழைதுறுகானயாறு மாநிலக்கிழத்திமக்கட்
குழைதுறுமலைமாக்கொங்கை சுரந்தபாலொழுக்கையொத்த
விழைவுறுவேட்கையோடு வேண்டினர்க்குதவவேண்டிக்
குழைதொறுங்கனகந்தூங்குங் கற்பகநிகர்த்தகொன்றை.

35 பூவியல்புறவமெங்கும் பொறிவரிவண்டுபோர்ப்பத்
தீவியகளியவாகிச் செருக்கியகாமச்செவ்வி
ஓவியமான்கடோறு முறைத்தாவுரிஞ்சியொண்கேழ்
நாவியசெவ்விநாறக் கலையொடும்புலந்தநவ்வி.

கலிநிலைத்துறை.

36 தேரின்மன்னெடுந்திசைசெலச் செருக்கழிந்தொடுங்கும்
கூரயிற்கருங்கண்ணெனக் குவிந்தனகுவளை
மாரனன்னவர்வரவுகண் டுவக்கின்றமகளிர்
மூரன்மென்குறுமுறுவலொத் தரும்பினமுல்லை.

37 களிக்குமஞ்ஞையைக்கண்ணுள ரினமெனக்கண்ணுற்
றளிக்குமன்னரிற்பொன்மழை வழங்கினவருவி
வெளிக்கண்வந்தகார்விருந்தென விருந்துகண்டுள்ளம்
களிக்குமங்கையர்முகமெனப் பொலிந்தனகமலம்.

38 சரதநாண்மலர்யாவையுங் குடைந்தனதடவிச்
சுரதநூறெரிவிடரெனத் தேன்கொண்டுதொகுப்ப
பரதநூன்முறைநாடகம் பயனுறப்பகுப்பான்
இரதமீட்டுறுங்கவிஞரைப் பொருவினதேனீ.

39 நோக்கினைமைநோக்கழி கண்டநுண்மருங்குற்
றுக்கணங்கருஞ்சீதைக்குந் தாங்கருந்துன்பம்
ஆக்கினமதுருவினென் றரும்பெறலுவகை
வாக்கினுலுரையாமெனக் களித்தனமான்கள்.

40 நீடுநெஞ்சுறுநேயத்தா னெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறு காதலின்மயங்கிக்
கூடுநன்னதித்தடந்தொறுங் குடைந்தனபடிவுற்
றூடுகின்றனகொழுநரைப் பொருவினவன்னம்.

41 காரெனும்பெயர்க்கரியவன் மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தன வளக்கருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தி னருகுறநிரைத்துக்
கூரும்வெண்ணிறத்திரையெனப் பறப்பனகுரண்டம்.

42 மருவிநீங்கல்செல்லாநெடு மாலையவானின்
பருவமேகத்தினருகுறக் குருகினம்பறப்ப
திருவினையகனிவனெனத் தேமறைதெரிக்கும்
ஒருவன்மார்பினினுத்தரி யத்தையுமொத்த.

43 உறவெதுப்புறுங்கொடுந்தொழில் வேனிலானொழியத
திறநினைப்பருங்காரெனுஞ் செவ்வியோன்சேர
நிறைமனத்துறுகுளிர்ப்பிணி னெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தன போன்றனபசும்புல்.

44 தேனவாமலர்த்திசைமுகன் முதலினர்தெளிந்தோர்
ஞானநாயகனவையுறு நோக்கெனநல்கூக்
கானம்யாவையும்பரப்பிய கண்ணெனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பன போன்றனமஞ்ஞை.

45 செஞ்செவேலவர்செறிசிலைக் குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப் புதுநிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப் பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கென நுடங்கினவல்லி.

46 நீயிரன்னவர்குதலைய ராகலினேடிப்
போயதையலைத்தருதிரென் றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தன போர்நிடைத்தேடிக்
கூயவாய்க்குரல்குறைந்தபோற் குறைந்தனகுயில்கள்.

47 பொழிந்தவானிலம்புற்றரக் குமட்டியபுனிற்று
எழுந்தவாம்பிகளிடறின செறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலை யாய்ச்சியர்முழாவின்
பிழிந்தபால்வழிநுரையெனப் பொருவுவபிடவம்.

48 வேங்கைநாறினகொடிச்சியர் வெடிக்குழல்விழைவண்
டேங்கநாகமுநாறின நுளைச்சியரைப்பால்
ஓங்குநாண்முல்லைநாறின வாய்ச்சியரோதி
ஞாங்கருற்பலமுழத்தியர் பித்தையினுற.

49 அளவில்காரிழிகூதிரின் பருவம்வந்தணைந்தால்
தளர்வரென்பதுதவம்புரி வோருக்குந்தகுமால்
கிளவிதேனினுமமுதினுங் கிளைத்தவள்வளைத்தோள்
அளவியுண்டவன்வருந்துமென் றுலதுவருந்தோ.

50 காவியுங்கருங்குவளையு நெய்தலுங்காயாம்
பூவையும்பொருவானவன் புலம்பினன்றளர்வான்
ஆவியுஞ்சிறிதுண்டுகொ லாமெனவயிர்த்தான்
தூவியன்னமன்னாடிறத் திவையிவைசொல்லும்.

கலிவிருத்தம்.*

51 வாரோர்முலை யாளைமறைக்குநர்வாழ்
ஊரேயறியே னுயிரோடுழல்வேன்
நீரேயுடையா யருணின்னிலையோ
காரேயென தாவி கலக்குதியோ.

52 வெப்பார்நெடு மின்னி னெயிற்றைவெகுண்
டெப்பாலும் விசும்பி னிருண்டெழுவாய்
அப்பாதகவஞ்ச வரக்கனையே
ஒப்பாயுயிர் கொண்டல தோவலையோ.

53 அயிலேவிழியார் விளையாரமிழ்தின்
குயிலேமொழியார்க் கொணராய்கொடியாய்
துயிலேனொருவே னுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீ வலியாடுதியோ.

54 மழைவாடையொ டாடி வலிந்துயிர்மேல்
நுழைவாய்மலர்வாய் நொடியாய்கொடியே
இழைவாணுதலா ளிடைபோலிடையே
குழைவாயென தாவி குழைக்குதியோ.

55 விழையேன்விழைவா னூவைமேன்மையினின்
றிழையேனுணர்வே னவையின்மையினால்
பிழையேனுயி ரோடு பிரிந்தனரால்
உழையேயவரெவ் வுழையாருளையாய்.

* இச்சந்தம் அளவடியான் நடந்து கலிவிருத்தமெனப் பெயர்பெறினும் சில அடிகளைச் சிந்தடியாகப் பிரித்துப் படித்தாலன்றிச் செவிக்கு ருசிபயவாது. ஆதலிற் சிந்தடியாகப் பிரித்துப்படிக்கவேண்டியவற்றை அவ்வாறு பிரித்திருக்கின்றோம்.

63 என்னவித்தகையபன்னி யீடழிந்திரங்குகின்ற
தன்னையொப்பானைநோக்கித் தகையழிந்தயர்ந்ததம்பி
நின்னையெத்தகையனாக நினைந்தனைநெடியோயென்னாச்
சென்னியிற்சுமந்தகையன் றேற்றுவான்செப்பலுற்றான்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

64 காலநீளிதுகாருமாரியும் வந்ததென்றகவற்சியோ
நீலமேனியரக்கர்வீர நினைந்தழுங்கியநேர்மையோ
வாலிசேனைமடந்தைவைகிட நாடவாரலிலாமையோ
சாலுநல்லுணர்கேள்விவீர தளர்ந்ததென்னைதவத்தினாய்.

65 மறைதுளங்கினுமதிதுளங்கினும் வானுமாழ்கடல்வையமும்
நிறைதுளங்கினுநிலைதுளங்குறு நிலைமைநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவவனையபேரெயி றுடையபேதையர்பெருமைநின்
இறைதுளங்குறுபுருவமென்சிலை யிடைதுளங்குறவிசையுமோ.

66 அனுமனென்பவனளவறிந்தன மறிஞனங்கதனாதியோர்
எனையரென்பதொரிறுதிகண்டில மெழுபதென்றெழுபாவையோ
அனிகவெம்படைவிரவுதிங்களு மவதிசென்றனவெளிதினின்
தனுவெனுந்திருநுதலிவந்தனள் சாதம்வன்றுயர்தவிர்தியே.

67 மறையறிந்தவர்வரவுகண்டுமை வலியும்வஞ்சகர்வழியொடும்
குறையவென்றிடர்களைவனென்றனை குறைமுடிந்ததுவிதியினால்
இறைவவங்கவரிறுதிகண்டினி திசைபுனைந்திமையவர்கடாம்
உறையுமும்பருமுதவிநின்றரு ளுணர்வழிந்திடலுறுதியோ.

68 காதுகொற்றநினக்கலாது பிறாக்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரம தன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டிதோர்பொரு ளன்றுநின்றுபுணர்த்தியேல்
யாதுனக்கியலாததெந்தை வருந்தலென்னவியம்பினான்.

69 சொற்றதம்பியுரைக்குணர்ந்துயிர்சோர்வொடுங்கியதொல்லையோ
இற்றவின்னலியக்கமெய்திட வைகல்பற்பலவேகமேல் [ன்
உற்றுநின்றவினைக்கொடும்பிணி யொன்றின்மேலுடனொன்றுராய்
மற்றும்வெம்பிணிபற்றினாலென வந்தெதிர்ந்ததுமாரியே.

கலிவிருத்தம்.

70 நிறைந்தனநெடுங்குள நெருங்கினதரங்கம்
குறைந்தனகருங்குயில் குளிர்ந்தவுயர்குன்றம்
மறைந்தனதடந்திசை வருந்தினர்பிரிந்தார்
உறைந்தனவகன்றிலுட னன்றிலுயிரொன்றி.

* * * *

71 வேலைநிறைவுற்றன வெயிற்கதிர்வெதும்பும்
சீலமழிவுற்றபுன லுற்றுருகுசெம்பின்
காலமறிவுற்றுணர்தல் கன்னலளவல்லால்
மாலைபகலுற்றதென வோர்வரிதுமாதோ.

72 நெற்கிழியநெற்பொதி நிரம்பினநிரம்பாச்
சொற்கிழியநற்கிளிக டோகையவர்துய்மென
பற்கிழிமணிப்படர் திரைப்பரதர்முன்றில்
பொற்கிழிவிரித்தன சினைப்பொதுளுபுன்னை.

73 நிறங்கருகுகங்குல்பக னின்றநிலைநீர்வாய்ப்
அறங்கருதுசிந்தைமுனி யந்தணரிறைவிப்
பிறங்கருநெடுந்துளி படப்பெயரவில்குன்றின்
உறங்கலவிலங்கலய னின்றவுயர்வேழம்.

74 சந்தினிடையிற்படலை வேய்ந்திசைதடந்தோ
றந்தியிடகிற்புகை நுழைந்துகுளிருள்ளம்
மந்திதுயிலுற்றமுழை வன்கடுவனங்கத
திந்தியமவித்ததனி யோகரினிருந்த.

75 ஆசில்சுனைவாலருவி யாயிழையரைம்பால்
வாசமணநாறலில வானமணிவன்கால
ஊசல்வறிதாயவித ஒண்மணிகள்விண்மேல்
வீசலிலவானினெடு மாரிதுளிவீச.

76 கருந்தகையதண்சினைய கைதைமடல்காதல்
தருந்தகையபோதுசினை யிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறை யொடுக்கியுடல்போரா
திருந்தகுருகின்பெடை பிரிந்தவர்களென்ன.

77 பதங்கொள்முழவொத்தமுகிற் பண்ஞிமிறுபன்ன
விதங்களினடித்திடு விகற்பவழிமேவும்
மதங்கியரையொத்தமயில் வாசமராமலத்
தொதுங்கினவுழைக்குல மழைக்குலமுழக்க.

78 விளக்கொளியகிற்புகை விழுங்கமளிமென்கொம்
பிளைக்குமிடைமங்கையரு மைந்தர்களுமேறத்
தளககவின்மலர்த்தவி சிகந்துதருசந்திற்
றுளைத்துயிலுவந்துதுயில் வுற்றகுளிர்தும்பி.

79 தாமரைமலர்த்தவி சிகந்துதகையன்னம்
மாமரநிரைதொரு பொதும்பினுழைவைகத்
தேமானடுக்கித ணிடைச்செறிகுரம்பைத்
தாமருவெயிற்றியரொ டன்பர்துயில்வுற்றார்.

80 வள்ளிபுடைசுற்றியுயர் சிற்றிலைமரந்தோ
றெள்ளருபறிக்குருளொ டண்டர்களிருந்தார்
கள்ளரிஞெளிந்துழ னெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுநின்றுபசி மூழ்கிடவிருந்த.

81 சாம்பரினெடுந்துளி நிமிர்ந்தபுயல்சாரல்
உரமபெயரவிலவனகரி காநதுறவொடுங்கா
வரம்பகனெடும்பிரசம் வைகல்பலவைகும்
முரமபினிவிரம்பல முழைஞ்சிடைநுழைந்த.

82 இத்தகையமாரியிடை துன்னியிருளெய்த
மைத்தகுமலிகருழன் மலர்ச்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வதின னெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனை முன்னினன்விளம்பும்.

வேறு.

83 மழைக்கருமின்னெயிற் றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையு மெதிர்வுற்றின்னலின்
உழைத்தனளுலந்துயி ருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமி தென்னபெற்றியோ.

84 தூநிறச்சுடுசரந் தூணிதூங்கிட
வானுறப்பிறங்கிய வயிரத்தோளொடும்
யானுறக்கடவதே யிதுவுமிங்கிலை
வேனிறத்துற்றதொத் துழியும்வீகலேன்.

85 தெரிகணைமலரொடுந் திறந்தநெஞ்சொடும்
மரியவன்றுயரொடும் யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணி விளக்கினின்றுணைக்
குரியினம்பெடையொடுந் துயில்வகூட்டினுள்.

86 வானகமின்னினு மழைமுழங்கினும்
யானகமெலிகுவே னெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான் முடிந்தகாரியம்
மேனகுங்கீழ்நரு மினியென்வேண்டுமால்.

87 மறந்திருந்துய்கலேன் மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வது சாதலிற்பழி
பிறந்துபின்றாவலோ பின்னராவது
துறந்துசென்றுறுவலோ துயரின்வைகுவேன்.

88 ஈண்டுநின்றரக்கர்த மிருக்கையாரினிக்
காண்டலிற்பலப்பல காலங்காண்டுமால்
வேண்டுவதன்றிது விரதநோய்கெட
மாண்டனனென்பது மாட்சிப்பாலதாம்.

89 செப்புருக்கனையவிம் மாரிசீகரம்
வெப்புறப்புறஞ்சுட வெந்துவீவனோ
அப்புருக்கொண்டவா னெடுங்கணையிழை
துப்புருக்குமுதவா யமுதந்துய்த்தயான்.

90 தேற்றுவாய்நீயலை யாகுந்தேறினின்
றூற்றுவேறுனுள றுகவாய்வலை
தோற்றுவாளல்லளித் துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொரு வரம்புண்டாகுமோ.

91 விட்டபோர்வாளிகள் விரிந்தவிண்ணையும்
சுட்டபோதிமையவர் முதலதொல்லையோர்
பட்டபோதுலகமு முயிரும்பற்றறக்
கட்டபோதல்லது மயிலைக்காண்டுமோ.

92 தருமமென்றொருபொரு டன்னையஞ்சியான்
தெருமருகின்றது செறுநர்தேவரோ
டொருமையின்வந்தன ரேனுமுய்கலார்
உருமெனவொலிபடு முரவிலோயென்றான்.

93 இளவலுமுறைசெய்வா னெண்ணுநாளினும்
உளவலகூதிரு மிறுதியுற்றதால்
களவுசெய்தவருறை காணுங்காலம்வந்
தளவியதயர்வதென் ஞையாழியாய்.

94 திரைசெயத்திண்கட லமிழ்தஞ்செங்கணான்
உரைசெயத்தரினுமத் தொழிலுவந்திலன்
வரைமுதற்கலப்பைகண் மாடுநாட்டித்தன்
குரைமலர்த்தடக்கையாற் கடைந்துகொண்டனன்.

95 மனத்தினினுலகெலாம் வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனாயினு நேமியானெடும்
எனைப்பலபடைக்கல மேந்தியாரையும்
வினைப்பெருஞ்சூழ்ச்சியிற் பொருதுவெல்லுமால்.

96 கண்ணுடைநுதலவன் கணிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுட வெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியு மீட்டிக்கொண்டவும்
அண்ணலேயொருவரா லறியற்பாலவோ.

97 ஆகுநர்யாரையுந் துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடை யெய்தியெண்ணுவ
சேகறப்பன்முறை தெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள் வழுவற்பாலதோ.

98 அறத்துறைதிறம்பின ராக்கராற்றலால்
மறத்துறைநமக்கென வலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறி திறம்பலுண்டெனின்
புறத்தினியார்திறம் புகழும்வாகையும்.

99 பைந்தொடிக்கிடர்களை பருவம்பையவே
வந்தடுத்துளதினி வருத்தநீங்குவாய்
அந்தணர்க்காமற மரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய் சொல்லுநீயென்றான்.

100 உறுதியஃதேயென வுணர்ந்தவூழியான்
இறுதியுண்டேகொலிம் மாரிக்கென்பதோர்
தெறுத்துயருழந்தனன் றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப் பருவமாண்டுபோய்.

101 மள்கலில்பெருங்கொடை மருவிமண்ணுளோர்
உள்கியபொருளெலா முதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க் கீவதின்மையால்
வெள்கியமாந்தரின் வெளுத்தமேகமே.

102 தீவினைநல்வினை யென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனை யறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்புணர் வணுகவாசுறு
மாயையின்மாய்ந்தது மாரிப்பேரிருள்.

103 மூளமர்தொலைவுற முரசவிந்தபோல்
கோளமைகணமுகில் குமுறலோவின
நீளடுகணையெனத் துளியுநீங்கின
வாளுறையுற்றென மறைந்தமின்னெலாம்.

104 தடுத்ததாணெடுந்தடங் கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தன வருவிதூங்கின
எடுத்தநூலுத்தரி யத்தொடெய்திநின்
றுடுத்தவானிறத்துகி லொழிந்தபோலுமே.

105 மேகமாமலைகளின் புறத்துவீதலால்
மாகயாறியாவையும் வாரியற்றன
வாகையாற்றகவிழந் தழிவினன்பொருள்
போகவாறொழுகலான் செல்வம்போன்றவே.

106 கடந்திறந்தெழுகளி றனையகார்முகில்
இடந்திறந்தேகலிற் பொலிந்ததிந்துவும்
நடந்திறனவில்வுறு நங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற் பொலியும்பான்மைபோல்.

107 பாசிழைமடந்தையர் பகட்டுவெம்முலை
பூசியசந்தனம் புழுகுகுங்குமம்
மூசினமுயங்குசே றுலரமொண்டுற
வீசியநறும்பொடி விண்டுவாடையே.

108 மன்னவன்றலைமகன் வருத்தமாற்றுவான்
நன்னெறிப்பருவமு நணுகிற்றுகலால்
பொன்னினைநாடிய போதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசை யகன்றவிண்ணின்வாய்.

109 வஞ்சனைத்தீவினை மறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தன நீர்நீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென் பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப் பிறழ்ந்தவாடன்மீன்.

110 ஊடியமடந்தையர் வதனமொத்தன
தாடொகமலர்ந்தன முதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க் கோலங்கொண்டன
சேடுறுநறுமுகை விரிந்தசெங்கிடை.

111 கல்வியிற்றிகழ்கணக் காயர்கம்பலை
பல்விதச்சிறுஅரெனப் பகர்வபல்லரி
செல்விடத்தல்லதொன் றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரி னவிந்தநாவெலாம்.

112 தஞ்சிறையொடுக்கின தழுவுமின்னல
நெஞ்சுறுபயனில நினைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமழை பிரிந்தமாமயில்
அஞ்சினமிதிலைநாட் டன்னமென்னவே.

113 செறிபுனற்பூந்துகி றிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத் தோடியோதநீர்
எறுழ்வலிக்கணவனை யெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றன போன்றமுத்தெலாம்.

114 சொன்னிறைகேள்வியிற் றொடர்ந்தமாந்தரின
இன்னிறப்பசலையுற் றிருந்தமாதரின்
தன்னிறம்பயப்பய நீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தின பூகத்தாறெலாம்.

115 பயின்றுடல்குளிப்பவும் பழனநீத்தவண்
இயன்றிலவிளவெயி லெழுதுமெய்யன
வயின்றொறும்வயின்றொறு மடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத் தடங்கடோறுமே.

116 கொஞ்சுறுகிளிநெடுங் குதலைகூடின
அஞ்சிறையறுபத மளகவோளிய
எஞ்சலில்குழையன விடைநுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தன மகளிர்மாலைபோல்.

117 அளித்தனமுத்தினந் தோற்பமானனூர்
வெளுத்தெதிர்விழிக்கவும் வெள்கிமென்மையால்
ஒளித்தனவாமென வொடுங்குகண்ணன
குளித்தனமண்ணிடைக் கூனநந்தெலாம்.

118 மழைபடப்பொதுளிய மருதத்தாமரை
தழைபடப்பேரிலைப் புரையிற்றங்குவ
விழைபடுபெடையொடு மென்னினள்ளிகள்
புழையடைத்தொடுங்கின வச்சைமாக்கள்போல்.

7-வது. சரற்காலப்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 120-ல் 118.



## 8-வது. கிட்கிந்தைப்படலம்.

என்பது கிட்கிந்தையில்நடந்த செய்திகளைக் கூறுவது.

மாரிகாலம் நீங்கிய அளவில், ஸ்ரீராமபிரான் திருத்தம்பியாரை நோக்கி, தான் சொல்லிய தவணைகடந்தும் சோம்பிய அச்சுக்கிரீவன் வந்திலன். அவன் செயல் எத்தன்மையது? நீ போய் அவனுடைய எண்ணத்தை அறி. கொடிய அரக்கரை மாய்த்து, இவ்வுலகில் குற்றமற்ற அறத்தை நிலைநிறுத்தும்படி தாங்கிய வில்லாகிய கொம்புமுளது, இராமனாகிய யமனும் உளன், உங்களைக் கொல்லவல்ல அம்பும் உளது என்று நம்முடைய ஆணையைச் சொல்லு. உட்கொண்டபின் வருத்திக்கொல்லும் இயல்புடையானைக் கொலைபுரிந்தால், அது வஞ்சகத்தொழிலன்று; பயந்தல்லாமல் அறச்செயலைத் தாமே அறியவல்லவர் யாவருண்டு; ஒருவருமிலர். அதுபற்றி இவ்விஷயம் அவர்களுடைய நெஞ்சில் பதிந்து விளங்கும்படி வற்புறுத்துவாய். உங்கள் நகரமும், நீங்கள் ஆளுகின்ற ஆட்சியும், உங்கள் உறவினரும், நீங்களும் இனிது வாழவிரும்பினால், நீங்கள் வருவதாக உடன்பட்டநாளில் வாருங்கள். வராமல் தாமதிப்பீராயின் வானரமென்னும் பெயரும் ஒழிந்துபோமென்று கூறு. இராமலட்சுமணர்களைப்பார்க்கினும் வலிய துணைவரைத் தேடுவோமென்று துணிவாராயின், நின்னை வெற்றிகொள்ள மூவுலகத்திலும் நின்னையல்லாமல் பிறரிலரென்பதை மொழி. நீதி முதலியவற்றை எடுத்துக்காட்டி, அவர்கள் நின்றநிலைமை நீதிக்கு மாறுபடாதபோது, கோபங்கொண்டு அவர்களை ஒன்றும் செய்யாமல், அவர்கள் சொல்லிய சொல்லை எனக்குத் தெரிவிக்கக்கடவையென்று கட்டளையிட்டருளினர். சுவாமியினுடைய ஆணையின்படி போகலுற்ற இளையபெருமாள் பெருமானது சீர்பாதங்களைத் தொழுது, முதுகில் எப்போதும் குறைபடாத அம்பறாத்தூணியைத் தாங்கி, வில்லைக் கரத்தில் தாங்கி, ஸ்ரீராகவபிரான் தமது சிந்தையினின்று நீங்குதலின்மைபெற்று, சிறிது பொழுதும் தாமதியாமல் புறத்தில் நெடுந்தூரம் விரைந்துசென்று, மென்மைக்குணமுடையாராயினும், சுக்கிரீவன்மேல் தவணை தவறினமையின் பகைமைபாராட்டிச் செல்லுதலால், அவர்கள் செய்துள்ளவழியாய்ச் செல்லாமல், குறுக்கேபோக அங்கு நின்ற மலைகளும், பெருமரங்களும், அவர் சீர்பாதங்களை வைத்தூன்றலால் சிறுபொடியாய் நெடுந்தூரத்திலே போய் வீழ்ந்தன. இப்படி விரைவாக நடந்துவருகின்ற இராமாநுசனைக் கண்டஞ்சிய வானரங்கள் ஓடி அங்கதப்பெருமானுக்கு உணர்த்த, அப்பெருமான் விரைந்துபோய், செல்வச்செருக்கினாலும், கள்ளுண்ட வெறியாலும் மயங்கித் தூங்கிக்கிடந்த சிற்றப்பனைக்கிட்டி இச்செய்தியைப் பலமுறை உரைக்க அவன் உணர்ந்திலாமையைக்கண்டு அநுமானைக்குறுகித் தெரிவித்து, அவ்வாஞ்சநேயனோடும் நடந்து தாரைக்குத் தெரிவித்தனன். அதுகேட்டு இந்திரகுமாரன் மனைவி செய்யத்தகாத தீச்செயல்களைச் செய்தீர்கள், அவற்றை எளிதில் நீக்கவும் ஆராய்கின்றீர்கள், என்றுசொல்லி, மீளவும், நம்மிறையவன் உங்களை நோக்கிப் படைவீரர்களைக் கூட்டுமினென்று சொல்லிய தவணைநாள் தவறினால் உங்கள் வாழ்நாள் தவறுமென்று சொல்லியதைக் கேட்டிரில்லை

யோ? இனி அப்பெருமானுக்குக் காணப்பட்டீர்கள். அவர்கள் வசத்திலும் அகப்பட்டீர்கள் என வற்புறுத்துகையில், இவ்வளவெனக் கணக்கிடற்கரிய வானரக்கூட்டங்கள் நீண்ட தூண்கள்நாட்டிய நகரவாயிலைச் சாத்தி, தாழக்கோல்பூட்டிப், பெருமலைகளை எடுத்துவைத்து இடைவெளியில்லாமல் அடுக்கிக் காவல்செய்துகொண்டு, உட்புறத்துள்ள பெருமரங்களிலும், மலைகளிலும் இருந்தன. எழுந்தருளிய இளையபெருமாள் வாயிலை அடைத்தது நம்வருகையைத் தடுப்பதற்கோவென்று நினைத்துப் புன்னகைசெய்து உதைத்தலும், வாயிலும், மதிலும் பத்து யோசனைதூரம் அடியோடு இடிந்து பொடிபொடியாய்த் தகர்ந்தன. அந்நகரிலேயிருந்த அஞ்சி வானரங்கள், மந்தரமலையால் கடைந்தபோது பாற்கடல் ஒலித்தாற்போல், இரைந்தோடின. இளையபெருமாள் விரைவாக வருவதைத் தாரை நோக்கி, மாதர் பெருங் கூட்டத்தோடு எதிர்கொண்டு நடந்து சந்தித்தனள். அம்மாதர் கூட்டம் சூழ்ந்துகொண்டு மறித்துக்கொண்டமையால் அவரை நோக்கவும் அச்சமுற்றார்போலத் தலைகுனிந்து நின்றருளினர். ஐயரே! உமது சீர்பாதங்கள்நோக எங்கள் சிறு குடிலுக்கெழுந்தருளியதனால் நாங்களுயர்ந்தோம், வினைகள்தீர்ந்து உஜ்ஜீவித்தோம், இனியும் பெறும்பேறு யாதுளது? இந்தப்பேறு முடிவில்லாதகாலம் செய்த தவப்பேற்றாலன்றி நூறு அசுவமேதஞ்செய்த இந்திரன்முதலிய இறைவர்களாலும் அடையக் கூடியதன்று. நீரிங்கெழுந்தருளிய செய்தி இன்னதென அறியாமல் சேனை முழுவதும் கலக்கமடைகின்றது. ஸ்ரீராமசந்திரரது சீர்பாதங்களைவிட்டுப் பிரியாதவரே! பிரிந்துவந்தகாரியம் யாது என்று நடுக்கத்தோடு வினவினள். இஃது வினவினவர் யாரோ என்று தலையெடுத்துச் சற்றுயர்த்துத் தாரையை நோக்கி, மங்கலப்பொருள்களணிதலின்றி, சந்தனம் குங்குமமுதலிய மெய்ப்பூச்சில்லாமல், மாராபிறைல் கணடந்தை மறைத்து உடுத்தசேலையோடு நிற்பதைக்கண்டு அயோத்தியிலுள்ள தாயர்களுமாமெனக்கருதிக் கண்ணீர்விட்டுநின்று, நம்மை வினவியதற்கு விடைகூறவேண்டுமென எண்ணித், தாரைக்கு விடைகூறலாயினர். யாவரினும் பெரியாருமாகிய ஸ்ரீராமபிரானுக்கு, நானும் சேனையும்கூடி எம்பெருமாட்டியினது இருப்பிடத்தைத் தேடிவந்து சொல்லுகின்றேமென்று கூறிவந்த நிலைமையை அறிந்துவாவென்று எம்பெருமான் ஏவியதனால் விரைந்து வந்தேனென்று கூறியருளினர். நீவிர் செய்யாமற்செய்த உதவிக்குக் கைம்மாறுண்டோ? பற்பல இடங்களுக்கும் தூதரைவிடுத்து, அச்சேனைவெள்ளத்தின் வரவை எதிர்பார்த்திருக்கின்றானே அன்றி மறந்தவனல்லனென்று உரைத்தனள். இங்ஙனம் வார்த்தையாடுகையில் கோபத்தணிவை இங்கிதத்தாலுணர்ந்து அநுமான் தண்டம் சமர்ப்பித்துநிற்க இளையபெருமாள் அவனைநோக்கி, நீயும் மறந்தாய்போலுமென்ன, சுக்கிரீவன் செய்ந்நன்றி மறந்தவனல்லன். அறக்கடவுளுக்குத் துணைவராகிய உமக்குச் சொல்லிய மொழிதவறினனாயின் பிறப்பின் பயனை அடையப்பெறாதவனாகிப் பிறவாதவனே ஆவான. மறுமையில் நரகமும தவறுதலிலது. வித்தாரமான நற்புலமையுடையாரே, நடந்துபோனகாரியங்களைத் திருவுளத்தில் கொள்ளாதீர் என்று வேண்டிக்கொண்டான். தாய்தந்தையரையும் குருவையும் நல்லொழுக்கமுடைய அந்தணரையும் பசுவையும் இளங்குழந்தைகளையும் மாதரையும் கொலைசெய்பவர்க்கும், தெய்வபூசனையை முற்றுங் கைவிடுபவர்க்கும் உய்வுண்டு ஒருவர்செய்த நன்றியை மறந்தவர்க்கு உய்வில்லை. எம்பெருமானே! உங்களுக்

கும், வானரவேந்தனுக்கும் நட்புண்டாகிய செயல் என்செய்கையன்றோ, அது கெடுமேயானால், எங்களில் எவர்க்கேயாயினும் உய்யும்வகை உண்டாகுமோ? தேவரும், தவமும், பலவகைப்பட்ட அறமும், மற்றயாவரும் நீங்களேயென்னும் உண்மையறிவு என் உள்ளத்தில் நிலைத்துளது. உங்களுக்குக் கோபமுண்டானால் நாங்கள் ஓடியடைவதற்குப் புகலிடமும் வேறுண்டோ? இங்குநின்று வார்த்தையாடுதல் நட்புக்குத் தகுந்ததன்று; பகைவர்களறிவாராயின் இது நட்பில் அமையாத செய்கையாகும். நீங்கள் கொடுத்த பெருஞ்செல்வத்தை நினக்கு மூத்தோனாகிய வானரவேந்தனோடு காணுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனன். அக்காலையில் மாதர் கூட்டத்தோடு தாரை தன் அரண்மனைசென்றாள். உடனே அங்கதப் பெருமான் மந்திரியரோடுவந்து தண்டமிட்டனன். அவனைநோக்கி இளைய பெருமாளை எம்வருகையை நினது தந்தைக்குத் தெரிவியென்னலும், அக் கட்டளையைச் சிரமேற்கொண்டு விரைந்துபோய்ப் பிதாவை நண்ணி இலக்குமணப்பெருமாளைக்கண்டு வானரங்கள் வாயில் கதவையடைத்ததையும், அவர் தமது சீபாதத்தால் தள்ளியதையும், தள்ளிவிட்டு எழுந்தருளத் தாரை மங்கையர்கூட்டத்தோடு எதிர்சென்று வேண்டிக்கொள்ளக் கோபந்தணிந்ததையும், பின் அநுமான்சென்று தண்டமிட்டு இன்சொற் சொல்லி வேண்ட முற்றும் கோபந்தணிந்து எழுந்தருளியதையுமுணர்த்தினன். அதுகேட்டு மகாராஜன் உள்ளத்தில் மிகுதியும் நாணி அந்தோ! மதுவினால் வரும்பெருங்கேட்டுக்கு மிகபபயந்தேன். இனி மதுவைப் பரிசிப்பேனானாலும் ஸ்ரீராகவனுடைய சீர்பாதங்களுக்குப் பிழைசெய்தேனாவேனென்று சபதஞ்செய்துகொண்டு, இளையபெருமாளை எதிர்கொண்டனன். இருவரும் ஒருவர ஒருவரைக்கண்டு அளவளாவிக்கொண்டு அரண்மனையினுட்போய், கவியரசன் சிங்காதனத்தைக்காட்டி வீற்றிருக்கும்படிக் கேட்டுக்கொள்ள, கொடிய மனமுடைய கைகேசியினால் மணிமுடிதுறந்த ஐயன் புல்லணையிலிருக்க யான் பொன்னாசனத்திலிருத்தல் தகுதியோ என்று சொல்ல, அதுகேட்டு வானரமன்னனும்,. மற்றவரும் கண்ணீர்துளிக்கப புலம்பினர். உடனே புறப்பட்டுச் சுவாமிசந்நிதிக்கு வந்து தண்டஞ் சமர்ப்பித்தனர். அவர்கள்பால் இனிய வார்த்தையாடி அனுப்பியபின்னர் எம்பிரான் தானும் தம்பியுமாய் அங்கிருந்தனன்.

கலிவிருத்தம்.

1 அன்னகால மகலுமளவினின்
முன்னைவீர னிளவலைமொய்ம்பினோய்
சொன்னவெல்லையி னூங்குமத்தூங்கிய
மன்னன்வந்தில னென்செய்தவாறரோ.

2 பெறலருந்திருப் பெற்றுதவிப்பெருந்
திறனினைந்திலன் சீர்மையிற்றீர்ந்தனன்
அறமறந்தன னன்புகிடக்கநம்
மறனறிந்திலன் வாழ்வின்மயங்கினான்.

3 நன்றிகொன்றரு நட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மை சிதைத்துரைபொய்த்துளாற்
கொன்றுநீக்குதல் குற்றத்தினீங்குமால்
சென்றுமற்றவன் சிந்தையைத்தேர்குவாய்.

4 வெம்புகண்டகர் விண்புகவேரறுத்
திம்பர்நல்லறஞ் செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங் கூற்றமுமுண்டுங்கள்
அம்புமுண்டென்று சொல்லுநம்மாணையே

5 நஞ்சமன்ன வரைநலிந்தாலது
வஞ்சமன்று மனுவழக்காதலான்
அஞ்சியல்லதொன் றாறிவாரவர்
நெஞ்சினின்று நிலாவநிறுத்துவாய்.

6 ஊருமாளு மரசுநுஞ்சுற்றமும்
நீருமாளுதி ரேயெனினோர்ந்தநாள்
வாரும்வாரலி ராமெனின்வானரப்
பேருமாளு மெனும்பொருள்பேசுவாய்.

7 இன்னுநாடுது மிங்கிவர்க்கும்வலி
துன்னினாரை யெனத்துணிந்தாரெனின்
உன்னைவெல்ல வுலகொருமூன்றினும்
நின்னலாற்பிற ரின்மைநிகழ்த்துவாய்.

8 நீதியாதி நிகழ்த்தினைநின்றது
வேதியாத பொழுது *வெகுண்டிடல்
சாதியாதவர் சொற்றாத்தக்கனை
போதியாதியென் றன்புகழ்ப்பூணினான்.

9 ஆணைசூடி யடிதொழுதாண்டிறை
பாணியாது படர்வெரிங்பாழ்படாத்
தூணிபூட்டித் தொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினன் சிந்தையினீங்கலான்.

* வெகுண்டவட் எனவும் பாடம்.

10 மாறுநின்ற மரனுமலைகளும்
நீறுசென்று நெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன் *மென்மையனாயினும்
ஆறுசென்றில னாணையினேகுவான்.

11 விண்ணுறத்தொடர் மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக் கழுந்தியமாதிரம்
கண்ணுறத்தெரி வுற்றதுகட்செவி
உண்ணிறக்கழற் சேவடி யூன்றலால்.

12 வெம்புகானிடை போகின்றவேகத்தால்
உம்பர்தோயு மராமரத்தூடுசெல்
அம்பிற்சென்றன னன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலு மானவன்றம்பியே.

13 மாடுவென்றியோர் மாதிரயானையின்
சேடுசென்று செடிலொருதிக்கின்மா
நாடுகின்றது நண்ணியகால்பிடித்
தோடுகின்றது மொத்துளனாயினான்.

14 உருக்கொளொண்கிரி யொன்றினின்றொன்றினைப்
பொருக்கவெய்தினன் பொன்னொளிர்மேனியான்
அருக்கன்மாவுத யத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினை யெய்தியபண்பினால்.

15 தன்றுணைத்தமை யன்றனிவாளியிற்
சென்றுசேணுயர் கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொரு குன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச் சீயமும்போன்றனன்.

16 கண்டவானரர் அனிலனைக்கண்டென
மண்டியோடினர் வாலிமகற்கையா
கொண்டசீற்றத் தினையோன்குறுகினான்
சண்டவேகத்தி னாலென்றுசாற்றினார்.

* மேன்மை எனவும் பாடம்.

17 அன்னதோன்றலு மாண்டொழி *லான்வர
வின்னதென்றறி வான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன் மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற் றாதையிற்போயினான்.

18 நளினியற்றிய நாயகக்கோயிலுட்
டளமலர்த்தகப் பள்ளியிற்றாழ்குழல
இளமுலைச்சிய ரேந்தடிதைவர
விளைதுயிற்கு விருந்துவிரும்புவான்.

19 தெள்ளியோரா தவன்பெருஞ்செல்வமாம்
கள்ளினாலதி கங்களித்தான்கதிர்ப்
புள்ளிமாநெடும் பொன்வரைபுக்கதோர
வெள்ளிமால்வரை யென்னவிளங்குவான்.

20 சிந்துவாரத் திருநறைதேக்ககில்
சந்தமாமயிற் சாயலாதாழ்குழற்
கந்தமாமலர்க் காடுகடாவிய
மந்தமாருதம் வந்துறவைகுவான்.

21 தித்தியாநின்ற செங்கிடைவாய்ச்சியா
முத்தவாணகை முள்ளெயிறூறுதேன்
பித்துமாலும் பிறவும்பெருக்கலான்
மத்தவாரண மென்னமயங்கினான்.

22 மகுடகுண்டல மேமுகமண்டலத்
துகுநெடுஞ்சுடர்க் கற்றையுலாவலால்
பகலவன்சுடர் பாய்பனிமால்வரை
தகமலர்ந்து பொலிந்துதயங்குவான்.

23 கிடந்தனன்கிடந் தானைக்கிடைத்திரு
தடங்கைகூப்பினன் றாமுன்னாட்டந்த
மடங்கல்வீரனல் மாற்றம்விளம்புவான்
தொடங்கினானவ னைத்துயினீக்குவான்.

* லானவா எனவும் பாடம்

24 எந்தைகேளவ் விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ் சீற்றந்திருமுகம்
தந்தளிப்பத் தடுப்பருவேகத்தன்
வந்தனன்னுன் மனக்கருத்தியாதென்றான்.

25 இனையமாற்ற மிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ் செல்வநெருக்கவும்
நனைநறுந்துளி நஞ்சுமயக்கவும்
தனையுணர்ந்திலன் மெல்லணைதங்கினான்.

26 ஆதலாலவ் வரசிளங்கோளரி
யாதுமுன்னின் றியற்றுவதின்மையான்
கோதில்சிந்தை யனுமனைக்கூவுவான்
போதன்மேயினன் போதகமேயினான்.

27 மந்திரத்தனி மாருதிதன்னொடும்
வெந்திறற்படை வீரர்விராய்வர
அந்தரத்தின்வந் தன்னைதன்கோயிலை
இந்திரற்கு மகன்மகனெய்தினான்.

28 எய்திமேற்செயத் தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற் கருநெடுந்தீயன
நொய்தினன்னவை நீக்கவு *நோக்குதிர்
உய்திர்போலு முதவிகொன்றீரெனா.

29 மீட்டுமொன்று விளம்புகின்றுள்படை
கூட்டுமென்றுமைக் கொற்றவன்கூறிய
நாட்டிறம்பினுந் நாட்டிறம்புமெனக்
கேட்டிலீரினிக் காண்டிர்கிடைத்திரால்.

30 வாலியாருயிர் காலனும்வாங்கவிற்
கோலிவாலிய செல்வங்கொடுத்தவர்
போலுமானும் புறத்திருப்பாரிது
சாலுமானுங்க டன்மையினோர்க்கெலாம்.

* நோக்ககீர் எனவும் பாடம்.

31 தேவிநீங்கவத் தேவரிற்சீரியோன்
ஆவிநீங்கினன் போலயர்வானது
பாவியாது பருகுதிர்போலுறுங்
காவிநாண்மலர்க் கண்ணியர்காதனீர்.

32 திறம்பினீர்மெய் சிதைத்திருதவியை
நிறம்பொலீருங்க டிவினைநேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின் மாளுகிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெ னென்கின்றபோதின்வாய்.

33 கோளுறுத்தற் கரியகுரக்கினம்
நீளெழுத்தொ டருநெடுவாயிலைத்
தாளுறுத்தித் தடவரைதந்தன
மூளுறுத்தி யடுக்கினமொய்ம்பினுல்.

34 சிக்குறக்கடை சேமித்தசெய்கைய
தொக்குறுத்த மாத்ததுவன்றின
புக்குறுக்கிப் புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தன வெற்பு *மிறுத்தன.

35 காக்கவோகருத் தென்றுகதத்தினுல்
பூக்கமூரல் புரவலர்புங்கவன்
தாக்கணங்குறை தாமரைத்தாளினுல்
நூக்கினுனக் கதவினைநொய்தினின்.

36 காவன்மாமதி லுங்கதவுங்கடி
மேவும்வாயி லடுக்கியவெற்பொடும்
தேவுசேவடி தீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப் பற்றழிந்திற்றவால்.

37 நொய்தினுேன்கத வும்முதுவாயிலும்
செய்தகன்மதி லுந்திசையோசனை
ஐயிரண்டி னளவடியற்றுக
வெய்துநின்ற குரக்கும்வெருக்கொள.

* நிறுத்தின என்றும் பாடம்.

38 பரியமாமதி லும்படர்வாயிலும்
சரிய *வீழ்ந்த தடித்திலிடித்தலை
நெரியநெஞ்சு பிளப்பநெடுந்திசை
இரியலுற்றன விற்றிலவின்னுயிர்.

39 பகரவேயு மரிதுபரித்தெழு
புகரில்வானர மஞ்சியபூசலான்
சிகரமால்வரை சென்றுதிரிந்துழி
மகரவேலையை யொத்ததுமாநகர்.

40 வானரங்கள் வெருவிமலையொரீஇக்
கானெருங்கு படரவக்கார்வரை
மீநெருங்கிய வானகமீனெலாம்
போனபின்பொலி வற்றதுபோன்மரோ.

41 அன்னகாலையி னாண்டகை †யாளியும்
பொன்னினன்னகர் வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச் சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவ தெய்தினனென்றனர்.

42 நீரெலாமய னீங்குமினேர்ந்தியான்
வீரனுள்ளம் விளங்குவலென்றலும்
பேரநின்றனர் யாவரும்பேர்கலாத்
தாரைசென்றன டார்குழலாரொடும்.

43 உரைசெய்வானர வீரருவந்துறை
அரசவீதி கடந்தகன்கோயிலைப்
புரசையானை யன்னான்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற் றாரைவிலக்கினாள்.

44 விலங்குமெல்லியல் வெண்ணகைவெள்வளை
இலங்குநுண்ணிடை யேந்திளமென்முலைக்
குலங்கொடோகை மகளிர்குழாத்தினால்
வலங்கொள்வீதி நெடுவழிமாற்றினாள்.

---

* வீழ்ந்து தகிர்ந்முடித்தலை எனவும் பாடம்.
† யாழியான் எனவும் பாடம்.

45 வில்லும்வாளு மணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன் மேகலையார்த்தெழப்
பல்வகைப்புரு வக்கொடிபம்பிட
*வல்லியாயம் வலத்தினில்வந்ததே.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

*          *          *

46 தாமரைவதனஞ்சாய்த்துத் தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தா ளெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனார்தம் பொதுவிடைபுகுந்தபொற்றோட்
டேமனெடுங்கட்டாரை நடுங்குவாளினையசொன்னாள்.

47 அந்தமில்காலநோற்ற வாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினோரா லெய்தலாமியல்பிற்றன்றே
மைந்தநின்பாதங்கொண்டெம் மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தே முறுதிவேறிதனினுண்டோ.

48 வெய்தினீவருதனோக்கி வெருவுறுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாது திருவுளந்தெரித்தியென்றாள்
ஐயநீயாழிவேந்த னடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்று ளிசையினுமினியசொல்லாள்.

49 ஆர்கொலோவுரைசெய்தாரென் றருள்வரச்சீற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள் பகல்வந்தபடிவம்போலும்
ஏர்குலாமுகத்தினாளை யிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன் றாயைநினைந்துரைத்தான்.

50 மங்கலவணியைநீத்து மணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக் குங்குமஞ்சாந்தங்கொட்டாப்
பொங்குவெம்முலைகள்பூசக் கழுத்தொடுமறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ள னயனங்கள்பனிப்பநின்றான்.

51 இனையளாமென்னையீன்ற விருவருமென்னவந்த
நினைவினனயர்ப்புச்சென்ற நெஞ்சினனெடிதுநின்றான்
வினவினாட்கெதிரோர்மாற்றம் விளம்பலும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்த காரியம்புகல்வதானான்.

---

* வல்லியாய வருதினிவந்ததே எனவும் பாடம்.

52 சேனையும்யானுந்தேடித் தேவியைத்தருவெனென்று
மானவற்குரைத்தமாற்ற மறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லை யறியெனவருளின்வந்தேன்
மேனிலையனையான்செய்கை *விளைந்தவாவிளம்புகென்றான்.

53 சீறுவாயல்லையைய சிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீலான்மற் றருளாயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந் தூதரைவிடுத்தவ்வேலை
ஊறுமாநோக்கித்தாழ்த்தா னுதவிமாறுதவியுண்டோ.

54 ஆயிரகோடிதூத ரரிக்கணமழைக்கவாணை
போயினர்புகுதுநாளும் புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுநல்லநீரே தணிதிராற்றருமமஃதால்
தீயனசெய்யாராயின் யாவரேசெறுநராவார்.

55 அடைந்தவர்க்கபயநீவி ரருளியவளவிற்செல்வம்
தொடர்ந்துநும்பணியிற்றீர்ந்தா லதுவுநுந்தொழிலேயன்றோ
மடந்தைதன்பொருட்டால்வந்த வாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னு நிற்குமோகேண்மையம்மா.

56 செம்மைசேருள்ளத்தீர்கள் செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றி யரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வரென்னி னெளிமையாயொழிவதொன்றோ
இம்மையேவறுமையெய்தி யிருமையுமிழப்பரன்றே.

57 ஆண்டுபோர்வாலியாற்றன் மாற்றியதம்பொன்றானல்
வேண்டுமோதுணைவர்நும்பால் வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர் தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார் நுங்கழற்புகுந்துளோரே.

58 என்றவளுரைத்தமாற்றம் யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாள னருள்வரநாணுட்கொண்டான்
நின்றனனிற்றலோடு நீத்தனன்முனிவென்றுன்னு
வன்றுணைவயிரத்திண்டோண் மாருதிமருங்கின்வந்தான்.

---

* விளைந்த எனவும் பாடம்.

59 வந்தடிவணங்கிநின்ற மாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயு மயர்த்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றான் முனிவினுமுனைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென்னா வியமபினனியம்பவல்லான்.

60 சிதைவகல்காதற்றாயைத் தந்தையைக்குருவைத்தெய்வ
பதவியந்தணரையாவைப் பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டா மாற்றலாமாற்றன்மாயா
உதவிகொன்றார்க்கென்றேனு மொழிக்கலாமுபாயமுண்டோ.

61 ஐயநும்மோடுமெங்க ளரிக்குலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாக மேலைநாள்விளைவதான
செய்கையென்செய்கையன்றே வன்னதுசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோ வுணர்வுமாசுண்டதன்றோ.

62 தேவருந்தவமுஞ்செய்யு நல்லறத்திறமுமற்றும்
யாவையுநீரேயென்ப தென்வயிற்கிடந்ததெந்தாய்
ஆவது *நிற்கசேரு மாறுண்டோவரு †மாருண்டாகி
மூவகையுலகங்காக்கு மொய்ம்பினிர்முனிவுண்டானல்.

63 மறந்திலன்கவியின்வேந்தன் வயப்படைவருவிப்பானத்
திறந்திறமேவியன்னார் செய்கையிற்சிறியனானன்
அறந்துணைநுமக்குத்தான்றன் வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலனன்றேயொன்றோ நரகமுமபிழைப்பதன்றால்.

64 உதவாமலொருவன்செய்த வுதவிக்குக்கைம்மாறாக
மதயானையனையமைந்த மற்றுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்னான் முன்சென்றுசெறுநர்மார்பில்
உதையானேனுதையுண்டாவி யுலையானேனுலகின்மன்னே.

65 ஈண்டினிநிற்றலென்ப தினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங் கேண்மைதீர்வினையிற்றாமால்
ஆண்டகையருளின்மொய்ம்பி னையநீரளித்தசெல்வம்
காண்டியாலுன்முன்வந்த கவிக்குலக்கோனொடென்றான்.

---

* நிற்கச்சேரு எனவும் பாடம். † ஞண்டன்றி என்றும் பாடம்

66 மாருதிமாற்றங்கேட்ட மலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைச்சென்றுநின்ற சீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தா னல்லன்வந்தடுத்தசெல்வம்
*பேரிதாகச்செய்த சிறுமையானென்னும்பெற்றி.

67 அனையதுகருதிப்பின்ன ரரிக்குலத்தவனைநோக்கி
நினையொருமாற்றமின்னே நிகழ்த்துவதுளதுநின்பால்
இனையனவுரைத்தற்கேற்ற வெண்ணுதியிவைநீயென்று
வனைகழல்வயிரத்திண்டோண் மன்னிளங்குமரன்சொன்னான்.

68 தேவியைக்குறித்துச்செற்ற சீற்றமுமானத்தீயும்
ஆவியைக்குறித்துநின்ற தையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக் கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற்றசெய்கை கருதுவன்பழியும்பாரேன்.

69 ஆயினுமென்னையானே யாற்றிநின்றாவியுற்று
நாயகன்றனையுந்தேற்ற நாள்பலகழிந்ததன்றேல்
தீயுமிவ்வுலகமூன்றுந் தேவரும்வீவரொன்றோ
வீயுநல்லறமும்போகா விதியெவர்விலக்கற்பாலார்.

70 உன்னைக்கண்டுங்கோன்றன்னை யுற்றிடத்துதவும்பெற்றி
என்னைக்கண்டனன்போற்கண்டிங் கித்துணைநெடிதுவைகித்
தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தா னன்றெனிற்றனுவொன்றாலே
மின்னைக்கண்டனையாடன்னை நாடுதல்விலக்கற்பாற்றோ.

71 ஒன்றுமோவானமின்றி யுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழும் மலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளே யெனினதுநெடியதொன்றோ
அன்றுநீர்சொன்னமாற்றந் தாழ்வித்தறருமமன்றால்.

72 தாழ்வித்தீரல்லீர்பன்னாட் டருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல் வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தியாளர்துன்பங் கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானை முனிவித்தீர்முடிதிரென்றான்.

* பேர்வரிதாக எனவும் பாடம்.

73 தோன்றலஃதுரைத்தலோடு மாருதிதொழுதுசொல்லை
ஆன்றநூலறிஞபோன பொருண்மனத்தடைப்பாயல்லை
ஏன்றதுமுடியேமென்னி னிறத்துமித்திறத்துக்கெல்லாம்
சான்றினியறனேபோந்துன் றம்முனைச்சார்தியென்றான்.

74 முன்னுநீசொல்லிற்றன்றோ முயன்றதுமுயற்சிதானும்
இன்னுநீயிசைத்தசெய்வா னியைந்தனமென்றுகூறி
அன்னதோரமைதியான்ற னருள்சிறிதறியநோக்கிப்
பொன்னின்வாசிலையினானு மாருதியோடும்போனான்.

* * *

75 வல்லமந்திரியரோடு வாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்ன வடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கி வினாவினென்வரவுவீர
சொல்லுதிநுந்தைக்கென்று னன்றெனத்தொழுதுபோனான்.

76 போனபின்றாரைகோயில் புக்கவன்பொலங்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுந் தைவந்துநடக்கைவீர
மானவற்கிளையோன்வந்துன் வாயிலின்புறந்தானிற்றம்
மீனுயர்வேலைமேலும் பெரிதிதுவிளைந்ததென்றான்.

77 அறிவுற்றுமகளிர்வெள்ள மனைவருமவனைப்பற்றிப
பிறிவற்றமயக்கத்தான்முன் னுற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாலங்கல்வீர செய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னோ காரணங்கண்டதென்றான்.

78 இயைந்தநாளெல்லைநீசென் றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய் மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசிற்றமற்ற துற்றதுசெய்கைதானும்
நயந்தெரியநுமன்வேண்ட நல்கினனம்மையின்னும்.

79 வருகின்றவேகநோக்கி வானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற் பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம் வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீப்பொங்கச் செருச்செய்வானமைந்துநின்றார்.

80 ஆண்டகையதனைநோக்கி யம்மலர்க்கமலத்தாளிற்
றீண்டினன்றீண்டாமுன்னந் தெற்கொடுவடக்குத்தெய்வ
நீண்டகன்மதிலுங்கொற்ற வாயிலுநிரைத்தகுன்றும்
கீண்டனநகர்ந்துபின்னைப் பொடியொடுங்கெழீஇயவன்றே.

81 அந்நிலைகண்டதிண்டோ ளரிக்குலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேன் யாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னை யேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானை வழியெதிர்விலக்கிநின்றாள்.

82 மங்கையர்மேனிநோக்கான் மைந்தனுமனத்துவந்த
பொங்கியசீற்றம்பற்றிப் புகுந்திலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறி நாயகநடந்ததென்னோ
எங்கள்பாலென்னச்சொன்னா ளண்ணலுமினையசொன்னான்.

83 அதுபெரிதறிந்தவன்னை யன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன் வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூது கல்லதர்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றா ளிதுவிங்குப்புகுந்ததென்றான்.

84 சொற்றலுமருக்கன்றோன்றல் சொல்லுவான்மண்ணின்விண்ணி
நிற்குரியார்கள்யாவ ரனையவர்சினத்தினேர்ந்தால் [ன்
விற்குரியாரித்தன்மை வெகுளியின்விளைவினெய்த
எற்குறையாதுநீரீ தியற்றியதென்கொலென்றான்.

85 உணர்த்தினேன்முன்னர்நீயஃ துணர்ந்திலையுணர்விற்றீர்ந்தாய்
புணர்ப்பதொன்றின்மைநோக்கி மாருதிக்குரைக்கப்போனேன்
இணர்த்தொகையீன்றபொற்றா ரெறுழ்வலித்தடந்தோளெந்தாய்
கணத்திடையவனைநீயுங் காணுதல்கருமமென்றான்.

86 உறவுண்டசிந்தையானு முறைசெய்வானொருவர்க்கின்னம்
பெறலுண்டேயவராலீண்டியான் பெற்றபேருதவியுற்ற
திறலுண்டோவென்னிற்றீர்வா னிருந்தபேரிடரையெல்லாம்
நறவுண்டுமறந்தேன்காண நாணுவன்மைந்தவென்றான்.

87 ஏயின*விதுவலான்மற் றேழைமைப்பாலதென்னோ
தாயிவண்மனைவியென்னுந் தெளிவின்றேற்றருமமென்னும்
தீவினையைந்தினொன்று மன்றியுந்திருக்குநீங்கா
மாயையின்மயங்குகின்ற மயக்கின்மேன்மயக்கும்வைத்தாம்.

88 தெளிந்துதீவினையைச்செற்றோர் பிறவியைத்தீர்வரென்று
விளிந்திலாவுணர்வினோரும் வேதமும்விளம்பவேயும்
நெளிந்துறைபுழுவைநீக்கி நறவுண்டுநிறைகின்றேனால்
அளிந்தகத்தெரியுந்தீயை நெய்யினாலவிக்கின்றாரின்.

89 தன்னைத்தானுணரத்தீருந் தகையறுபிறவியென்ப
தென்னைத்தான்மறையுமற்றைத் துறைகளுமிசைத்தவெல்லாம்
முன்னைத்தான்றன்னையோரா முழுப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மா நறவுண்டுதிகைக்கும்பித்தோ.

90 அளித்தவரஞ்சுநெஞ்சி னடைந்தவரறிவுமூழ்கிக்
குளித்தவரின்பதுன்பங் குடைந்தவர்குடைந்தவேரி
ஒளித்தவருண்டுமீண்டிவ் வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்தநின்ற கதியொன்றுகண்டதுண்டோ.

91 செற்றதும்பகைஞர்நட்டார் செய்தபேருதவிதானும்
கற்றதுங்கண்கூடாகக் கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்து தொடர்ந்ததும்படர்ந்ததுன்பம்
உற்றதுமுணராராயி னிறுதிவேறிதனினுண்டோ.

92 வஞ்சமுங்களவும்பொய்யு மயக்கமுமாயில்கொட்பும்
தஞ்சமென்றாரைநீக்குந் தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்தீருங் கள்ளினாலருந்தினாரை
நஞ்சமுங்கொல்வதல்லா னரகினைநல்காதன்றே.

93 கேட்டனனறவாற்கேடு வருமெனக்கிடைத்தவச்சொல்
காட்டியததருமநீதிக் கல்வியாற்கடந்ததல்லால்
மீட்டினியுரைப்பதென்னே வினைவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுன் முடிவதற்கையமுண்டோ.

* நறவலான் எனவும் பாடம்.

94 ஐயநானஞ்சினேனிந் நறவினினரியகேடு
கையினாலன்றியேயுங் கருதுதல்கருமமன்றால்
வெய்யதாமதுவையின்னும் விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்ன சேவடிசிதைக்கவென்றான்.

95 என்றுகொண்டியம்பியண்ணற் கெதிர்கொளற்கியைந்தவெல்
நன்றுகொண்டின்னுநீயே நணுகெனவவனையேவித் [லாம்
தன்றுணைத்தேவிமாருந் தமரொடுந்தழுவத்தானும்
நின்றனனெடியவாயிற் கடைத்தலைநிறைந்தசீரான்.

96 உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ் சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீப சாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடு தொங்கலுங்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்று மியங்கினவீதியெல்லாம்.

97 தூயதிண்பளிங்கிற்செய்த சுவர்களின்றலத்திற்சுற்றும்
நாயகமணியிற்செய்த நனிநெடுந்தூணினுப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோர் த்யாவுறக்கைவில்லோடும்
ஆயிரமைந்தர்வந்தா ருளரெனப்பொலிந்ததவ்வூர்.

98 அங்கதன்பெயர்த்தும்வந்தாண் டடியிணைதொழுதானைய
எங்கிருந்தானுங்கோமா னென்றலுமெதிர்கோளெண்ணி
மங்குறோய்கோயிற்கொற்றக் கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீர செய்தவச்செல்வனென்றான்.

99 சுண்ணமுந்தூசும்வீசிச் சூடகத்தொடிக்கைமாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக் காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்ன வெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க் கவிக்குலத்தரசன்வந்தான்.

100 அருக்கியமுதலவாய வருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்த முரசினமுகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோத விசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வநோக்கித் தேவருமருளச்சென்றான்.

101 வெம்முலைமகளிர்வெள்ள மீனெனவிளங்கவிண்ணில்
சும்மைவான்மதியங்குன்றிற் றோன்றியதெனவுந்தோன்றிச்
செம்மலையெதிர்கோளெண்ணித் திருவொடுமலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்த தாதையுமனையனானான்.

கலிவிருத்தம்.

102 தோற்றியவரிக்குலத் தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கின னெழுந்ததவ்வழிச்
சீற்றமங்கதுதனைத் தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தி னமைதியுன்னுவான்.

103 எழுவினுமலையினு மெழுந்ததோள்களால்
தழுவினரிருவருந் தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங் குழாத்தினோடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத் துறையுளெய்தினார்

104 அரியணையமைந்தது காட்டியையவீண்
டிருவெனக்கவிக்குலத் தரசனேவலும்
திருமகடலைமகன் புல்லிற்சேரவெற்
குரியதோவீதென மனத்தினுன்னுவான்.

105 கல்லணைமனத்தினை யுடைக்கைகேசியால்
எல்லணைமணிமுடி துறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான் பொன்செய்பூந்தொடர்
மெல்லணைவைகவும் வேண்டுமோவென்றான்.

106 என்றவனுரைத்தலு மிரவிகாதலன்
நின்றனன்விம்மினன் மலர்க்கணீருகக்
குன்றெனவுயர்ந்தவக் கோயி*ற்குட்டிம
வன்றலத்திருந்†தனன் மனுவின்கோமகன்.

107 மைந்தருமுதியரு மகளிர்வெள்ளமும்
அந்தமிலோக்கின ரழுதகண்ணினர்
இந்தியமவித்தவ ரென்னநின்றனர்
நொந்தனர்தளர்ந்தனர் நுவல்வதோர்கிலர்.

* னின்றனன் எனவும் பாடம். † திலன் வாய்மைநோக்கியே எனவும் பாடம்.

108 மஞ்சனவிதிமுறை மரபினாடியே
எஞ்சலிலின்னமு தருந்தின்யாமெலாம்
உய்ஞ்சனமினியென வாசுரைத்தலும்
அஞ்சனவண்ணனுக் கனுசன்சொல்லுவான்.

109 வருத்தமும்பழியுமே வயிறுமீக்கொள
இருத்துமென்றாலெமக் கினியதியாவதோர்
அருத்தியுண்டாயினு மவலந்தான்றழீஇக்
கருத்துவேறற்றபி னமிழ்துங்கைக்குமால்.

110 மூட்டியபழியெனு முருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீ ராசன்றேவியைக்
காட்டினையெனினெமைக் கடலினாழ
தூட்டினையாற்பிறி துயிருமில்லையால்.

111 பச்சிலைகிழங்குகாய் பரமனுங்கிய
மிச்சிலேநுகர்வது வேறுதானொன்றும்
நச்சிலேனச்சினே னாயினாயுண்ட
எச்சிலைநுகர்வதே யையமில்லையால்.

112 அன்றியுமொன்றுள தையயானினிச்
சென்றனென்கொணர்ந்தடை திருத்தினாலது
நுன்றுணைக்கோமக னுகர்வதாதலான்
இன்றிறைதாழ்த்தலு மினிதன்றாமென்றான்.

113 வானரவேந்தனு மினிதின்வைகுதல்
மானவர்தலைமக னிடரின்வைகவே
ஆனதுகுரக்கினத் தெமர்கட்காமெனா
மேனிலையழிந்துயிர் விம்மினானரோ.

114 எழுந்தனன்பொருக்கென விரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன் வெறுத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தைய னனுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரன்முறை போகன்முன்னுவான்.

115 போயினதூதரிற் புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதி நெறிவலோயென
ஏயினனனுமனை யிருத்தியீண்டென
நாயகனிருந்துழீஇக் கடிதுநண்ணுவான்.

116 அங்கதனுடன்செல வரிகண்முன்செல
மங்கையருள்ளமும் வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற் றழுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன் கடிதுசென்றனன்.

117 ஒன்பதினாயிர கோடி யூகந்தன்
முன்செலப்பின்செல ஞாங்கர்மொய்ப்புற
மன்பெருங்கிளைஞரு மருங்குசுற்றுற
மின்பொருபூணினான் செல்லும்வேலையில்.

118 கொடிவனமிடைந்தன குமுறுபேரியின்
இடிவனமிடைந்தன பணிலமேங்கின
தடிவனமிடைந்தன தயங்குபூணொளி
பொடிவனமெழுந்தன வானம்போர்த்தவே.

119 பொன்னினன்முத்தினிற் புனைமென்றாரினின்
மின்னினமணியினிற் பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும் பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண் கவிகைசுற்றின.

120 வீரனுக்கிளையவன் விரும்புசேவடி
பாரினிற்சேறலிற் பரிதிமைந்தனும்
தாரினிற்பொலங்கழ றழங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன் சிவிகைபின்செல.

121 எய்தினன்மானவ னிருந்தமால்வரை
நொய்தினிற்சேனைபின் பொழியகோன்கழல்
ஐயவிற்குமாரனுந் தானுமங்கதன்
கைதொடர்ந்தயல்செலக் காதன்முன்செல.

122 கண்ணியகணிப்பருஞ் செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழ வணையுமன்பினால்
நண்ணியகவிக்குலத் தரசனேடொறும்
புண்ணியர்தொழுகழற் பரதன்போன்றனன்.

123 பிறிவருந்தம்பியும் பிரியப்பேருல
கிறுதியிற்றனென விருந்தவேந்தலை
அறைமணித்தாரினே டாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடி முடியிற்றீண்டினான்.

124 தீண்டலுமார்பிடைத் திருவுநோய்வுற
நீண்டபொற்றடக்கையா னெடிதுபுல்லினான்
மூண்டெழுவெகுளிபோ யொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதந் திருக்கையேவினான்.

125 அயலினிதிருத்திநின் னரசுமாணையும்
இயல்பினினியைந்தவே யினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீ புரக்கும்பல்லுயிர்
வெயிலிலதேகுடை யெனவிளம்பினான்.

126 பொருளுடையவ்வுரை கேட்டபோழ்துவான்
உருளுடைத்தேரினோன் புதல்வனூழியின்
இருளுடையுலகினுக் கிரவியன்னநின்
அருளுடையேற்கவை யரியவோவென்று.

127 பின்னரும்விளம்புவான் பெருமையோய்நின
தின்னருளுதவிய செல்வமெய்தினேன்
மன்னவநின்பணி மறுத்துவைகியென்
புன்னிலைக்குரக்கியல் புதுக்கினேனென்றான்.

128 பெருந்திசையனைத்தையும் பிசைந்துதேடினன்
தருந்தகையமைந்துமத் தன்மைசெய்திலேன்
திருந்திழைதிறத்தினாற் றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருக்கயான் வாழ்வின்வைகினேன்.

129 இனையனயானுடை யியல்புமெண்ணமும
நினைவுமென்றாலினி நின்றியான்செயும்
வினையுநல்லாண்மையும் விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசிலை வள்ளியோயென்றான்.

130 திருவுறைமார்பனுந் தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன் னுரிமையோருனை
தருவினைத்தாகையிற் றாழ்விற்றாகுமோ
பரதனீயினையன பகரற்பாலையோ.

131 ஆரியன்பின்னரு மமைந்துநன்குணர்
மாருதியெவ்வழி மருவினானெனச்
சூரியன்கான்முளை தோன்றுமாலவன்
நீரும்பரவையி னெடிதுசேனையான்.

132 கோடியோராயிரங் குறித்தகோதிறா
தோடினநெடும்படை கொணரவுற்றவால்
நாடரக்குறித்தது மின்றுநாளையவ்
வாடலந்தானையோ டவனுமெய்துமால்.

133 ஒன்பதினாயிர கோடியுற்றது
நின்பெருஞ்சேனையந் நெடியசேனைக்குந்
நன்*குறுமவதிநா னாளைநண்ணிய
பின்செயத்தக்கது பேசற்பாற்றென்றான்.

134 விரும்பியவிராமனும் வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோ வமைதிநன்றெனாப்
பெரும்பகலிறந்தன பெயர்திநின்படை
பொருந்துழிவாவெனத் தொழுதுபோயினான்.

135 அங்கதற்கினியன வருளியையபோய்த்
தங்குதியுந்தையோ டென்றுதாமரைச்
செங்கணான்றம்பியுந் தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழி யன்றுவைகினான்.

* பெயரவதி என்றும் பாடம்.

136 சேயுயர்கீர்த்தியான் கதிரின்செம்மல்பாற்
போயதுமவ்வயிற் புகுந்தயாவையும்
ஒய்வுறுதுணர்த்தென வுணர்த்தினனரோ
வாய்மையாவுணர்வுறு வலியமொய்ம்பினோன்.

8-வது. கிட்கிந்தைப்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 139-ல் 136.



## 9-வது. தானைகாண்படலம்.



*தன்னுடைய அநுஜ்ஞையினால் மஹாராஜா வருவித்த வானரப்படையைக் காட்ட, ஸ்ரீராமபிரான் கண்டருளியதைக் கூறும் படலம்.*

இதனில் அடங்கிய கதை:—அன்று அங்குத் தங்கிச் சூரிய உதயத்துக்கு முன் தூதர்கள் அழைக்கச் சேனைகள் வந்தன. அவற்றில், பத்திலக்ஷம் யானை வலியமைந்த வானரத்தலைவர் சேர்ந்துவரப் பதினாயிரகோடி குரங்குப்படையோடு சதவலியும், மேருவை யெடுக்கத்தகுந்த வலியமைந்த பத்திலட்ச கோடி வானரசேனையோடு தாரையின் பிதாவாகிய சுசேடணனும், நாற்பத்தெண்ணாயிரகோடி வானரப்படையோடு சுக்கிரீவன்தேவியாகிய உருமையின் பிதாவும், ஐம்பதுலட்சகோடி வானரப்படையுடன் அனுமான் பிதாவாகிய கேசரியும், ஆயிரகோடி கரடிப்படையுடன் இடும்பனும், ஆயிரகோடி வானரப்படையுடன் கவயாட்சனும், பன்னீராயிரகோடி வானரப்படையோடு பனசனும், ஐம்பதுகோடி வானரசேனையோடு நீலனும், முப்பதுகோடி வானரசேனையோடு ததிமுகனும், முப்பதினாயிரகோடி வானரசேனாசமுத்திரத்தோடு கவயனும், ஆயிரத்தறுநூறுகோடி வானரப்படையோடு சாம்பனும், இருநூறிலட்சகோடி சேனையோடு துன்முகனும், தத்தமக்குரிய சேனைகளுடனே துமிந்தன், கஜமுகன், குமுதன், பதுமுகன், இடபன், தீர்க்கபாதன், வினதன், சரபன் ஆகிய இவர்களும் வந்து சேர்ந்தார்கள். நின்ற இடத்தில் பூமிசாயும்படி திரியும் இருபத்தையாயிரகோடி வானரசேனையோடு* அழகியகரங்கள் ஆயிரமுடைய சூரியனைக்கண்டும் உடல் அஞ்சாதவனாகிய அநுமானும், தெய்வத்தச்சன் குமாரனாகிய நளனும் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் யாவரும் எழுகடலின் விரிவைப் பார்க்கினும் விரிவையுடையதென்னும்படி நிறைந்த படையையுடையார்களாய், சுக்கிரீவனுடைய பாதங்களில் மலர்களைத்தூவி வாழ்க வாழ்க வென்று வாழ்த்துக் கூறிவந்து வணங்கி நிற்குதலும், மஹாராஜா பொருக்கென எழுந்துசென்று நினது சேனை வந்ததென்று ஸ்ரீராமபிரான் சந்நிதியில் விண்ணப்பஞ்செய்து அதனைப்பார்த்தருளுக என்று வேண்டலும், அவ்வேண்டுகோளின்படி அவர் ஒரு மலையின் சிகரத்தில் எழுந்தருளித் தம்பியாரோடும் நோக்கி, பிராட்டியாரைக் கண்டாற்போலத் திருவுளம் உவந்தனர். அதுகண்டு சுக்கிரீவன்

* பஞ்சாயுதகரனாகிய ஸ்ரீமந்நாராயணனையே தியானித்த நெஞ்சினனாய், எதற்கும் அஞ்சாதவனாகிய அநுமானும் எனப்பொருள் படும் பாடமுமுண்டு.

மீண்டும் சேனையை அடைந்து அப்படையில் உள்ள வானர சேனாதிபதிகளை அழைத்துவந்து ஸ்ரீராமபிரானுக்குக் காட்டி, அப்படைகளைப் பார்த்தருளவேண்டுமென்று இராமலக்ஷ்மணர் இருவருக்கும் கூற, ஸ்ரீராமபிரான் இந்தச் சேனையின் திரண்ட உருவத்தைக் கண்டோமேயொழிய முடிவுகாணும் விதம் உண்டோ என்று கூறி, நாராயணனுடைய திருமேனியையும், ஐம்பெரும்பூதங்களையும், பேரறிவை உணர்த்தும் ஞானவாசகங்களையும், இப்படையையும், சமயங்கள் ஒன்றுகொன்று மாறுபடுவதையும், பத்துத்திசைகளையும் முடிவுகாண வல்லவர்கள் யாவரென்று அருளிச்செய்ய, இளைய பெருமாள் இச்சேனையை இங்கிருந்து முடிவுகண்டபின் நமது காரியத்தைச் செய்ய முயல்வோமாயின் பலநாள் கழியும். உலகத்தில் எக்காரியம் இவர்களுக்கு இயற்றக்கூடாதது? இனி நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி முயல்வதே தகுதி. பாவந் தோல்வியடைந்தது, தருமமே வெற்றிகொண்டது. இனி இங்கிருந்து தாமதிப்பதினால் பயனென்னை? தேட வல்லவர்களை எட்டுத்திக்கிலும் செலுத்தவேண்டுமே என்று சொல்ல, அதுகேட்டருளிய ஸ்ரீராமபிரான் மஹாராஜனை நோக்கிச் சொல்லியருள்வானாயினான் என்பது.

1 அன்றவணிருந்தன னலரிநெட்டிசைப்
பொன்றிணிநெடுவரை பொலியமுதமுன்
வன்றிறற்றாதுவர் கொணரவானரக்
குன்றுறழ்நெடும்படை யடைந்தகூறுவாம்.

கலிநிலைத்துறை

2 ஆனையாயிர மாயிரத்தெறுழ்வலியமைந்த
வானராதிப ராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங் கையிரண்டாயிரகோடித்
தானையோடுமச் சதவலியென்பவன்சார்ந்தான்.

3 ஊன்றிமேருவை யெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டு தெளிவுறுவானரசேனை
ஆன்றபத்துநா றுயிரகோடியோடமைந்த
தோன்றினான்வந்து சுசேடணனெனும்பெயர்த்தோன்றல்.

4 ஈறில்வேலையை யிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந் திறல்கெழுவானரசேனை
ஆறெண்ணாயிர கோடியதுடன்வரவமுதம்
மாறிலாமொழி யுருமையைப்பயந்தவன்வந்தான்.

5 ஐம்பதாயனா றுயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரை புரைநெடுவானரமொய்ம்பப
இப்பர்ஞாலத்தும் வானத்துமெழுதியசீர்த்தி
நம்பனைத்தந்த கேசரிகடலெனநடந்தான்.

6 மண்கொள்வாளெயிற் றேனத்தின்வலியனவயிரத்
திண்கொண்மால்வரை மயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்களாயிர கோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண் டெறுழ்வலியிடும்பன்வந்திறுத்தான்

7 முனியுமாமெனி னருக்கனைமுரணறமுருக்கும்
தனிமைதாங்கிய வுலகையுஞ்சலம்வரிற்குமைக்கும்
இனியமாக்குரங் கீண்டியவாயிரகோடி
அனிகமுன்வர வான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான்.

8 தனிவருந்தடங் கிரியெனப்பெரியவன்சலத்தால்
நினையுநஞ்சென வுருமெனநடுக்குறுநிலையன்
பனசனென்பவன் பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சின வானரப்படைகொடுபுகுந்தான்.

9 இடியுமாக்கடன் முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
முடிவிற்பேர்முழக் குடையனவிசையனமுரணிற்
கொடியகூற்றையு மொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப் படைகொண்டுபுகுந்தனனீலன்.

10 மாகரத்தன வுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங் கண்ணுமிழ்வெயிலனமலையின்
ஆகரத்தினும் பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடு ததிமுகனென்பவன்சார்ந்தான்.

11 இளைத்துவேறொரு மாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதி னாயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத் தரியினம்வெருவுறவிரிந்த
அளக்கரோடுக வயனெனும்பெயரான்வந்தடைந்தான்.

12 ஆயிரத்தறு நூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும் படைகொடுபேரவையிற்றிணையிற்
றாயுருத்துட னேவாத்தடநெடுவரையை
ஏயுருப்புயச் சாம்பனென்பவனும்வந்திறுத்தான்.

13 வகுத்ததாமரை மலரயனிசிசரர்வாழ்நாள்
உகுத்திநீயெனப் பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூ றுயிரப்பத்தினிலிரட்டி
தொகுத்தகோடிவெம் படைகொடுதுன்முகன்றொடர்ந்தான்.

14 கோடிகோடிநூ றுயிரமெண்ணனகுவிந்த
நீடுவெஞ்சினத் தரியினமிருபுடைநெருங்க
மூடுமும்பரு மிம்பரும்பூழியின்மூழ்நத்
தோடலர்ந்ததார்க் கிரிபுரைதுமிந்தனுந்தொடர்ந்தான்.

15 இயைந்தபத்துநூ றுயிரப்பத்தெனுமிரட்டி
உயர்ந்தவெஞ்சின வானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொரு வடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கச கோமுகன்றன்னொடுவந்தான்.

16 கறங்குபோல்வன காற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக் கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானர மொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப் படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான்

17 ஏழினேழுநூ றுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந் தோள்கிளர்படைகொடுபனை
ஊழிபேரினு முலவிலவுலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப் பதுமுகனென்பவன்புகுந்தான்.

18 ஏழுமேழுமென் றுரைக்கின்றவுலகங்களனைத்தும்
தாழுங்காலத்துந் தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்த வலிகெழுதொளாயிரகோடிப்
பாழிவெம்புயத் தரிகளொடிடபனுமடர்ந்தான்.

19 தீர்க்கபாதனும் வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
ஆர்க்கருங்கடற் குயர்ந்துளமைம்முகத்தனிகம்
ஆர்க்குமெண்ணருங் கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின் மறைதரமுறையினிற்புகுந்தார்.

20 *கையஞ்சாசர முடையவக்கடவுளைக்கண்டும்
மெய்யஞ்சாதவன் மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வையஞ்சாய்வரத் திரிதருவானரச்சேனை
ஐயஞ்சாயிர கோடிகொண்டநுமன்வந்தடைந்தான்.

21 நொய்திற்கூடிய சேனைநூறாயிரகோடி
எய்தததேவரு மென்கொலோமுடிவென்பதெண்ண
மையற்சிந்தையா லந்தகன்மறுகுற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த் திருநெடுங்காதலன்சேர்ந்தான்.

22 கும்பனுங்குலச் சங்கனுமுதலினர்குரங்கின்
தம்பெரும்படைத் தலைவர்கடாவந்ததானை
இம்பர்நின்றவாக் கெண்ணரிதிராகவனுமத்
தம்பெனுந்துணைக் குரியமாறுணைப்பரிதளவே.

23 தோயினுழியோ ரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமு மேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டல மெள்ளிடவிடமின்றியிரியும்
காயின்வெங்கனற் கடவுளுமிரவியுங்கரியும்.

24 எண்ணினுன்முக ரெழுபதினுயிரர்க்கியலா
உண்ணினண்டங்க ளோர்பிடியுண்ணவுமுதவா
கண்ணினேக்குறிற் கண்ணுதலானையுங்கடக்கும்
மண்ணின்மேல்வந்த வானரசேனைபின்வரம்பே.

25 ஒடிக்குமேல்வட மேருவைவேரொடுமொடிக்கும்
இடிக்குமேனெடு வானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங் காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கட லேழையும்வறள்படக்குடிக்கும்.

26 ஆறுபத்தெழு கோடியாம்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக் கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவ னினைத்தனமுடிக்குறும்வலியர்
ஊறுமிப்பெருஞ் சேனைகொண்டெளிதின்வந்துற்றார்.

---

* கையஞ்சாயுத முடையவக்கடவுளைக்கருதா எனவும் பாடம்.

27 எழுமாக்கடற் பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
சூழும்வானரப் படையொடவ்விருந்தோன்றி
ஆழிமாப்பரித் தேரவன்காதலனடியில்
வாழிவாழியென் றுரைத்தலர்தூவினன்வணங்கி.

28 அனையதாகிய சேனைவந்திறுத்தலுமருக்கன்
தனையனெய்தினிற் றயரதன்புதல்வனைச்சார்ந்தான்
நினையுமுன்னம்வந் தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவ கண்டருளியெனவிளம்பா.

29 ஐயனும்முவந் தகமெனமுகமலர்ந்தருளித்
தையலாள்வரக் கண்டனனுமெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கொர் நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன் பெயர்த்துமச்சேனையின்மீண்டான்.

30 அஞ்சொடையிரண் டியோசனையகலத்ததாகிச்
செஞ்செவேவட திசைநின்றுந்தென்றிரைச்சேலை
எஞ்சலில்பெருஞ் சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படை வீரரையுடன்கொண்டுமீண்டான்

31 மீண்டிராமனை யடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயென வரன்முறைநெறிவுறக்காட்டி
ஆண்டிருந்தன னார்த்துனைத்தெழுந்தையன்றோ
ஈண்டுசேனையா யெறிகடனெறிபடாதென்ன.

32 எட்டுத்திக்கையு மிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்டவிண்ணையு மறிகடலனைத்தையுமறைப்பத்
தொட்டுமேலெழுந் தோங்கியதுளியின்பூழி
இட்டுச்செம்மிய நிறைகுடமொத்ததிவ்வண்டம்.

33 அத்தியொப்பெனி னன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினி யுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன் பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினு நடுவுகண்டிலாமுடிவெவனோ.

34 விண்ணிற்றீம்புன லுலகத்தினுகரின்வெற்றி
எண்ணிற்றன்னல தொப்பிலனெனநின்றவிராமன்
கண்ணிற்சிந்தையிற் கல்வியின்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியை நோக்கினனுரைசெய்வதானுன்.

35 அடல்கொண்டோங்கிய சேனைக்குநாமுநம்மறிவான்
உடல்கண்டோமினி முடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கிய வலங்கலாய்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பர் யாவரேமுடிவுறக்கண்டார்.

36 ஈசன்மேனியை யீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையை யைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச் சமயங்கள்பிணக்குறும்பிணக்கை
வாசமாலையா யாவரேமுடிவெண்ணவல்லார்.

37 இன்னசேனையை முடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம் புரிதுமேனுள்பலபெயரும்
உன்னிச்செய்கைமே லொருப்படலுறுவதேயுறுதி
என்னவீரனைக் கைதொழுதிளையவனியம்பும்.

38 யாவதெவ்வுல கத்தினினீங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவ தரியதொன்றுளதெனலாமே
தேவதேவியைத் தேடுவதென்பதுசிறிதால்
பாவந்தோற்றது தருமமேவென்றதிப்படையால்.

39 தரங்கநீரெழுந் தாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருல கத்தினின்மற்றைமன்னுயிர்கள்
உரங்கொண்மால்வரை யுயிர்படைத்தெழுந்தனவொக்கும்
குரங்கின்மாப்படைக் குறையிடப்படைத்தனன்கொல்லாம்.

40 ஈண்டுதோழ்க்கின்ற தென்னினியெண்டிசைமருங்கும்
தேண்டுவார்களை வல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலா யென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன் காதலற்கொருமொழிபுகலும்.

9-வது. தானைகாண்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம். 40.



# 10-வது. நாடவிட்டபடலம்.

அதாவது சக்கரவர்த்தி திருமகனுடைய ஆணைப்படி மகாராஜா வானரப்படைத்தலைவர்களைப் பிராட்டியாரைத் தேடவிடுத்த செய்தியை உணர்த்தும் படலம்.

இதனில் அடங்கிய சரிதையாவது:—ஸ்ரீராமபிரான் சூரியபுத்திரனை நோக்கி, வகுப்பும், கணக்கும், மாறுபட்டு எதிர்ந்து போர்செய்யும் பகையுமில்லாமல் முறையாகநின்று, தடுப்பார் யாருமில்லாமல் வந்த வீரர்க்கு அளவாக ஏற்பட்ட தொகையுமுண்டோவென்று வினவுதலும், பெற்றுள்ளபடை எழுபதுவெள்ளமென்று கணிதத்தில் வல்லவருடைய அறிவினாலமைத்துச் சொல்வதாகிய சொல்லுளது. அப்படிச் சொல்வதல்லாமல் வேறாகக் குணிக்குஞ்சொல்லேற்றி எண்ணிச்சொல்வாரிலர்? இப்படைக்குச் சிறந்த படைத்தலைவர் அறுபத்தேழுகோடி; இவர்க்கு முதல்வனாகிய பெரும்படைத்தலைவன் நீலனென்றுசொல்லினான். இவ்வாறு சொல்லிய மகாராஜனை ஸ்ரீராகவபிரான் நோக்கி, முயற்சியைவிட்டுப் பல பேசிப் பயன்யாதோ? வழியே போய்ச் செய்யத்தகுந்த காரியங்களை எண்ணக்கடவையென்று திருவாய் மலர்ந்தருளினர். அக்கவிநாயகனும் உயர்குணமுள்ள அனுமானை நோக்கி, ஐயனே! நீ மூவகையுலகங்களிலும் உன் பிதாவாகிய வாயுவைப்போலப் புகுந்து திரிகின்ற மிக்கவேகத்தையுடையாய். அதனை உணராமல் வாளா இருந்து மற்றைவானரர்களுடைய செய்கையைக்காண இருக்கின்றாயோ? நீசென்று, பிராட்டி இருந்த இடத்தைப் பாதாளலோகத்திலும், பூமியிலும் தேடக்கடவாய். சுவர்க்கலோகத்திலும் தேடவல்ல நினது வேகம் இப்போது வெளிப்படவேண்டும். இராவணனுடைய பெரிய நகரம் தெற்கிலுள்ளதென என் அறிவில் தோன்றுகின்றது; மாருதியே! அந்த வலியுள்ள திசைக்குச் சென்று அங்குள்ளாரை வெற்றிகொண்டு கீர்த்திபெறத்தகுந்தவன் நின்னையல்லால் பிறன்வேண்டுமோ? தனது பெருஞ்செல்வத்தை ஈய வல்ல வள்ளலாகிய நம்பெருமானுடைய தேவியை வஞ்சித்த அரக்கன் செல்லக்கண்டது தென்றிசையெனக் கருதுகின்ற கருத்தும் எனக்குளதாக ஞாபகம் தோன்றாநிற்கும். அங்கதன் சாம்பன் முதலிய படைத்தலைவர் நின்னுடன் வரக்கடவர். முறைமைப்படி வலியமைந்த இரண்டுவெள்ளஞ் சேனையும் உடன் கொண்டுபோகக்கடவை. மேற்றிசையில் இடபனும், வடதிசையில் சதவலியும், கீழ்த்திசையில் வினதனும், வெற்றிதருகின்ற இவ்விரண்டுவெள்ளம் வானரப்படைகளோடு போய்வரக்கடவர்கள். நீவிரெல்லீரும் சுற்றி ஓடித்தேடி ஒருமாதம் முடிவதற்குமுன் இங்கு வந்து சேரக்கடவீர். இங்குநின்று புறப்பட்டு, அழகிய ஆயிரஞ்சிகரந் தோன்றுதலால திருமாலோ என்று தொழ யாம் விரும்புகின்ற விந்தமலையைச்சேர்ந்து, நருமதையாற்றைச்சார்ந்து, ஏமகூடமலையையடைந்து, அங்குநின்றுபோய், நகராவென்னும் பொய்கையைச்சேர்ந்து, திருமகளாகிய ஜானகிபிராட்டியைப் பெரிய பெண்ணையில் சிலதினந்தேடி, விதர்ப்பதேசஞ் சென்று, தண்டகாரணியஞ்சேர்ந்து தேடி, அதன்புறத்தில் முண்டகத்துறையென்னும் சோலையைச்சார்ந்து அங்குந் தேடி, பாண்டுமலையைச்சேர்ந்து, கோதாவிரியாறு வருகின்ற அம்மலையைக் கடந்து, ஆறுமுகங்களையுடைய முருகன்வளர்ந்த சுவணநதியைக் கடந்து,

சூரியகாந்தமலையையும், அதை ஒத்த சந்திரகாந்தமலையையும் கண்டு நீங்கி, பல நாடுகளைக்கடந்து, கொங்கணத்தையும், குலிந்தத்தையும் கண்டு, பாலையையும், பல நதிகளையும், மலைகளையும் வாவிகளையும் கடந்து, மரகதமலையைத்தாண்டிச் சென்று, வடமொழிக்கும் தென்மொழிக்கும் எல்லையாகி நிலங்கடந்த நெடுமுடியண்ணலுக்கு உறையிடனாய்நிற்கும் திருவேங்கடத்தையடைந்து சென்று, தொண்டைநாடு கடந்து, மிகுந்த நீர்வளமுள்ள காவிரிநதியின் இரண்டுகரையையும் கடந்துபோய்ச் சோழநாட்டையடைந்து, மலைநாட்டைக் கிட்டிப்போய், பொருநையாற்றைத் தாவி, பொதியமலையடைவீர். அது எஞ்ஞான்றும் அகத்தியமுனி உறைவிடமாதலால் அதனை வணங்கிச் சென்று, யானையின் இளங்கன்றுகள் வளர்கின்ற மகேந்திரமலையையும் அதன் சாரலில் தென்கடலையும் காண்பீர் என்று கூறினன். ஸ்ரீராகவபிரான் அனுமானைத் தனியிடத்தில் அழைத்துச் சென்று, பிராட்டியினுடைய கேசாதிபாதபரியந்தம் அவயவங்களின் அடையாளக்குறிப்பைச் சுட்டிச்சொல்லி, முன்னாளிலே விசுவாமித்திர முனிவனோடு மிதிலாநகரத்து அரசன் வேள்வியைக் காணும்படி வந்தபோது அன்னமாடுகின்ற அகழியின் முன்துறையில் கன்னிகாமாடத்தின் சாளரவாயிலில் தான் நிற்க யான் கண்டதையும், பின்பு திரியம்பகமென்னும் வில்லை முறித்தவன் விசுவாமித்திரனோடுவந்த ஆண்மகன் அல்லானேல் என் உயிர் மாய்வேனென்று அளவில்லாத காதலோடுசொல்லியதையும், காட்டுக்குப் போகையில் அயோத்திமாநகரின் கோபுரவாயிலைக் கடத்தலும் எல்லையில்லாத காடு யாதென்று வினவியதுமாகிய பல அடையாளமொழிகளைச் சொல்லி விரலாழியையும் தந்து நீ செல்லுங்காரியமெல்லாம் முட்டுப்பாடில்லாமல் முடிகவென்று ஆசீர்வதித்துவிடுக்க அனுமான்முதலிய படைவீரர் விடைபெற்றுச் சென்றனர் என்பது.

கலிவிருத்தம்.

1 வகையுமானமு மாறெதிர்ந்தாற்றுறும்
பகையுமின்றி நிரைந்துபரந்தெழும்
தகைவில்சேனைக் கறுதிசமைத்ததோர்
தொகையுமுண்டுகொ லோவெனச்சொல்லினன்.

2 ஏற்றவெள்ள மெழுபதினிற்றவென்
றுற்றலாள ரறிவினமைத்ததோர்
மாற்றமுண்டது வல்லதுமற்றுமோர்
தோற்றமென்றிதற் கெண்ணிமுன்சொல்வரோ.

3 ஆறுபத்தெழு கோடியனீகினிக்
கேறுகொற்றத் தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப் பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடு நீலனென்றோதினன்.

4 என்றுரைத்த வெரிகதிர் மைந்தனை
வென்றிவிற்கை யிராமன் விருப்பினால்
நின்றினிப்பல பேசியென்றேநெறி
சென்றிழைப்பன சிந்தனைசெய்கென்றான்.

5 அவனுமண்ண லனுமனையையநீ
புவனமூன்றுநின் றுதவிப்புக்குறல்
தவனவேகத்தை யோர்கிலை தாழ்க்கலை
கவனமாக்குராங் கின்செயல் காண்புமோ

6 எகியெந்திழை தன்னையிருந்துழி
நாகநாடுக நாவிலநாடுக
போகபூமி பொருந்திடவல்லநின்
வேகமீண்டு வெளிப்படவேண்டுமால்.

7 தென்றிசைக்க ணிராவணன்சேனைகள்
என்றிசைக்கின்ற தென்னறிவின்னணம்
வன்றிசைக்கினி மாருதிநீயலால்
வென்றிசைக்குரி யாபிறர்வேண்டுமோ.

8 வள்ளறேவியை வஞ்சித்தவெவ்விய
கள்ளவாளரக் கன்செலக்கண்டது
தெள்ளியோயது தென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக் குண்டெனவுன்னுவாய்.

9 தாரைமைந்தனுஞ் சாம்பனுநீலனும்
வீரர்யாவரு மேம்படுமேன்மையார்
சேர்கநின்னொடுந் திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ள மிரண்டொடும்பெற்றியால்.

10 குடதிசைக்கண் ணிடபன்குபேரன்வாழ்
வடதிசைக்கட் சதவலிவாசவன்
இடதிசைக்கண் வினதன்விறற்றரு
படையொடுற்றுப் படர்கெனப்பணித்தனன்.

11 வெற்றிவானர வெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித் துருவியொருமதி
முற்றுறுதமுன் முற்றுதிரிவ்விடை
கொற்றவாகையி னீரெனக்கூறினுன்.

12 ஈண்டுநின்றிறந் திரைந்துநூறெழில்
தூண்டுசோதிக் கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொ லாமெனநேர்தொழ
வேண்டும்விந்த மலையினைமேவுவீர்.

13 தேடியவ்வரைத் தீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்ற நறுபதமைந்திணைப்
பாடுகின்றது பன்மணியாலிருள்
ஓடுகின்ற நருமதையுன்னுவீர்.

14 வாமமேகலை வானரமங்கையர்
காமப்பூசற் களியிசைக்கள்ளினுல்
தூமமேனி யசுணந்துயில்வுறும்
ஏமகூட மெனுமலையெய்துவீர்.

15 நொய்தினம்மலை நீஇநுகாரவெனும்
பொய்கையின்கரை பிற்படப்போதிரால்
செய்யபெண்ணுக் கரியபெண்ணைச்சில
வைகதேடிக் கடிதுவழிக்கொள்வீர்.

16 தாமகுமாரகிற் றண்ணறுஞ்சந்தனம்
வீங்குவேலி விதர்ப்பமுமெல்லென
நீங்கிநாடு நெடியனபிற்படத்
தேங்குவார்புனற் றண்டகஞ்சேர்திரால்.

17 பண்டகத்தியன் வைகியதாப்பகர்
தண்டகத்தது தாபதர்தம்மையுட்
கண்டகத்துயர் தீர்வுறுகாண்டிரால்
முண்டகத்துறை யென்றொருமொய்ம்பொழில்.

18 ஞாலநல்லறத் தோருண்ணுநற்பொருள்
போலநின்று பொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர் வாயெனத்தீங்கனி
காலமின்றிக் கனிவதுகாண்டியால்.

19 நயனநன்கிமை யார்துயிலார்நனி
அயனமில்லை யருக்கனுக்கவ்வுழிச்
சயனமாதர் கலவித்தலைத்தரும்
பயனுமின்பமு நீரும்பயக்குமால்.

20 ஆண்டிறந்துபின் னந்நரந்நிற்றலைத்
தீண்டுகின்றது செங்கதிர்ச்செல்வனை
ஈண்டுறைந்தல தேகலமென்பது
பாண்டுவின்மலை யென்னும்பருப்பதம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

21 முத்தீர்த்துப்பொன்றிரட்டி மணியுருட்டி
முறுநீத்த முன்றிலாயர்
மத்தீர்த்துமாணீர்ந்து மலையீர்ந்து
மாணீர்த்து வருவதியாக்கும்
பூத்தீர்த்திட்டலையாமற் புலவர்நா
டேநவுவது புனிதமான
அத்தீர்த்தமகன்கோதா விரியென்ப
ரம்மலையி னருகிற்றம்மா.

22 அவ்வாறுகடந்தப்பா லறத்தாறே
யதுதெரிந்த வருளினானும்
வெவ்வாறுமெனக்குளிர்ந்து வெயிலியங்கா
வகையியங்கும் விரிபூஞ்சோலை
எவ்வாறுமுறத்துவன்றி யிருளோட
மணியிமைப்ப நிமையோர்வேண்டத்
தெவ்வாறுமுகத்தொருவன் றனிக்கிடந்த
சுவணத்தைச் சோதிமாதோ.

23 கவணதிகடந்தப்பாற் சூரியகாந்
தகமென்னத் தோன்றிமாதர்
கவணுமிழ்கல்வெயிலியங்குங் கனவரையுஞ்
சந்திரகாந் தகமுங்காண்டிர்
அவணவைநீத்தேகியபின் னகனுடு
பலகடந்தா லநந்தனென்பான்
உவணபதிக்கொளித்துறையுங் கொங்கணமும்
குலிந்தமுஞ்சென் றுறுதிர்மாதோ.

24 ஆனதிகனுலகளந்த வரியநிக
னென்றுரைக்கு மறிவிலார்க்குப்
பாகதிசென்றடைவரிய பரிசேபோற்
புகலரிய பண்பிற்றாமால்
மாநதியினயலதுவான் றேய்குடுமிக்
கடர்ந்தொகைய தொழுதோர்க்கெல்லாம்
வானதிகந்தருந்தகைய வருந்ததியா
நெடுமலையை வணங்கியப்பால்.

25 அஞ்சிவரும்வெஞ்சுரனு மாறுமுகன்
பெருஞ்சுனையு மகிலோங்கார
மஞ்சிவருநெடுங்கிரியும் வளநாடும்
பிற்படப்போய் வழிமேற்சென்றால்
நஞ்சவருமிடற்றரவுக் கழுதுநனி
கொடுங்காயைக் கலுழனண்ணும்
எஞ்சின்மரகதப்பொருப்பை யிறைஞ்சியதன்
புறஞ்சார வேகிர் மாதோ.

26 வடசொற்குந்தென்சொற்கும் வரம்பிற்றாய்
நான்மறையு மற்றைநூலும்
இடைசொற்றபொருட்கெல்லா மெல்லையதாய்
நல்லறிவிற் றிறாய்வேறு
புடைசுற்றுந்துணையின்றிப் புகழ்பொதிந்த
மெய்யேபோற் பூத்துநின்ற
உடைசுற்றுந்தண்சார லோங்கியவேங்
கடத்திற்சென் றுறுதிர்மாதோ.

27 இருவினையுமிடைவிடா வெவ்வினையு
மியற்றாதே யிமையோரேத்துந்
திருவினையுமிடுபதந்தேர் சிறுமையையு
முறையொப்பத் தெளிந்துநோக்கிக்
கருவினையதிப்பிறவி யென்றுணர்ந்துங்
கதுகளையுங் கடையின்ஞானத்
தருவினையின்பெரும்பகைஞ ராண்டொண்
டிருந்துமடி வணங்கலாவார்.

28 சூதகற்றுந்திருமறையோர் துறையாடு
நிறையாறுஞ் சுருதித்தொன்றால்
மாதவத்தோருறைவிடனு மழையுறங்கு
மணித்தடனும் வானமாதர்
கீதமுற்றகின்னரங்க ளின்னரம்பு
வருடுதொறுங் கிளர்க்குமோதை
போதகத்தின்மழகன்றும் புலிப்பறழு
முறங்கிடமும் பொருந்திற்றம்பா.

29 கோடுறுமால்வரையதனைக் குறுகுநிபோ
லுங்கெடிய கொடுமைநீங்கி
வீடுறுதிராதலினான் விலங்குநிரப்
புறத்துநீர் மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனை நாடியதற்
பின்னையவை நளிநீர்ப்பொன்னிர்
சேடுறுதண்புனற்றெய்வத் திருநதியி
னிருகரையுஞ் சோதிர்மாதோ.

30 துறக்கமுற்றார்மனமென்னத் துறைகெழு
சோணாடு கடந்தாற்றொல்லை
மறக்கமுற்றாரதனயலே மறைந்துறைவ
ரவ்வழிநீர் வல்லையேகி
உறக்கமுற்றாரென்னுற்றா னெனுமுணர்வி
னொடுமொதுங்கி மணியாலோங்கற்
பிறக்கமுற்றமலைநாடு நாடியகன்
றமிழ்நாட்டுற் பெயர்திர்பாதோ

31 தென்றமிழ்நாட்டகன்பொதியத் திருமுனிவன்
றமிழ்ச்சங்கஞ் சேருவீரேல்
என்றுமவனுறைவிடமா மாதலினு
னம்மலையை யிறைஞ்சியேகிப்
பொன்றிணிந்தபுனல்பெருகும் பொருநையெனுந்
திருநதியின் பொழியாகக்
கன்றுவளர்தடஞ்சாரன் மகேந்திரமா
நெடுவரையுங் கடலுங்காண்டிர்.

32 ஆண்டுகடந்தப்புறத்து மெப்புறத்து
மொருதிங்க ளவதியாகத்
தேண்டியிவண்வந்தடைதிர் விடைகோடிர்
கடிதென்னச் செப்பும்வேலை
நீண்டவனுமாருதியை நிறையருளா
லுறநோக்கி நீதிவல்லோய்
காண்டியெனிற்குறிகேட்டி யெனவேறு
கொண்டிருந்து கழறலுற்றான்.

வேறு.

33 பாற்கடல்பிறந்தசெய்ய பவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டி விளங்குறநிரைத்தநொய்ய
காற்றகைவிரல்களைய கமலமும்பிறவுங்கண்ட
ஏற்பிலவென்பதன்றி யிணையடிக்குவமையென்னோ.

34 நீமெயாவுணர்தியைய நினைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாலுவமையாக மதியறிபுலவர்வைத்த
தாமையாமென்றபோது மல்லனசொல்லினாலும்
யாமையாழ்மழலையாடன் புறவடிக்கிழுக்கமன்றே.

35 வினைவராலரியகோதைப் பேதைமென்கணைக்கான்மெய்யே
நினைவராலரியவின்ன நேர்படப்புலவர்போற்றும்
சினைவரால்பகழியாவ நெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டி யானுரைத்தின்பமென்னோ.

36 அரம்பையென்றளகமாதர் குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோது மற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறு நறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள் கவாற்கிதுகருதுகண்டாய்.

*　　*　　•

37 சட்டகந்தன்னைநோக்கி யாரையுஞ்சமைத்ததக்கோன்
இட்டிடையிருக்குந்தன்மை யியம்பக்கேட்டிலனாதிவ்வின்
கட்டுரைத்துவமைகாட்டக் கட்பொறிக்கதுவாமையிற்
றொட்டவெற்குணரலாமற் றுண்டெனுஞ்சொல்லுமில்லை.

38 ஆலிலைபடிவந்தீட்டு மையறுண்பலகைநொய்ய
பாணிறத்தட்டம்வட்டக் கண்ணாடிபலவும்பின்ன
போலுமென்றுரைத்தபோதும் புனைந்துரைபொருந்தாவாமல்லா
ஏலுமென்றிசைக்கினேலா விதுவயிற்றியற்கையின்றும.

39 சிங்கலில்சிறுகட்டாளி நந்தியின்றிரட்டுப்போந்த
பொங்குபொற்றொளையென்றாலும் புல்லியவுவமைந்தாமால்
அங்கவளுந்தியொக்குஞ் சுழியெனக்கண்டதுண்டால்
கங்கையைநோக்கிச்சேறி கடலினுநெடியதாகற்றேய்.

40 மயிரொழுக்கெனவொன்றுண்டு வல்லிசேர்வயிற்றின்மற்றன்
உயிரொழுக்கதற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்ற சிறுகொடிநுடக்கதிக்
குயில்வுறுத்தமையவைத்த கொள்கொம்பென்றுணர்ந்துகோடி.

41 அல்லியூன்றிடுமென்றஞ்சி யரவிந்தந்துறந்தாட்கப்பொன்
வல்லிமூன்றுளவாற்கோல வயிற்றுமற்றவையுமார
வில்லிமூன்றுலகின்வாழு மாதருந்தோற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றி வரையெனத்தோன்றுமன்றே.

42 செப்பென்பென்கலசமென்பென் செவ்விளநீருந்தேர்வென்
துப்பொன்றுதிரள்சூதென்பென் சொல்லுவென்றுப்பினோர்
தப்பின்றிப்பகலின்வந்த சக்கரவாகமென்பென் [பைந்
ஒப்பொன்றுமுலகிற்காணேன் பலநினைந்துலைவெனின்னும்.

43 கரும்புகண்டாலுமாலைக் காம்புகண்டாலுமாவி
அரும்புகண்டானைசோர வழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதை தோணிணைந்துவமைசொல்ல
இரும்புகண்டனையநெஞ்ச மெனக்கில்லையிசைப்பதென்னோ.

44 முன்கையேயொப்பதொன்று முண்டுமூன்றுலகத்துள்ளும்
என்கையேயிழுக்கமன்றே யியம்பினுங்காந்தளென்றல்
வன்கையாழ்மணிக்கையென்றன் மற்றொன்றையுணர்த்தலன்றி
நன்கையாடடக்கையாமோ நலத்தின்மேனலமுண்டாமோ.

45 ஏலக்கொண்டீன்றபிண்டி யிளந்தளிர்கிடக்கயாணர்க்
கோலக்கற்பகத்தின்காமர் குழைபடுங்கமலமென்பூ
நாலொக்குமருங்குலாடன் னூபுரம்புலம்புங்கோலக்
காலுக்குந்தொலையுமென்றாற் கைக்கொப்புவைக்கலாமோ.

46 வெள்ளியமுறுவற்செவ்வாய் விளங்கிழையிளம்பொற்கொம்பி
வள்ளுகிர்க்குவமைநம்மான் மயர்வறவருக்கலாமோ [ன்
எள்ளுநிர்நீரேமுக்கை யென்றுகொண்டிவறிப்பின்னும்
பிள்ளைகண்முருக்கின்பூவைக் கிழிக்குமஃதழிக்கலாமோ.

47 அங்கையுமடியுங்கண்டா லரவிந்தநினைநியம்பொன்
செங்கநிர்சிநறிநீலஞ் செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கி வளரிளங்கமுகுவாரிச்
சங்கமுநினைதியாயி னவையென்றுதுணிதிதக்கோய்.

48 பவளமுங்கிடையுங்கொவ்வைப்பழனும்பைங்குமுதப்போதும்
துவள்விலவிலவங்கோப முருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்றுணாக்கும்வண்ணஞ் சிவந்துதேன்றதும்புமாகின்
குவளையொண்கண்ணிவண்ண வாயதுகுறியுமஃதே.

49 சிவந்ததோரமிழ்தமில்லைத் தேனில்லையுளதென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ள நினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாணுதலினுடன் பவளவாய்க்குவமைபாவிற்
துவந்தபோதுவந்தவண்ண முளைத்தபோதொத்தவா[illegible]

50 முல்லையுமுருந்துமுத்து முறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமுதும்பாலுந் தேனுமென்றுரைத்ததொன்றும்
அல்லதொன்றுவதில்லை யமுதிற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடி மாறிலாவாறுசான்றோய்.

51 ஓதியுமெள்ளுந்தோளைக் குமிழுமூக்கொக்குமென்றால்
சோதிசெய்பொன்னுமின்னு மணியும்போற்றுளங்கித்தோன்று
ஏதுவுமில்லைவல்லா ரெழுதுவார்க்கெழுதவொண்ணா
நீதியைநோக்கிநீயே நினைதியானெடிதுகாண்பாய்.

52 வள்ளைகத்தரிகைவாம மயிர்வினைக்கருவியென்ன
பிள்ளைகளுரைத்தவொப்பைப் பெரியவருரைக்கிற்பித்தாம்
வெள்ளிவெண்டோடுசெய்த விழுத்தவம்விளைந்ததன்றே
உள்ளுதியுலகினெல்லா முவமைக்குமுவமையுண்டோ.

53 பெரியவாய்ப்பரவையொவ்வா பிறிதொன்றுநினைந்துபோ
உரியவாயொருவருள்ளத் தொடுங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்காணுக்கிற் றேவர்க்குந்தெய்வமென்னக்
கரியவாய்வெளியவாகும் வாட்டடங்கண்களம்மா.

54 கேளொக்கினன்றியொன்று கிளத்திடற்கீழ்மைந்நாமே
கோளொக்குமென்னினல்லாற் குறியொப்பக்கூறலாமோ
வாளொக்கும்வடிக்கணுடன் புருவத்துக்குவமைவைப்பின்
தாளொக்கவளர்ந்துநிற்ப விரண்டில்லையனங்கசாபம்.

55 நன்னுளுநளினநாணு நளிரடிநுதலைநாடிப்
பன்னுளும்பன்னியாற்று மதியெனும்பண்பதாகி
முன்னுளின்முளைவெண்டிங்கண் முகூறநாளுங்குறைவேயாகி
எந்நாளும்வளர்ந்ததென்னி னிறையொக்குமியல்பிற்றுமே.

56 கொண்டலின்குழவியாம்பல் குனிசிலைவள்ளைகொற்றக்
கெண்டையொண்டாளமென்றிக் கேண்மையகிடந்ததிங்கண்
மண்டிலம்வதனமென்று வைத்தனன்விதியேநீயப்
புண்டரிகத்தையுற்ற பொழுததுபொருந்தித்தேர்வாய்.

71 மல்லன்மாநகர்துறந் தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக் கடைகடந்திடுதலும்
எல்லைதீர்வரியவெங் கானம்யாதோவெனாச்
சொல்லினாளஃதெலா முணரநீசொல்லுவாய்.

72 இனையவாறுரைசெயா வினிதினேகுதியெனா
வனையுமாமணிநன்மோ திரமளித்தறிஞநின்
வினையெலாமுடிகெனா விடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினா னருளொடும்போயினான்.

73 அங்கதக்குரிசிலோ டடுசினத்துழவராம்
வெங்கதத்தலைவரும் விரிகதிர்ப்படையொடும்
பொங்குவிற்றலைவனைத் தொழுதுமுன்போயினார்
செங்கதிர்ச்செல்வனைப் பணிவுறுஞ்சென்னியார்.

10-வது. நாடவிட்டபடலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 74-ல் 73.



## 11-வது. பிலநீங்குபடலம்.



அஃதாவது அங்கதபெருமான் முதலிய வீரர்கள் பாலைவனத்திற் புக்கு அந்நிலத்தின் வெப்பத்தைப் பொறுக்கும் வலியிலராய், அங்குக் காணப்பட்ட ஒருபிலத்தில் இறங்கி வெளிப்பட்ட செய்தியை உணர்த்துவது.

இதனில் அடங்கிய கதை.—தென்றிசைக்கு அனுமான்முதலியோர் புறப்பட்டபின், மற்றைத் திக்குகளுக்குச் சுக்கிரீவனால் ஏவப்பட்ட வானரவீரர்களும் ஒருமாதத்தவணையில் தேடிவருவோமெனப் பெரிய வானரப்படையோடு தாவிச்சென்றார்கள். மற்றைத் திக்குக்களுக்குச் சென்றவர்கள் செய்தியை ஒழித்துத் தென்றிசைக்குச் சென்ற வீரர்களது செயலை எடுத்துச்சொல்லுவாம். சிவந்த சிந்துராகமரங்களோடு பதுமராகமணிகளின் சுடர் அடர்வதினாலும், செவ்வானத்தைப்போல விளங்குதலாலும், சிகரத்தில் அராக்களும் சந்திரனும் ஆறும் தங்குதலாலும், சிவனுடைய செஞ்சடைபோல்கின்ற விந்தமலையைச்சார்ந்து, அம்மலையின் சிகரங்களையும் அவற்றினுள்ளிடங்களையும் பக்கத்திடங்களையும் தாழ்வரைகளையும் ஆராய்ந்து ஆகாயம்வரைக்கும் போய் மறுபடி இறங்குவார். மேலெழுந்து செல்வார். வேரோடிய மரங்களிலும், மலைகளிலும், அவற்றிலுள்ள சுனைமுதலியவற்றிலுள்ள நீரிலும் தரையிலும் வாழ்வனவாகிய உயிர்வருக்கங்களில் இவர்களால் காணப்படாதவைகள் பிரமனால் படைக்கப்படாதவைக ளென்னும்படி நுழைந்து தேடிச் சென்றார்கள். பதினான்குயோசனைதூரம் சென்று, நருமதையாற்றைக் கடந்து, மாலைபோலுள்ள சிகரங்களிற் பதுமராகமணிகள் விளங்குகின்ற உயர்ந்த ஏமகூடமென்னும் பெருமலையைச் சேர்ந்தனர். அம்மலை பக்கங்களிலுள்ள

மலைகளும் மரங்களும் விலங்குகளும் பறவைகளும் அருவிகளும் பொன்னிறம்பெற விளங்கியது. அதனை இராவணனது இருக்கையென்று கருதி மாருதிமுதலானோர் கண்களில் தீப்பொறி பறக்க ஏறி, அங்கும் பிராட்டியைக் காணப்பெறாமையினால் உள்ளமும் முகமும் வாடி இறங்கி, நீங்கள் இப்புறங்களில் தேடிச்சென்று மகேந்திர மலையினிடத்து எம்மோடு கூடுங்களென்று இரண்டு வெள்ளஞ் சேனைவீரர்களைச் செல்லவிடுத்துப் போகையில், வந்து காய்வதற்குச் சூரியனஞ்சுகின்ற ஒரு பாலைவனத்திற்புகுந்து, அடுப்பின் தட்டைக்கல்லின்மேல் நெற்பொரிதுள்ளியெழுவதுபோலப பற்கள் விளங்கும்படி வாய்விரித்துப் பதைத்து இனித் தரையின்மேல் நடபபது அரிதென்று நினைத்துச், சூரியனுக்கஞ்சி இருண்முற்றும் ஒதுங்கியிருந்தாலொத்த இருண்ட ஒரு பிலத்திற் சேர்ந்து, செலலும் வழி சிறிதும் புலபபடாமையால் தியங்கி நின்று, மாருதியே! எங்களைக் காக்கவல்லாயோவென்று இரந்து கேட்டுக்கொண்டார்கள். உடனே, என் வாலை முறையே பிடித்துக்கொண்டு வாருங்களென்று சொல்லி அனுமான் கையினால் தடவிக்கொண்டு கடுமையான காற்றைப்போல நடந்துசெல்லுகையில் சூரியமண்டலம் ஒடிந்துவந்து தங்கியதையொத்த ஒளியுள்ளதும், திருமகள் முகம்போல்வதும், கற்பகச்சோலையுள்ளதும், எங்கும் செந்தாமரைக்காடுள்ளதும், பொன்மதில்கள் நீடியதும், தேவர்களும் அதிசயிக்கத்தக்கதும், மயனென்னுமசுரத்தச்சன் மனம்வருந்திப் படைத்ததும், சோழனைப்பாடிய கவிஞர்களுடைய மாளிகைகள்போலப் பொற்றிரளும், மெல்லிய ஆடைகளும், சந்தனமும், மலர்மாலைகளும், முத்துமாலைகள்முதலிய ஆபரணக்குவியல்களும் உடையதுமாகிய நகரத்திற் புகுந்து, அங்குள்ள மக்கள்யாவரும் சித்திரமாக இருக்கக்கண்டதேயல்லது வேறு காணாமையால், இது மாயையோவெனறெண்ணித் துறக்கமேயென்று துணிந்து மனந்திகைக்கையில், சாம்பன், என் கலங்குகின்றீாகள்? விதியின்படியாகுமென்று தேற்ற, ஒன்றுகூடிச் செல்லுகையில் அங்கொருபெண் தவநிலையிலிருக்கக்கண்டனர். அவ்வானரவீரர் வரவையறிந்து நீங்கள் யாவர்? யாதுகாரியம் இங்கு வந்ததென வினவ, இராக்கதர் செய்த மாயையினால் ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியை இழந்தமைபற்றி, அப்பிராட்டியாரைத் தேடிவந்தோமென்றார்கள். என்று சொல்லுதலும் அத்தவப்பெண் ஆநந்தக்கண்ணீர்பெருக எழுந்துநின்று நம்பெருமான் எவ்விடத்துளரென்று வினவ, அவர்கள் முன்னடந்த செய்தியனைத்தும் உரைக்கக்கேட்டாள். நின்னுடைய வரலாறு சொல்லென, என்னுயிரையொத்த ஒரரம்பையை விரும்பிய ஒரசுரனுக்கு யான் அவளை இணங்குவிக்க, அவளைக் காணாமல் இந்திரன் தேடிவந்து அவ்வசுரனைக் கொலைசெய்து, அவளைப் பிரித்தது நீயாதலால் மயன் படைத்த இந்நகரத்தின்கண்ணேயிருவென்று சபித்துச் சீதாபிராட்டியை வானரர் தேடிவந்து நின்னிடம் சேரும்போது நின்சாபம் நீங்குமென்று இந்திரன் வரமளித்தான். ஆகையால் அப்பெருமான் திருநாமத்தைப் பலமுறை சாற்றிச் சாபம்நீக்கி என்னையும் பூமிக்குக் கொண்டுபோமினென்று இரந்து கேட்க, உடனே அனுமான் நூற்றுநாற்பதுயோசனை உயரமாக வளர்ந்து, மேலிடத்தை இடிக்க அதன் வழியாக யாவரும் சுகமாக வந்து மேலே சேர்ந்தார்கள். அத்தவப்பெண் சுவர்க்கலோகம் போனாள். பின்னர்ப் பொய்கையென்னுமிடத்தைச் சேர்ந்தார்கள். சூரியனும் மேற்றிசை மலையை அடைந்தானென்பது.

1 போயினார்போயபின் புறநெடுந்திசைகடோ
றேயினானிரவிகா தலனுமேயினபொருட்
காயினாரவருமங் கன்னநாளவதியில்
தாயினாருலகினைத் தகைநெடுந்தானையார்.

2 குன்றிசைத்தனவெனக் குவவுதோள்வலியினார்
மின்றிசைத்திடுமிடைக் கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமா றுழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார் திறநெடுத்துரைசெய்வாம்.

3 சிந்துராகத்தொடுந் திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின் றவிர்தலானரவிறோ
டிந்தியாறெய்தலா னிறைவன்மாமௌலிபோல்
விந்தைநாகத்தின்மா டெய்தினார்வெய்தினால்.

4 அந்நெடுங்குன்றமோ டவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப் புரைகளும்புடைகளும்
நன்னெடுந்தாழ்வரை நாடினார்நவையிலார்
பன்னெடுங்காலமா மென்னவோர்பகலிடை.

5 மல்லன்மாஞாலமோர் மறுவுறுவகையினச்
சில்லலோதியையிருந் துறைவிடந்தேடுவார்
புல்லினாருலகினைப் பொதுவிலாவகையினால்
எல்லைமாகடல்களே யாகுமாறெய்தினார்.

6 விண்டுபோயிழிவர்மே னிமிர்வர்விண்படர்வர்வேர்
உண்டமாமரனினம் மலையின்வாயுறையினின்
மண்டுபாரதனின்வா ழுயிர்களம்மதியினார்
கண்டிலாதனவயன் கண்டிலாதனகொலாம்.

வேறு.

7 ஏகினார்யோசனை யேழொடேழுபார்
சேகரத்தென்றிசை கடிதுசெல்கின்றார்
மேகமாலையினொடு விரவிமேதியின்
நாகுசேர்நருமதை யாறுநண்ணினார்.

8 அன்னமாடிடங்களு மமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந் துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ் சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும் பார்த்துசுற்றினர்.

9 பெறலருந்தெரிவையை நாடும்பெற்றியார்
அறனறுங்கூந்தலு மளவில்வண்டுசூழ்
நிறைநறுந்தாமரை முகமுநித்தில
முறுவலுங்காண்பரான் முழுதுங்காண்கிலார்.

10 செருமதயாக்கையர் செருக்கில்சிந்தையர்
தருமதயாவினை தழுவுந்தன்மையர்
பொருமதயானையும் பிடியும்புக்குழல்
நருமதையாமெனு நதியைநீங்கினர்.

11 தாமகூடத்தினைத் தீர்த்தசங்கமாம்
நாமகூடப்பெரு நதியைநல்கிய
வாம*கூடற்சுடர் மணிவயங்குறும்
ஏமகூடத்தடங் கிரியையெய்தினர்.

12 மாடுறுகிரிகளு மரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப் பொலிந்துதோன்றுறப்
பாடுறுசுடரொளி பரப்புகின்றது
வீடுறுமுலகினும் விளங்குமெய்யது.

13 பறவையும்பலவகை விலங்குமப்பாடமைந்
துறைவதுகனகநுண் டூழியொட்டலான்
நிறைநெடுமேருவைச் சேர்ந்தநீர்தாய்ப்
பொறைநெடும்பொன்னொளி முழுதும்போர்ப்பது.

14 பரவியகனகநுண் பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணி யீட்டத்தோடிழி
அருவியுநதிகளு மலங்குதீயிடை
உருகுபொன்பாய்தல்போன் றொழுகுகின்றது.

* கூடசகடா என்றும் பாடம்.

15 விஞ்சையர்பாடலும் விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினா ராடற்பாணியும்
குஞ்சரமுழக்கமுங் குமுறுபேரியின்
மஞ்சினமுரற்றலு மயங்குமாண்பது.

16 அனையதுநோக்கினா ரமரரஞ்சுறும்
வினைவலனிராவண னிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந் தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறி சிந்துசெங்கணார்.

17 இம்மலைகாணாது மேழைமானையச்
செம்மலைநீக்குதுஞ் சிந்தைத்தீதென
விம்மலுற்றுவகையின் விளங்குமுள்ளத்தர்
அம்மலையேறினா ரச்சநீங்கினார்.

18 இரிந்தனகரிகளும் யாளியீட்டமும்
விரிந்தகோளரிகளும் வெருவிநீங்கின
திரிந்தனரெங்கணுந் திருவைக்காண்கிலர்
பிரிந்தனர்பிறிதெனப் பெயரும்பெற்றியார்.

19 ஐம்பதிற்றிரட்டிகா வதத்தினாலகன்
றும்பரைத்தொடுவதொத் துயர்வினோங்கிய
செம்பொனற்கிரியையோர் பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர் குப்புற்றேகினார்.

20 வெள்ளமோரிரண்டென விரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந் தெரிந்துதேடிநீர்
எள்ளருமகேந்திரத் தெம்பிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடு மோங்கனீங்கினார்.

21 மாருதிமுதலிய வயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரே குழுமிப்போகின்றார்
நீரெனும்பேருமந் நெறியினீங்கலால்
சூரியன்வெருவுமோர் சுரத்தைநண்ணினார்.

22 புள்ளடையாவிலங் கரியபுல்லொடும்
கள்ளுடைமானில கல்லுங்கீந்துகும்
உள்ளிடையரவுநுண் பொடியொடோடிய
வெள்ளிடையல்லதொன் றரிதவ்வெஞ்சுரம்.

23 நன்புலனடுக்குற வுணர்வுநாமுறப்
பொன்பொலியாக்கைகள் புழுங்கிப்பொங்குவார்
தென்புலந்தங்கெரி நரகிற்சிந்திய
என்பில்பல்லுயிரென வெம்மையெய்தினார்.

24 நீட்டியநாவினர் நிலத்திற்றீண்டுதோ
றாட்டியவெம்மையா லுலையுங்காலாக்
காட்டினுங்காய்ந்துதங் காயந்தீதலால்
சூட்டகன்மேலெழு பொரியிற்றுள்ளினார்.

25 ஒதுங்கலாநிழலினைக் காண்கிலாருயிர்
பிதுங்கலாமுடலினர் முடிவில்பீழையார்
பதங்கடுப்பருகிடப் பதைக்கின்றபல
விதங்களானெடும்பில வழியின்மேவினார்.

26 மீச்செலவரிதினி விளியினல்லது
தீச்செலவொழியவுந் தடுக்குந்திண்பில
வாய்ச்செலனன்றென மனத்தினெண்ணினார்
போய்ச்சிலவறிதுமென் றதனிற்போயினார்.

27 அக்கணத்தப்பிலத்* தகனியெய்தினார்
திக்கினொடுலகுறச் செறிந்ததேங்கிருள்
எக்கியகதிரவற் கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர் புரைபுக்கெய்தினார்.

28 எழுகிலர்காலெடுத் தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனு முணர்வுமாறினார்
இழுகியநெய்யெனு மிருட்பிழம்பினுள்
முழுகியமெய்யரா யுயிர்ப்புமுட்டினார்.

* தந்தமெய்தினார் என்றும் பாடம்.

29 நின்றனர்செய்வதோர் நிலைமைநோக்கிலர்
பொன்றினம்யாமெனப் பொருமுபுந்தியர்
வன்றிறன்மாருதி வல்லைநீயெமை
இன்றிதுகாக்கவென் றிரந்துகூறினார்.

30 உய்வுறுத்துவென்மன முலையிரூழின்வால்
மெய்யுறப்பற்றுதிர் விடுகிலீரென
ஐயனக்கணத்தினி னகலுநீணெறி
கையினிற்றடவிவெங் காலினேகினான்.

31 பன்னிரண்டியோசனை படர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனையருண் டலங்கள்வில்விடத்
துன்னிருடொலைந்திடத் துருவியேகினான்
பொன்னெடுங்கிரியெனப் பொலிந்ததோளினான்.

32 கண்டனர்கடிநகர் கருணையொண்கதிர்
மண்டலமறைந்துறைந் தனையமாண்பது
விண்டலநாணுற விளங்குகின்றது
புண்டரிகத்தவள் வதனம்போன்றது.

33 கற்பகக்கானது கமலக்காடது
பொற்பெருங்கோபுரப் புரிசைநீடிய
தற்புதவமரரு மெய்தலாவது
சிற்பமுமயன்மனம் வருந்திச்செய்தது.

34 இந்திரநகரமு மிணையிலாதது
மந்திரமணியினிற் பொன்னின்மண்ணினின்
அந்தரத்தவிர்சுட ரவையின்றாயினும்
உந்தருமிருடுரந் தொளிரநின்றது.

35 புவிபுகழ்சென்னிபே ரபயன்றோள்புகழ்
கவிகடமனையெனக் கனகராசியும்
சவியுடைத்தூசுமென் சாந்துமாலையும்
அவிரிழைக்குப்பையு மளவிலாதது.

36 பயில்குரற்கிண்கிணிப் பதத்தபாவையர்
இயல்புடைமைந்தரென் றிவரிலாமையால்
துயிலவுநோக்கவுந் துணையதன்றியும்
உயிரிலாவோவிய மென்னவொப்பது.

37 அமிழ்துலையயினியை யடுத்தவுண்டியும்
தமிழ்நிகர்நறவமுந் தனித்தண்டேறலும்
இமிழ்கனிப்பிறக்கமும் பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றிய கணக்கில்கொட்பது.

வேறு.

38 கன்னிநெடுமாநகர மன்னதெதிர்கண்டார்
இந்நகரமாமிக விராவணனதென்
றுன்னியுரையாடின ருவந்தனர்வியந்தார்
பொன்னினெடுவாயிலத னூடினிதுபுக்கார்.

39 புக்கநகரத்தினனி நாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலை வாழுமிடனன்னவையத்
தொக்கவுறைவோருருவ மோவியமதான்மற்
றெக்குறியினுள்ளவு மெதிர்ந்திலாதிரிந்தார்.

40 வாவியுளபொய்கையுள வாசமலர்நாறும்
காவுமுளகாவிவிழி யார்மொழிகளென்னக்
கூவுமிளமென்குயில்கள் பூவைகிளிகோலத்
தூவிமடவன்ன*முள தோகையர்களில்லை.

41 ஆயநகரத்தினியல் புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனக்கருதி பற்றுநினைவுற்றார்
தீயபிலனுட்பிறவி சென்றவிஃதன்றே
தூயதுறக்கமென நெஞ்சுதுணிவுற்றார்.

42 இறந்திலர்திறற்குரிய தெண்ணியிலமேது
மறந்திலமயிர்ப்பினொ டிமைப்புளதுறக்கம்
பிறந்தவர்செயற்குரிய பீடுமிலதென்னே
திறந்தெரிவதென்னென விசைத்தனர்திகைத்தார்.

* மிவை யுள்ளசுவடில்லை என்றும் பாடம்.

43 சாம்பனவனென்றுரைசெய் வானெழுசலத்தால்
காம்பனையதோளியை யெடுத்தபடுகள்ளன்
நாம்புகவமைத்தபொறி நன்றுமுடிவின்றால்
எம்பலினிமேலிவிதி யான்முடியுமென்றான்.

44 இன்றுபிலனீதிடையி னேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிக மாகிநனிசேறும்
அன்றதெனின்வஞ்சனை யரக்கரையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலென மாருதிகொதித்தான்.

45 மற்றவருமற்றது மனக்கொளவலித்தார்
உற்றனர்புரத்தினிடை யொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுரு நண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையி னானையெதிர்கண்டார்.

* * *

46 தாமரைமலர்க்குவமை சால்வுறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறி குறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபகை காறளரவாசை
நாமமழியப்புலனு நல்லறிவுபுல்ல.

47 நெறிந்துநிமிர்கற்றைநிறை யோதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றன தலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றற மனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணை கண்வழிபிறங்க.

48 இருந்தனளிருந்தவளை யெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகைய சீதையவளாகப்
பரிந்தனர்புகழ்ந்தனர் பணித்தகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவள்கொ றேவியெனலோடும்.

49 எக்குறியொடெக்குண மெடுத்திவணுரைக்கேன்
இக்குணமுடைக்கொடி யிராமன்மனையாளோ
*அக்குவடமுத்தமணி யாரவடநேர்நின்
றெக்குமெனிஞெக்குமென மாருதியுரைத்தான்.

---

* அக்கின்மணிமுத்தமணி யாரமதினேர்மின் எனவும் பாடம்.

50 அன்னபொழுதின்கணவ் வணங்குமறிவுற்றாள்
முன்னனையர்சேறன்முறை யன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரி யிற்றுறையரல்லீர்
என்னவரவியாவிருணா செய்ம்மெனவிசைத்தாள்.

51 வேதனையரக்கரொரு மாயைவிளைவித்தார்
சீதையையொளித்தனர் மறைத்தபுரைதேர்வுற்
றேதமிலறத்துறை நிறுத்தியவிராமன்
னாதருலகிற்றிரிது மென்னுமுரைசொன்னார்.

52 என்றலுமிருந்தவ ளெழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயவொரு பேருவகைகொண்டாள்
நன்றுவரவாகநட னம்புரிவளென்னா
நின்றனணெடுங்கணிணை நீர்கலுழிகொள்ள.

53 எவ்வுழையிருந்தன னிராமனெனயாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள் செப்பிடுதலோடும்
அவ்வுழைநிகழ்ந்ததனை யாதியினொடந்தம்
வெவ்விழைவில்சிந்தைநெடு மாருதிவிரித்தான்.

54 கேட்டவளுமென்னுடைய கேடறவமின்னே
காட்டியதுவீடென *விரும்புநனிகாணீர்
ஆட்டியமுதன்னசுவை யின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரு மின்னுரையுரைக்கும்.

55 மாருதியுமற்றவண் மலர்ச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவர் யாதுநினியற்பேர்
பார்புகழ்தவத்தினை பணித்தருளுகென்றான்
சோர்குழலுமற்றவனொ டுற்றபடிசொன்னாள்.

56 நூன்முகநுனித்தநெறி நூறுவரநொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில் காலொடுவிழுங்கா
மான்முகநலத்தவன் மயன்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதிம் மாநகரநல்லோய்.

* விரும்பி என்றும் பாடம்.

57 அன்னதிதுதானவ னரம்பையருளாங்கோர்
நன்னுதலிஞண்முலே நயந்தனனநல்லாள்
என்னுயிரனுளவளே யானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல் பிலத்திடைபுணர்த்தேன்.

58 புணர்ந்தவளுமன்னவனு மன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிம் மாநகருறைந்தார்
கணங்குழையினளொடுயர் காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடை யேனுடனிருந்தேன்.

59 இருந்துபலநாள்கழியு மெல்லேயினின்வல்லோய்
திருந்திழையைநாடிவரு தேவரிறைசீறிப்
பெருந்திறலிஞனேயுயி ருண்டுபிழையென்றம்
முருந்துநிகர்மூரனகை யாளேயுமுனிந்தான்.

60 முனிந்தவளேயுற்றமுறை முற்றுமொழிகென்னக்
கனிந்ததுவர்வாயவளு மென்னேயிவள்கண்ணுல்
வனேந்துமுடிவுற்றதென மன்னனுமிதெல்லாம்
நினேந்திவணிருந்திநகர் காவனினதென்ருன்.

61 என்றனன்வணங்கி யிருளேகுநெறியென்ன
ஒன்றுளாயெனக்குமுடி வென்றுளாசெயாமுன்
வன்றிறலவானர மிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிட ரென்றவனகன்ருன்.

62 உண்ணவுளபூசவுள சூடவுளவொன்ருே
வண்ணமணியாடையுள மற்றுமுளபெற்றேன்
அண்ணலவைவிட்டுமை யடைந்திடுதல்வேண்டி
எண்ணரியபல்பக லிருந்தவமிழைத்தேன்.

63 ஐயிருபதோசனே யமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலக வேறுநெறிகூருு
உய்யநெறியுண்டுதெவு வீரெனினுபாயம்
செய்யும்வகையுண்டெனி னினேத்திர்சிறிதென்ருள்.

64 முழைத்தலையிருட்கடலின் மூழ்கிமுடிவேமைப்
பிழைத்துயிருயிர்க்கவருள் செய்தபெரியோனே
இழைத்திசெயலாய்வினை யென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியு மன்னதுவலிப்பான்.

65 நடுங்கன்மினெனச்சொலை நவின்றுநகைநாற
மடங்கலினெழுந்துமழை யேறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலை திறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்பெயர்த்துநெடு வானுறநிமிர்ந்தான்.

66 எருத்துயர்சுடர்ப்புய மிரண்டுமெயிறென்ன
மருத்துமகனப்படி யிடந்துறவளர்ந்தான்
கருத்தினிமிர்கண்ணினெதிர கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்தகரு மாவினையுமொத்தான்.

67 மாவடிவுடைக்கமல நான்முகன்வகுக்கும்
தூவடிவுடைச்சுடர்கொள் விண்டலைதொளைக்கும்
மூவடிகுறித்துமுறை யீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில் சேவடிபுனைந்தான்.

68 ஏழிருபதோசனை யிடந்துபடியின்மேல்
ஊழுறவெழுந்ததனை யும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனு ணின்றுபடர்மேல்பால்
ஆழியினெறிந்தனுமன் மேகமெனவார்த்தான்.

69 இன்றுமுளமேல்கட லியக்கில்பிலநீவா
நின்றுநிலைபெற்றுளது நீணுதலியோடும்
குன்றுபுனைதோளவ ரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடை நன்னுதலிபோனாள்.

70 மேருவனைமாமுலையண் மென்சொலினள்விஞ்சு
மாருதியினைப்பலவு வந்துமகிழ்வுற்றே
ஏருறுசுயம்பிரபை யேமைநெறியெய்தத்
தாருவளர்பொற்றல னிடைக்கடிதுசார்ந்தாள்.

8 இடியுண்டாங்கணோ ரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந் தலறிவீழ்தலும்
தொடியின்றோள்விசைத் தெழுந்துசுற்றினார்
பிடியுண்டாரெனத் துயிலும்பெற்றியார்.

9 யார்கொலாமிவ னிழைத்ததென்னெனத்
தாரைசேயினைத் தனிவினாயினான்
மாருதேயன்மற் றவனும்வாய்மைசால்
ஆரியாதெரிந் தறிகலேனென்றான்.

10 யானிவன்றனைத் தெரியவெண்ணினேன்
றாநிவந்தவேற் றுயிரனென்னும்பே
ரானிவ்வாழ்புனற் பொய்கையாளுமோர்
தானவன்னெனச் சாம்பன்சாற்றினான்.

11 வேறுமெய்துவா ருளர்கொலாமெனாத்
தேறியின்றுயிற் செலவுதீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க் கடவுள்வேலைவாய்
நாறுநாண்மலர்ப் பெண்ணைநண்ணினார்.

12 புண்ணைவெம்முலைப் புளினமேய்தடத்
துண்ணவாம்பலி னமுதமூறுவாய்
வண்ணவொண்ணகைத் தாளவாண்முகப்
பெண்ணைநாடுவார் பெண்ணைநண்ணினார்.

13 துறையுந்தோகைநின் றுடுசூழலும்
குறையுஞ்சோலையுங் குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந் தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினா ரறிவின்கோடியார்.

14 அணிகொழித்துவந் தெவருமாடினார்
பிணிகொழித்தவெம் பிறவிவேரின்வன்
றணிகொழித்தருஞ் சுழிகடோறுநன்
மணிகொழிப்பதன் கரையின்வைகினார்.

15 ஆடுபெண்ணைநீ ராறுமேறினார்
காடுநண்ணினார் மலைகடந்துளார்
வீடுநண்ணினா ரென்னவீரநீர்
நாடுநண்ணினார் நாடநண்ணினார்.

16 தசநவப்பெயர்*ச் சரளசண்பகத்
தசநவப்பிர தகனநாடொரீஇ
உசநவப்பெயர்க் கவியுதித்தபேர்
இசைவிதர்ப்பநா டெளிதினெய்தினார்.

17 வைதருப்பநா டதனில்வந்துபுக்
கெய்தருப்பமத் தனையுமெய்தினார்
மெய்தருப்பைநூல் பிறழுமேனியார்
செய்தவத்துளார் வடிவிற்றேடினார்.

18 அன்னதன்மையா லறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ் சிந்துநாடொரீஇத்
தன்மமெண்ணுமத் தகைபுகுந்துளார்
துன்னுதண்டகங் கடிதுதுன்னினார்.

19 உண்டகத்துளா ருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங் காலனாயினார்
தண்டகத்தையுந் தடவியேகினார்
முண்டகத்துறை கடிதுமுற்றினார்.

20 அள்ளனீரெலா மமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக் கலவைகோதையிற்
கள்ளுநாறலிற் கமலவேலிவாழ்
புள்ளுமீனுணா புலவுதீர்தலால்.

21 குஞ்சரங்குடைந் தொழுகுகொட்பதால்
விஞ்சைமன்னர்பால் விரகமங்கைமார்
நஞ்சுவீணையி னடத்துபாடலான்
அஞ்சுவார்கணீ ரருவியாறரோ.

* த்தால எனவும் பாடம்.

22 கமுகவார்நெடுங் கனகவூசலிற்
குமுதவாயினார் குயிலையேசுவார்
சமுகவாளியுந் தனுவும்வாழ்முகத்
தமுதபாடலார் மருவியாடுவார்.

23 இணையவாயவொண் டுறையையெய்தினார்
நினையும்வேலைவாய் நெடிதுதேடுவார்
வினையவார்குழற் றிருவைமேவலார்
புனையுநோயினார் கடிதுபோயினார்.

24 நீண்டமேனியா னெடியதாளினின்
றீண்டுகங்கைவந் திழிவதென்னலாம்
பாண்டுவெம்மலை படர்விசும்பினைத்
தீண்டுகின்றதண் சிகரமெய்தினார்.

25 இருளுறுத்தமீ தெழுந்ததெண்ணிலா
மருளறுத்துவண் சுடர்வழங்கலால்
அருளுறுத்திலா வடலரக்கன்மேல்
உருளுறுத்ததிண் கயிலையொத்ததால்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

26 விண்ணுறநிவந்தசோதி வெள்ளிய*குன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார் களியுறக்கனிந்தகாமர்ப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப் படையுறுநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணா ரிடருறுமனத்தரெய்த்தார்.

27 ஊதைபோல்விசையின்வெங்க ணுழுவைபோல்வயவரோங்கல்
ஆதியையகன்றுசெல்வா ரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல் வழீஇவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதா விரியினைக்குறுகிச்சென்றார்.

28 எழுகின்றதிரையிற்றாகி யிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வேள்வி தொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்ற வொருமகட்கிரங்கிஞாலம்
அழுகின்றகலுழிமாரி யாமெனப்பொலிந்ததன்றே.

---

* வெளளியங் என்றும் பாடம்.

29 ஆசில்பேருலகிற்காண்போ ரளவைநூலெனலுமாகிக்
காசொடுகனகந்தூவிக், கவினுறக்கிடந்தகான்யா
றேசில்போரக்கன்மார்பி னிடைபறித்தெருவைவேந்தன்
வீசியவடகமீக்கோ ளீதெனவிளங்கிற்றன்றே.

30 அந்நிமுழுதுநாடி யாய்வளைமயிலையாண்டும்
சந்நிதியுற்றிலாதார் நெடிதுபின்றவிரச்சென்றார்
*இன்னதீநிலாததீதென் றியாவையுமுணருங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ் சுவணத்துறையிற்புக்கார்.

31 சுரும்பொடுதேனும்வண்டு மன்னமுந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங் கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன்மருதஞ்சூழ்ந்த கிடக்கைபின்கிடப்பச்சென்றார்
குரும்பைநீரமுதச்சோலைக் குலிங்கமும்புறத்துக்கொண்டார்.

32 கொங்கணமேழுநீங்கிக் குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தற் றண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ் சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்ற வருந்ததிக்கருகானார்.

33 அருந்ததிக்கருகுசென்றா ரழகினுக்கழகுசெய்தாள்
இருந்ததிக்குணர்ந்திலாதா ரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறு மரகதப்பெருங்குன்றெய்தி
இருந்ததிற்றீர்ந்துசென்றார் வேங்கடத்திறுத்தகாலை.

34 முனிவருமறைவலோரு முந்தைநாட்சிந்தைமூண்ட
வினைவருநெறியைமாற்று மெய்யுணர்வோரும்விண்ணோர்
எனைவருமமரர்மாதர் யாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர் நாளும்வந்தாடுகின்றார்.

கலிவிருத்தம்.

35 பெய்தவைம்பொறி யும்பெருங்காமமும்
வைதவெஞ்சொலின் மங்கையர்வாட்கணின்
எய்தவஞ்சக வாளியும்வென்றுநற்
செய்தவம்பல செய்குநர்தேவரால்.

* இந்நதியாவதீதென் றியாவையுமெண்ணுங்கோளார் எனவும் பாடம்.

36 வலங்கொணேமி மழைநிறவானவன்
அலங்குதாளிணை தாங்கியவம்மலே
விலங்கும்வீடுறு கின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட் கணையதுபொய்க்குமோ.

37 ஆயகுன்றினை யெய்தியருந்தவம்
ஏயசெல்வனை மேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனை நாளும்வணங்கிய
தூயநற்றவர் பாதங்கள்சூடினார்.

38 சூடியாண்டச் சுரிகுழற்றேகையைத்
தேடிவார்புனற் றெண்டிரைத்தண்டக
நாடுநண்ணுகின் றார்மறைநாவலர்
வேடமேயினர் வேண்டுருமேவுவார்.

39 குன்றுசூழ்ந்த கடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்த படப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்த கிடக்கையுந்திங்களூர்
மன்றுசூழ்ந்த பரப்புமருங்கெலாம்.

40 சூலடிப்பல வின்சுளைதூங்குதேன்
கோலடிப்ப வெரீஇக்குலமள்ளரோர்ச்
சாலடித்தருஞ் சாலியின்வெண்முளை
தோலடிக்கிளை யன்னந்துவைப்பன.

41 செருகுறுங்களித் தேங்குவளைக்குலம்
அருகுறங்கும் வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்கு பிறங்கியவாழையிற்
குருகுறங்கும் குயிலுந்துயிலுமால்.

42 தெருவினார்ப்புறும் பல்லியந்தோர்மயில்
கருவிமாமழை யென்றுகளிப்புறு
பொருநர்தண்ணுமைக் கன்னமும்போகலா
மருவினார்க்கு மயக்கமுண்டாகுமோ.

43 தேனைவென்றுயர் தெங்கிளம்பாளையை
நானையென்றிளங் கெண்டைநடுங்குவ
தானைவன்றலைத் தண்ணிளவாம்பலைச்
சேனையென்று புலம்புவதேனையே.

44 நள்ளிவாங்கு கடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளை வீசியவெண்மணி
புள்ளிநானை பொலிசினையாகுமென்
றுள்ளியாமை முதுகினுடைப்பரால்.

45 சேட்டிளங்கடு வன்சிறுபுன்னையிற்
கோட்டதேம்பல வின்கனிக்கூன்குலை
தோட்டமைந்த பொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென் றீயினமொய்ப்பன.

46 செல்வரென்றும் வடகலைத்தென்றமிழ்ச்
சொல்வரம்பின ரென்றுஞ்*சுமடரைக்
கொல்வரென்றுங் கொடுப்பனரென்றுமவ்
வில்வரம்பி னிறைவனையேத்துவார்.

47 அன்னதண்டக நாடுகடந்தகன்
பொன்னிநாடு பொருவிலரெய்தினர்
செந்நெலுங்கரும் புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யு நெறியரிதேகுவார்.

48 கொடிறுதாங்கிய வாய்க்குழுநாரைவாழ்
தடறுதாங்கிய கூனிளந்தாழையின்
மிடறுதாங்கும் விருப்புடைத்தீங்கனி
இடறுவார்நறுந் தேனினிழுக்குவார்.

49 குழுவுமீன்வளர் சூட்டமெனக்கொளா
எழுவுபாட விமிழ்கருப்பேந்திரத்
துழுதசாறகன் கூனையினூழ்முறை
முழுகிநீர்க்கருங் காக்கைமுளைக்குமே.

---

* களிபட என்றும் பாடம்.

50 பூநெருங்கிய புள்ளுறுசோலைகள்
தேனெருங்கு சொரிதலிற்றேர்வில
மீனெருங்குறும் வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண் மரங்களின்வைகுமால்.

51 அனையபொன்னி யகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சி குலாமலைமண்டலம்
வினையினீங்கிய பண்பினர்மேயினார்
இனியதென்றமிழ் நாடுசென்றெய்தினார்.

நாடடினையணடாநா
டொத்திருக்குமென் றுலுவாயொக்குமோ
எத்திறத்தினு மேழுலகம்புகழ்
முத்துமுத்தமி ழுந்தந்துமுற்றுமே.

53 என்றதென்றமிழ் நாட்டினையெங்கணும்
சென்றுநாடித் திரிந்துதிருந்தினார்
பொன்றுவாரிற் பொருந்தினர்போயினார்
துன்றலோதியைக் கண்டிலர்துன்பினார்.

54 வன்றிசைக்களி றன்னமகேந்திரக்
குன்றிசைத்தது வல்லையிற்கூடினார்
தென்றிசைக்கடற் சீகரமாருதம்
நின்றிசைக்கு நெடுநெறிநீங்கினார்.

12-வது. ஆறுசெல்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 54



## 13-வது. சம்பாதிபடலம்.



அஃதாவது சம்பாதியினுடைய செய்தியையுணர்த்தும் படலம். இப் படலத்துள் அடங்கிய கதையாவது:-நீருண்ட மேகம்போல முழங்கி, அலைகளாகிய கைகளை உயர எடுத்து, மான்போலும் மருண்ட பார்வையையுடைய பிராட்டியார் என்னிடத்து இருக்கின்றனள் என்று உரத்துச் சொல்லி, இலங்கையெனும் பெண் ஓடிவந்து அழைப்பதை ஒத்திருக்கும் தென்கடலை நோக்கி, எட்டுத் திசைகளிலும் அடைந்து தேடி மகேந்திரமலையினிடத்தில் எம்மைச் சாருமென்று போக்கின அளவில்லாத வானர வீரர்களும் கடல்போல வந்துசேர்ந்து, இருதிறத்தாரும் தேவியாரைக் காணாதவர்களாய் நாக்குழறப்

பேசுவராயினர். தேடிவாருமினென்று மகாராஜா குறித்த நாளின் எல்லையும் நெருங்குகின்றது, அந்நாளின் எல்லைக்குள் காணபபெற்றிலோம். ஸ்ரீராமபிரானும் உயிர் அழிவான். நம்மரசனுடைய ஆணையையும மேற்கொண்டு நின்றோம். இனி நாம் தேடுஞ்செயலும் முடிவையடைந்தது. ஆகவே அரிய தவஞ்செய்வோமா? அல்லாவிடின், விஷம் உண்டு இறபபோமா? எது தக்கதோ அதைச் செய்து உயிர்மாய்வதே தகுதியென்று, சடற்கரையில் மலைகளை அணியணியாக வைத்ததையொத்த வானரர்களில இளவரசாகிய அங்கதப்பெருமான் பூமிமுற்றும் பிராட்டியாரைத் தேடிக்கொண்டு வருவோமென்று புருஷோத்தமனாகிய ஸ்ரீராமருக்குப் பக்தியுடையோம்போல பெருமிதங்கூறிவந்து பழிககு ஆளானோம். செய்வோம் என்று ஏற்றுவந்த கருமமும் செய்து முடித்திலோம். மெல்லெனச் சென்று நிகழ்ந்த காரியத்தைச் சொல்லவும் வலியில்லோம். தேடிக்காணக்கூடுமென்பதற்குச் சிறிது ஏதுவும் அறிகிலோம். உயிர்மாயாதிருபபோமெனின் அது உரிய கருமமாகுமா? என் பிதாவும் கோபிப்பான, நம் இறைவனாகிய பெருமானும் மனம் வருந்துவான். இச்செயல்களைக் காணும் திறமிலேன் ஆதலால உயிர்மாய்வேன். பெரியோர்களே, ஆராய்ந்து சொல்லுமினென்று முடித்தான். நானிலும் மலையோடும் ஒப்பாகின்ற தோள்களையுடைய அங்கதப்பெருமானே நாம் எல்லோரும் உயிர்மாய்வதே நன்மையென்று துணிந்தோம்; ஆயினும் வாலிபுத்திரனாகிய நினக்கு அது கூடாதென்று சொன்னபோது, அப்பெருமான் நீங்கள் யாவரும் உயிர்மாய நாயகனாகிய நான்மாத்திரம் உயிரோடு செல்வேனானல் அது நலந்தருவதோ? அறிவுடையோரால் விரும்பத்தக்கதோ? அறிஞர்கள் கூறும் பழிமொழிக்கு அஞ்சினராய் உயிரையொத்த நண்பர்கள் உயிர்மாயத் தான் உயிரோடுவந்தானென்று உலகத்தார் சொல்லுவதன்முன்னே நான் உயிர்மாய்வேனென்று மீண்டுஞ் சொல்லி, என் தாய்க்கும் என் பிதாவுக்கும் யாவராயினும் சொல்லவுங்கூடும், அதைக் கேள்விப்பட்டு அவ்விருவரும் இறத்தலும் கூடும்; இதை யறிந்து ஸ்ரீராமபிரானும் இளயபெருமாளும் இறத்தல் திண்ணம்; இதனால் பரதாழ்வானும் சத்துருக்கனாழ்வானும் பெற்றதாயார் மூவரும் ஊராரும் உண்மையாகவே மாய்வார்கள்; ஜானகியென்கிற விரதத்தினுயர்ந்த விளக்கினால் எல்லை காணக்கூடாத துன்பம் விளைந்ததென்று கண்ணீர்விட்டான். அப்போது அனுமான் எழுந்து திரிலோகத்திலும் ஒருபக்கமும் தேடினோமில்லை; மற்றெவ்விடத்திலாவது நாள்கழியினும் தேடிக் கண்டோமேயானால் தவணை கடந்துவந்தீரென்று நம்மை அரசன் கோபிப்பானோ? பெரிய உடையாராகிய சடாயுவைப்போல நேர்ந்த போரின் உயிர்மாய்தல் மேம்பாடே அல்லாமல் மற்றது அல்லதாகும் என்றுகூறினான். அது செவிபபட்ட **சம்பாதி** நெஞ்சு புலம்பி மலையுருளுவதுபோல உருண்டுவந்து சடாயுவைக் கொல்லவல்ல பலவானாகிய ஒருவன் இப்புவியினுளனோ? இதென்ன வியப்பு என்று சொல்லினன். வருவதைக்கண்டு வானரர் யாவரும் அச்சங்கொண்டோடினர். அனுமான் ஒருவனும் துணிவோடு நின்று வஞ்சமாகிய இந்த வேடம் உனக்கு நிலைக்குமா? அடா அரக்கா! இவ்வுருவை விடுவிடு என்று கூறி முகக்குறி அறியவல்ல அனுமான், இவன் புலம்புகின்றான், இரத்தக்கண்ணீர் சொரிகின்றான், தீயோனல்லன் என்று துணிந்து ஏதொன்றும் பேசாமுன்னே, மற்றவன் சடாயுவை உயிர்வாங்கினவர் யாவரென்று வினாவினான். அனுமான் உன்னை நீ யுள்ளபடி முன்உணர்த்தினால் பின்னே யான் அதை

கிரப்புவேன் எனச் சம்பாதி தன்னை இன்னானென்று தெரிவித்துத் தான் சடாயுவுக்குத் தமயனென்று கூறவே அனுமான் துக்கசாகரத்தில் மூழ்கி, இராவணன் வீசியவாளால் உயிர்மாய்ந்தானென்று சொல்லுதலும், கருடனைப்பார்க்கிலும் மிகுந்த வலியையுடையானே! உன்னைக் கொலைசெய்யவும் ஒருவன் உளனாயினனே என்று சம்பாதி புலம்பி உயிர்சோர்ந்து தவித்து அனுமனாற் சிறிதுதேற்றப்பட்டு, அந்த அரக்கன் வாளைவீசுவதற்குக் காரணமென்ன என்று வினவ, கொடியோனாகிய அரக்கன், இராமலட்சுமணர்கள் ஜானகிபிராட்டியாரைப் பிரியும்படிசெய்து, அப்பிராட்டியாரை தேரின் மேலேற்றிக்கொண்டுபோகையில், பிராட்டியார் புலம்பிய அழுகுரலைக் கேட்டு நினதம்பி விரைந்துவந்து போர்செய்து விண்ணுலகடைந்தான் என்று சொல்லி முடித்தனன். அதுகேட்டு இராமகயிங்கரியத்தில் உயிரொழிந்தானாதலால் இறந்தவனல்லன், உயிர்பிழைத்திருப்பவனே என்று மனந் தேறி, நீராடி நீக்கடன் முடித்துக்கொண்டு வானரவீரரைப்பார்த்து நீவிர் என்னை அல்லற்படச்செய்தீரலலீர், என்னை வாழ்வித்தீர். என் தீவினை இன்றேயற்றது. நீவிர் ஈண்டு இராமநாமத்தியானஞ்செய்வீராயின் எனக்கோர் பெரும்பயன் உண்டாமென, அது காண்குவமென்று ஸ்ரீராமநாமசங்கீர்த்தனஞ்செய்தனர். உடனே சம்பாதிக்குப் பண்டுபோல் சிறகுதோன்றி வானத்தையளாவியது. வானரவீரர் கண்டு அச்சமும் வியப்பும் உடையராய் அவனை அஞ்சலிசெய்து நமக்கு முன்னுளூற்றது முற்றுமோதுகவென சம்பாதி சொல்வானாயினன். நாங்களிருவரும் அருணனுடைய புத்திரர்கள். இளமையில் ஒருநாள் சூரியனைக் காணும்பொருட்டு மேற்பறந்து செல்லுகையில் சூரியவெப்பத்தினால் சிறகுதீய்ந்து விழுகையில் இளையோனைக் காக்கும்பொருட்டு என் சிறகு நிழலில் அவனைக் காத்துக்கொண்டு யான் வருதலும் என் சிறகு தீய்ந்து வீழ்ந்தேன். இம்மலையின்கண்ணுள்ள லோகசாரங்கன் என்னை நோக்கிச் சிறகில்லாத் துன்பத்தினால் உயிர்மாயற்க, சின்னாளில் ஜானகியாரைத் தேடி வானரர்கள் வருவார்கள்; அவர்களை இராமநாம சங்கீர்த்தனஞ் செய்யும்படி நீ வேண்டிக்கொண்டால், அவ்வாறு அவர்கள் சொல்லுகையில் நீ சிறகுமுளைத்துப் பழையபடி எழுவாய் என்று சொல்லினன். அவ்வாறே நீவிர் இராமநாமத்தைச் சொல்லாநிற்கச் சிறகு தழைந்தது. ஐயன்மீர் அக்கபடன் பிராட்டியாரைக் கொண்டுபோகையில் யான் பார்த்தேன். இலங்கையின் அசோகவனத்தில் அரக்கியர் காவலில் வைத்துளன்; அங்கு நீங்களெல்லீரும் செல்லுதலரிது. ஒருவர் சென்று கண்டுவந்து பெருமானுக்குச் சொல்லுமின். காப்பவரில்லாமையால் கழுகின்கூட்டம் அலைந்து திரியாநிற்கும். எனக்கு விடைதருமின், செல்லுகின்றேனென்று விடைபெற்றுச் சம்பாதி மேலெழுந்து சென்றனனென்பது.

கலிவிருத்தம்.

1 மழைத்தவிண்ணகமென முழங்கிவானுற
இழைத்தவெண்டிரைக்கர மெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென் னுழையென்றேடிவந்
தழைப்பதேகடுக்குமவ் வாழிநோக்கினர்.

2 விரிந்துநீரெண்டிசை மேவிமேன்மையால்
பொருந்துநிர்மகேந்திரத் தென்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளா மளவில்சேனையும்
பெருந்திரைக்கடலெனப் பெரிதுகூடிற்றே.

3 யாவருமவ்வயி னெளிதினெய்தினார்
பூவருபொலங்குழற் பொருவில்கற்புடை
தேவியைக்காண்கிலா செய்வதோர்கிலா
நாவுறக்குழறிட நவில்கின்றாரோ.

4 அற்றதுநாள்வரை யவதிகாட்சியும்
உற்றிலமிராகவ னுயிரும்பொன்றுமால்
கொற்றவனாணையுங் குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செய லினியென்றெண்ணினார்.

5 அருந்தவம்புரிதுமோ வன்னதன்றெனின்
மருந்தருநெடுங்கடு வுண்டுமாய்துமோ
திருந்தியதொருவிதஞ் செய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க் கிறுதியெண்ணுவார்.

6 கரைபொருகடலயற் கனகமால்வரை
நிரைதுவன்றியவென நெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுள தெனவுணர்த்தினான்
அரசிளங்கோளரி யயருஞ்சிந்தையான்.

7 நாடிநாங்கொணருது நளினத்தாளைவான்
மூடியவுலகினை முற்றுமுட்டியென்
றூடவர்திலகனுக் கன்பினாரெனப்
பாடவம்விளம்பினம் பழிபின்மூழ்குவாம்.

8 செயதுமென்றமைந்தது செய்துதீர்ந்திலம்
நொய்துசென்றுற்றது நுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்பதோ ரிறையுங்கண்டிலம்
உய்துமென்றுலிதோ ருரிமைத்தாகுமோ.

9 எந்தையுமுனியுமெம் மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச் செய்கைகாண்குறேன்
நொந்துவனுயிரினை நணங்குகேள்வியீர்
புந்தியினன்னது புகல்விராமென்றான்.

10 விழுமியதுரைத்தனை விசயம்வீற்றிருந்
தெழுவொடுமலையொடு மிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம் மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச் சாம்பன்சொல்லினான்.

11 மீண்டினியொன்றுநாம் விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநல மெனவலிததனம்
ஆண்டகையரசிளங் குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க் குறுதிவேண்டுமால்.

12 என்றவனுரைத்தலு மிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர் குவவுத்தோளினீர்
பொன்றிநீர்மடியயான் போவெனேலது
நன்றதோவுலகமு நயக்கற்பாலதோ.

13 சான்றவர்பழியுரைக் கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப் போந்துளானென
ஆன்றபேருலகுளோ ரறைதன்முன்னம்யான்
வான்றொடர்குவெனென மறித்துங்கூறுவான்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

14 எல்லைநம்மிறுதியாய்க்கு மெந்தைக்கும்யாவரேனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற் றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமிளையகோவும் வீவதுதிண்ணமச்சொல்
மல்லனீரயோத்திபுக்கால் வாழ்வரோபரதன்மற்றோர்.

15 பரதனும்பின்னுளோனும் பயந்தெடுத்தவருமூரும்
சரதமேமுடிவர்கெட்டேன் சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்க விளக்கினாலுலகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம் விளைந்தவாவெனக்கலுழ்ந்தான்.

16 பொருப்புறழ்வயிரத்திண்டோட் பொருசினத்தாளிபோல்வான்
தரிப்பிலாதுரைத்தமாற்றந் தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையேவிளைத்தபோல நெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பினுலவனைநோக்கி விளம்பினனெண்கின்வேந்தன்.

கலிவிருத்தம்.

17 நீயுநின்றுணையு நீங்கிநின்குலத்
தாயம்வந்தவர்க்கொரு தநயரில்லையால்
ஆயதுகருதின மன்னதன்றெனின்
நாயகரிறுதியு நவிலற்பாலதோ.

18 எருநீயவ்வழி யெய்தியிவ்வழித்
தோகையைக்கண்டிலா வகையுஞ்சொல்லியென்
சாகையுமுணர்த்துதி தவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன் வரம்பிலாற்றலான்.

19 அவனவையுரைத்தபி னனுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொரு புடையிற்புக்கிலம்
*கவனமாண்டவரெனக் கருத்திலாரெனத்
தவனவேகத்தினி சலித்திரோவென்றான்.

20 பின்னருங்கூறுவான் பிலத்தில்வானத்திற்
பொன்வரைக்குடுமியிற் புறத்துளண்டத்துள்
நன்னுதற்றேவியைக் காண்டுநாமெனின்
சொன்னநாளவதியை யிறைவன்சொல்லுமோ.

21 நாடுதலேநல மின்னுநாடியத்
தோடலர்குழலிதன் றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப் போலவீடுதல்
பாடவமல்லது பழியிற்றுமென்றான்.

22 என்றலுங்கேட்டன னெருவைவேந்தன்றன்
பின்றுணையாகிய பிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொல் புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க் குறுகன்மேயினுன்.

---

* சவனமாண்டவரெனத தருக்கிலாரெனக்
கவனவேகத்தினீர் கழிதிரோ எனறும் பாடம்.

23 முறையுடையெம்பியார் முடிந்தவாறெனுப்
பறையிடுநெஞ்சினன் பனைக்குமேனியன்
இறையுடைக்குலிச*வே லெறிதலான்முனம்
சிறையறுமலையெனச் செல்லுஞ்செய்கையான்.

24 மிடலுடையெம்பியை வீட்டும்வெஞ்சினப்
படையுளர்யாரெனப் பகர்வநாயினுன்
உடலினைவழிந்துபோ யுவரிநீருராய்க்
கடலினைப்புரையுறு மருவிக்கண்ணினுன்.

25 உழுங்கதிர்மணியணி யுமிழுமின்னினுன்
மழுங்கியநெடுங்கணின் வழங்குமாரியான்
புழுங்குவானமுங்கினுன் புடவிமீதினில்
முழங்கிவந்திழிவதோர் முகிலும்போல்கின்றுன்.

26 வள்ளியுமரங்களு மலையுமண்ணுறத்
தெள்ளுநுண்பொடிபடக் கடிதுசெல்கின்றுன்
தள்ளுவன்கால்பொரத் தரணியிற்றவழ்
வெள்ளியம்பெருமலை பொருவுமேனியான்.

27 எய்தினனிருந்தவ ரிரியல்போயினுர்
ஐயனம்மாருதி யழலுங்கண்ணினுன்
நைதவநிசிசரக் கள்ளவேடத்தை
உய்திகொலினியென வுருத்துமுன்னின்றுன்.

28 வெங்கதம்வீசிய மனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர் பொழியுங்கண்ணினன்
சங்கையில்சழக்கில னென்னுந்தன்மையை
இங்கிதவகையினு லெய்தநோக்கினுன்.

29 நோக்கினனின்றன னுணங்குகேள்வியான்
வாக்கினுலொருமொழி வழங்கலாதமுன்
தாக்கருஞ்சடாயுவைத் தருக்கினுலுயிர்
நீக்கினர்யாரது நிரப்புவீரென்றுன்.

---

* வேலெறிகலாதமுன் சிறையுடை என்றும் பாடம்.

30 உன்னைநீயுள்ளவா றுரைப்பினுற்றதைப்
பின்னையானிரப்புதல் பிழைப்பின்றுதலால்
என்னமாருதியெதி ரெருவைவேந்தனும்
தன்னையாந்தன்மையைச் சாற்றன்மேயினான்.

31 மின்பிறந்தாலென விளங்கெயிற்றினாய்
என்பிறந்தார்க்கிடை யெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணை பிரிந்தபேதையன்
முன்பிறந்தேனென முடியக்கூறினான்.

32 கூறியவாசகங் கேட்டுக்கோதிலான்
ஊறியதுன்பத்தி னுவரியுட்புகா
ஏறினனுணர்த்தின னிகலிராவணன்
வீறியவாளிடை வீரிந்ததாமென்றான்.

33 அவ்வுரைகேட்டலு மசனியேற்றினால்
தவ்வியகிரியெனத் தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுயிராவுயிர் பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரை யெடுத்தியம்பினான்.

வேறு.

34 இளையாளீர்சிற கின்றிவெந்துநந்
தளையானேனுயிர் போதறத்தநால்
வளையாநேமியன் வன்மைசால்வலிக்
கிளையானேயிது வென்னமாயமோ.

35 மலரோனின்றுளன் மண்ணும்விண்ணுமுண்
டுலையாநீடற மின்னுமுண்டரோ
நிலையார்கற்பமு நின்றதின்றுநீ
இலையானாயிது வென்னதன்மையோ.

36 உடனேயண்டமி ரண்டுமுந்துயிர்த்
திடநாள்வந்திரு வேழுமெய்தியான்
விடநீயோர்தனிச் சென்றவீரமும்
கடனேவெங்கரு ளற்குமேன்மையாய்.

37 ஒன்றாமூன்றுல கத்துளோரையும்
வென்றானென்னினும் வீரநிற்குநேர்
நின்றானேயவ் வரக்கனின்னையும்
கொன்றானேயிஃ தென்னகொள்கையோ.

38 என்றென்றேங்கி யிரங்கியின்னலால்
பொன்றுந்தன்மை புரிந்தபோதவற்
கொன்றுஞ்சொற்கொ டுணர்ச்சிநல்கினான்
வன்றிண்டோள்வரை யன்னமாருதி.

39 தேற்றத்தேறி யிருந்தசெங்கணான்
கூற்றொப்பான்கொலை வாளரக்கனோ
டேற்றும்போர்செய்த தென்னிமித்தெனக்
காற்றின்சேயிது கட்டுரைக்குவான்.

40 எங்கோமானவ் விராமனில்லுளாள்
செங்கோலான்மகள் சீதைசெவ்வியாள்
வெங்கோல்வஞ்சன் விளைத்தமாயையால்
தங்கோனைப்பிரி வுற்றதன்மையாள்.

41 கொண்டேகுங்கொலை வாளரக்கனைக்
கண்டானும்பிய றங்கடக்கலான்
வண்டார்கோதையை வைத்துநீங்கெனாத்
திண்டோரானெதிர் சிந்தைசீறினான்.

42 சீறித்தீயவ னேறுதேரையும்
கீறித்தோள்கள் கிழித்தழித்தபின்
தேறித்*தாழ்சடை யீசன்றெய்வவாள்
வீறப்பொன்றினன் மெய்ம்மையோனென்றான்.

43 விளித்தானன்னது கேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தகு தீர்த்தன்மாட்டுயிர்
அளித்தானேயது நன்றுநன்றெனாக்
களித்தான்வாரி கரந்தகண்ணினான்.

---

* தேவர்க டேவன் எனவும் பாடம்.

41 பைந்தாரெங்க ளிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சி திறத்திறந்தவன்
மைந்தாவெம்பி வரம்பில்சீர்த்தியோ
டுய்ந்தானல்ல துலந்ததுண்மையோ.

45 அறமன்னனுட னெம்பியன்பினோ
டுறவென்னவுயி ரொன்றவோவினான்
பெறவொண்ணுதகோர் பெற்றிபெற்றவற்
கிறவென்னுமிதி னின்பம்யாவதோ.

46 என்றென்றேங்கி யிரங்கியின்புனல்
சென்றங்காடுதல் செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலி மாறிலாதவன்
குன்றுந்தாதவற் கின்னசொல்லினான்.

47 வாழ்வித்தீரெனை மைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரவிர் துன்பவாழியாய்
கேள்வித்தீவினை கீறினீரருள்
போழ்வித்தீருநா பொய்யினீங்கினீர்.

48 எல்லீருநும்மவ் விராமநாமமே
சொல்லீர்சொல்லவெ னக்கோர்சோர்விலா
நல்லீரப்பய னண்ணுநல்லசொல்
வல்லீர்வாய்மை வளர்க்குமாண்பினீர்.

49 என்றானன்னது காண்டும்யாமெனா
நின்றார்நின்றுழி நீலமேனியான்
நன்றாநாம நவின்றுநல்கினார்
வன்றோளான்சிறை வானந்தாயவே.

50 சிறைபெற்றான்றிகழ் கின்றமேனியான்
முறைபெற்றானுல கெங்குமூடினான்
நிறைபெற்றாவி நெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாமென லாமுறுப்பினான்.

51 தெருண்டான்மெய்ப்பெயர் செப்பலோடும்வந்
துருண்டானுற்ற பலத்தையுன்னினூர்
மருண்டார்வானவர் கோனைவாழ்த்தினூர்
வெருண்டார்சிந்தை வியந்துவிம்முவார்.

52 அன்னானைக்கடி தஞ்சலித்துநீ
முன்னாளுற்றது முற்றுமோதெனச்
சொன்னூர்சொற்றது சிந்தைதோய்வுறத்
தன்னூலுற்றது தான்விளம்புவான்.

அறுசீரக்கழிநெடிலாசிரிய விருத்தம்.

53 தாயெனத்தழுவுநண்பீர் சம்பாதிசடாயுவென்பேம்
சேயொளிசிறையவேகக் கழுகினுக்கரசுசெய்வேம்
பாய்திரைப்பரவைஞாலம் படரிருளகற்றும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரு ரருணனுக்கமைந்தமைந்தர்.

51 ஆயுயரும்பர்நாடு காண்டுமென்றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடு மேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக் கண்ணுற்றுங்கண்ணுறுமுன்
தீயையுந்தீக்குந்தெய்வச் செங்கதிர்ச்செல்வன்சீறி.

55 முந்தியவெம்பிமேனி முருங்கழன்முடுகும்வேலை
எந்தைநீகாத்தியென்றுன் யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைதலோடு மற்றவன்மறையப்போனூன்
வெந்துமெய்யிறகுதீந்து விழுந்தனென்விளிகிலாதேன்.

56 மண்ணிடைவிழுந்தவென்னை வானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்ற கருணையன்சனகன்காதற்
பெண்ணிடையீட்டின்வந்த வானரமிராமன்பேரா
எண்ணிடையுற்றகாலத் திறகுபெற்றெழுதியென்றுன்.

57 தாழ்ந்தமாதவத்திலோக சாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனென்சிறைகடிய வெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்ற வுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனெனூழ்ந்தவென்னை யருந்தவனெதிர்ந்துதேற்றி.

58 கற்றிலர்போலவுள்ளக் களிப்பினாலமரர்காப்பூ
டுற்றிடக்கருதிமீப்போ யாதபத்தனதுமேனி
முற்றழன்முருங்கமண்ணை முயங்கினையினியென்சின்னாள்
மற்றுநின்னுயிரையோம்பா நிகழ்வதுமாலைத்தன்றால்.

59 களித்தவர்கெடுதறிண்ணஞ் சனகியைக்கபடன்வவ்வி
ஒளித்தவாய்துருவியுற்ற வானரமிராமனாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும் வெவ்வுயிர்தந்தயாலென்றன்
றளித்தனனதனாலாவி யாற்றினேனாற்றன்மொய்ம்பீர்.

60 அன்றியுமலருள்வைகு மயனைநேர்முனிவன்வாய்மை
நன்றிகொளீரற்காண்பா னணுகலும்வினையேனுற்ற
தொன்றொழிவுறுமற்கேட்ட தியோகத்தினுணாசிபேணிப்
பொன்றுதலொழிமின்யானே புகல்வதுகேண்மினென்றான்.

61 தசரதராமன்றேவர் தவத்தினாற்றாய்சொற்றாங்கித்
தசரதநாகமின்றிக் கானிடையிருக்கநாலை
வசைதருமிலங்கைவேந்தன் வவ்வியதிருவைநாடித்
திசைதிரிகவிகளாற்றாற் சிறகுபெற்றெழுந்தியென்ன.

62 எம்பியுமிடரினவீழ்வா னெய்துமறுக்கவஞ்சி
அம்பரத்தியங்குமானைக் கழுகினுக்கரசனானன்
நம்பிமீரீதென்றன்மை நீரிவணடைந்தவாறதை
உம்பருமுவக்கத்தக்கீ ருணர்த்துமினுணரவென்றான்.

63 என்றலுமிராமன்றன்னை யேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றைத் தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித் தேடிநாம்வந்துமென்றார்
நன்றுநீர்வருந்தல்வேண்டா நானிதுநவில்வலென்றான்.

64 பாகொன்றுகுதலையாளைப் பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுங்கண்டேன் புக்கனனிலங்கைபுக்கு
வேகின்றவுள்ளத்தாளை வெஞ்சிறையகத்துவைத்தான்
ஏகொன்றிற்காண்டிரந்தி லிருக்குநளினறவியின்னும்.

65 யோசனையொருநூறுண்டா லொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துக்கூற்றுங் கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்ற நெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேற லெப்பரிசியையவதென்றான்.

66 நான்முகத்தொருவன்மற்றை நாரியோர்பாகனிற்க
பான்முகப்பரவைப்பள்ளிப் பாம்பரன்பணியென்றாலும்
காலனுக்கேயுஞ்சேற லரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச் செல்லுமின்விளிவினாளீர்.

67 எல்லீருஞ்சேறலென்ப தெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகி மறைந்தவணொழுகிவாய்மை
சொல்லீரேதுயராநீக்கித் தோகையைத்தெருட்டிமீடிர்
அல்லீரேலென்சொற்றேறி யுணர்த்துமினழகற்கம்மா.

68 காக்குநரின்மையாலக் கழுகினமுழுதுங்கன்றிச்
சேக்கைவிட்டிரியல்போகித் திரிதருமதனைத்தீர்ப்பான்
போக்கெனக்கடுத்தநண்பீர் நல்லதுபுரிமினென்னா
மேக்குறவிசையிற்சென்றான் சிறையினால்விசும்புபோர்ப்பான்.

13--வது. சம்பாதிபடலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம். 68.



## 14-வது. மகேந்திரபடலம்.



மகேந்திரமென்னும் சிறப்புப்பெயர்பெற்ற மலையைச்சார்ந்து அங்கு வானரவீரர்கள் செய்த செய்தியை உணர்த்துவது.

இதிலடங்கிய கதை:—வானரப்படைத்தலைவர்கள் ஒருங்குகூடியிருந்தகாலையில் தம்மின் சொல்லிக்கொள்ளுவாராயினார். கழுகரசனாகிய சம்பாதி பொய்யுரைசொல்லான், பிராட்டியினிருப்பும் நிலைமையும் கைந்நெல்லிக்கனிபோல முற்றுமவனுணர்த்த உணர்ந்தோம். செய்துமுடிக்கும் திறம் வல்லோர்களே செய்யுங்கோள். சூரியகுமாரனோடும் யாவரினும் மேம்பட்ட நம்பெருமானிடத்துச் சென்று முதலில் நட்புச்செய்வித்த வல்லோராகிய அநுமானே, நாம் நாடவந்த காரியம் வெற்றிபெறுதல் சிறந்தது. இக்கடலை, தாண்டவல்லார் நம்மில் யாவருளர்? நாமெல்லாம் உயிர்மாயும்படி கடக்கக்கூடாத நிந்தையைப் பெற்று, அங்ஙனம் மாயாமல் திரும்பிச்செல்லவும் துணிந்தோம். இனி இக்கடலைக்கடப்பவர் கடலைக்கடந்து எம்மையாண்டுகொள்ளும். தீரமுடையாரே வெளிப்படுமின் என்று சொல்லுகையில் நீலன்

முதலாகிய பெரியவீரர்கள் கடலைக்கடக்குந்திறம் எம்மிடத்தில்லையென்று சொல்லினார்கள். உடனே அங்கதப்பெருமான் நான் கடலைக்கடப்பேன், மீண்டுவருந் திறமில்லேனென்றான். சாம்பன் எழுந்து எல்லாவேதங்களும் உணர்ந்தறியாத மெய்த்தேவன் பூமியையளந்தகாலையில் திரிலோகமும் இந்திரனுக்குரியனவென்று பறையடித்துச் சென்றகாலையில் மேருமுழந்தாளிற் பட்டுப் புண்செய்தமையால் இலங்கையிற் சென்று, பிராட்டியாரைக்கண்டு மீளும் வலியில்லேனென்று கூறி ஆதியில் ஸ்ரீராமபிரானிடத்துச் சென்றமையானும் எடுத்தகாரியத்தைச் சோர்வில்லாமல் முடிக்குந்திறமுடைமையானும் மாருதியை யொப்பவர்கள் வேறேயில்லையென்று துணிந்து அநுமானை நோக்கி: விஷகண்டனாகிய உருத்திரனைபபோல போர்செய்யவல்லீர்; பஞ்சபூதங்களினாலும் தெய்வப்படைகளாலும் இறவாதீர்; அண்டத்தையும் குதிக்க வல்லீர் என்று இவ்வாறு பலவாறாக உரைத்தான். அதுகேட்டுச் செந்தாமரை மலரின் நடுவில் செவ்வாம்பல் பூத்தாற்போல நகைவந்து அங்கதன் முதலிய வானரவீரர்களை அநுமான் நோக்கிக் கைகூப்பி அவ்வானரத்தலைவர்களுக்குப் பெருமகிழ்ச்சியுண்டாகும்படி இலங்கையை வேரோடுகெல்லி இங்கே கொண்டுவாவென்றாலும் விலங்கையொத்த அரக்கரையெல்லாம் கொலைபுரிந்து எம்பெருமாட்டியை யெடுத்து இங்குவாவென்றாலும் வருவேன்; நீங்களே பிராட்டியைக் கொண்டுவரத்தக்க வலியுடையீர்; என்னுடைய வலியின்மையை வெளிப்படுத்தும்படி என்னை ஏவினீர்களாயின், என்னைப் போன்ற நற்பிறப்பினர் யாவருளர்? உலகங்களை முழுத்தும்படி கடல்கள் வந்தெதிர்ப்பினும் இவ்வண்டம் உடைந்துபோய் உயர்ந்தாலும் உங்களுடைய கட்டளையும் எம்பெருமானுடைய ஏவலும் நீண்டசிறைகளாகக்கொண்டு பறவைவேந்தனைபபோல இக்கடலைத்தாவுவேன். இவ்விடத்தே நீவிரெல்லாம் சுகமேயிருமின், விரைவில் செலவுகொடுமின் எனறுகூறி அம்மலையின் சிகரத்திலேறி தோலாநாவின் மேலோர் தன்னைத் திருவடியென்று கூறும் வகையை யாவருங் கண்ணுற்காண உயர்ந்துநின்று கடலைக் கடையும்போது கூர்மப்பெருமானுடைய முதுகிலே தோன்றிய மந்தரமலைபோலவும் அண்டத்தைத் தாங்காநின்ற பெருந்தூணுக்கு அடியிலிட்ட பெருங்கல்போலவும் விளங்க நின்றானென்பது.

கலிநிலைத்துறை.

1 பொய்யுரைசெய்யான் புள்ளரசென்றே புகலுற்றார்
கையுறைநெல்லித் தன்மையினெல்லாங் கரைகண்டாம்
உய்யுரைபெற்றா நல்லவையெல்லா முறவெண்ணிச்
செய்யுமினென்றே செய்வுரைநொய்திற் செயவல்லீர்.

2 சூரியன்வெற்றிக் காதலனோடுஞ் சுடர்விற்கை
ஆரியனைச்சென் றேதொழுதுற்ற தறைகிற்பீர்
சீரிதின்முற்றுந் தேருதல்கொற்றச் செயலம்மா
வாரிகடப்பார் யாவரெனத்தம் வலிசொல்வார்.

3 மாளவலித்தே மென்றுமிம்மாளா வசையோடு
மீளவுமுற்றே மன்னவைதீரும் வெளிபெற்றேம்
ஞாளநிறத்தோ டொப்பனவிந்நோர் கடறுவுற்
றுளுநலத்தீ ராளுமினெம்மா ருயிரம்மா.

4 நீலன்முதற்பேர் போர்கெழுகொற்ற நெடுவீரர்
சாலவுணாத்தார் வாரிகடக்குந் தகைவின்மை
வேலைகடப்பன் மீளமிடுக்கின் றெனவிட்டான்
வாலியளிக்கும் வீரவயப்போர் வசையில்லான்.

5 வேதமனைத்துந் தேர்தரவெட்டா வொருமெய்யன்
பூதலமுற்று மீரடிவைத்துப் பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ் சூழ்பறைவைத்தே வரமேரு
மோதவிளைத்தே தாளுலைவுற்றேன் விறன்மொய்ம்பீர்.

6 ஆதலினிப்பே ரார்கலிகுப்புற் றகழிஞ்சி
மீதுகடத்தித் தியவருட்கும் வினையோடும்
சீதைதனைத்தே ராவரமுற்றுந் திறனின்றென்
றேதியிறுத்தா னாலுமுகத்தா னுதவுற்றான்.

7 யாமினியிப்போ தாரனார்துய்த்திங் கினியாரைப்
போமெனவைப்பே மென்பதுபுன்மைப் புகழன்றே
கோமுதல்வர்க்கே றாகியகொற்றக் குமாரநம்
நாமநிறுதநிப் பேரிசைதைக்கு நவையில்லோன்.

8 ஆரியன்முன்னர்ப் போதுறவுற்ற வதனானும்
காரியமெண்ணிச் சோர்வறமுற்றுங் கடனானும்
மாருதியொப்பார் வேறிலையென்னா வயன்மைந்தன்
சீரியன்மற்றோ ளாண்மைதெரிப்பா னிவைசெப்பும்.

9 மேலைவிரிஞ்சன் வீயினும்வீயா மிகைநாளீர்
நூலைநயந்து நுண்ணிதுணர்ந்தீர் நுவறக்கீர்
காலனுமஞ்சுங் காய்சினமொய்ம்பின் கடனின்றீர்
ஆலநுகர்ந்தா னன்னவயப்போ ரடர்கிற்பீர்.

10 வெப்புறுசெந்தீ நீர்வளியாலும் விளியாதீர்
செப்புறுதெய்வப் பல்படையாலுஞ் சிதையாதீர்
ஒப்புறினொப்பார் நும்மலதில்லீ ரொருகாலே
குப்புறினண்டத் தப்புறமேயுங் குதிகொள்வீர்.

11 நல்லவுமொன்றே தீயவுநாடி நவைதீரச்
சொல்லவும்வல்லீர் காரியநீரே துணிவுற்றீர்
வெல்லவும்வல்லீர் மீளவும்வல்லீர் மிடலுண்டேல்
கொல்லவும்வல்லீர் தோள்வலியென்றுங் குறையாதீர்.

12 மேருகிரிக்கு மீதுறநிற்கும் பெருமெய்யீர்
மாரிதுளிக்குந் தாரையிடுக்கும் வரவல்லீர்
பாரையெடுக்கு நோன்மைவலத்தீர் பழியற்றீர்
சூரியனைச்சென் றுண்டையகத்துந் தொடவல்லீர்.

13 அறிந்துதிறத்தா றெண்ணியறத்தா றழியாமை
மறிந்துருளப்போர் வாலியைவெல்லு மதிவல்லீர்
பொறிந்நிமையாக்கோன் வச்சிரபாணம் புகமூழ்க
எறிந்துழிமற்றோ புன்மயிரேனு மிழவாதீர்.

14 போர்முனெதிர்ந்தான் மூவுலகேனும் பொருளாகா
ஓர்வில்வலங்கொண் டொல்கலில்வீரத் துயர்தோளீர்
பாருலகெங்கும் பேரிருள்சீக்கும் பகலோன்முன்
தேர்முனடந்தே யாரியநூலுந் தெரிவுற்றீர்.

15 நீதியினின்றீர் வாய்மையமைந்தீர் நினைவானும்
மாதர்நலம்பே ணாதுவளர்ந்தீர் மறையெல்லாம்
ஓதியுணர்ந்தீ ரூழிகடந்தீ ருலகினும்
ஆதியன்றா னேயெனயாரு மறைகின்றீர்.

16 அண்ணலமைந்தற் கன்புசிறந்தீ ரதனானே
கண்ணியுணர்ந்தீர் கருமநுமக்கே கடனென்னத்
திண்ணிதமைந்தீர் செய்துமுடிப்பீர் சிதைவின்றால்
புண்ணியமொன்றே யென்றுநிலைக்கும் பொருள்கொண்டீர்.

17 அடங்கவும்வல்லீர் காலமதன்றே லமர்வந்தால்
மடங்கன்முனிந்தா லன்னவலத்தீர் மதிநாடித்
தொடங்கியதொன்றே முற்றுமுடிக்குந் தொழிலல்லால்
இடங்கெடவெவ்வா யூறுகிடைத்தா லிடையாதீர்.

18 ஈண்டியகொற்றத் திந்திரனென்பான் முதல்யாரும்
பூண்டுநடக்கு நன்னெறிசாபப் பொறையானும்
பாண்டியநீரே யஃதினியுய்க்கும் படிவல்லீர்
வேண்டியபோதே வேண்டியதுய்க்கும் வினைவல்லீர்.

19 ஏகுமினேகி யெம்முயிர்நல்கி யிசைகொள்ளீர்
ஓகைகொணர்ந்தும் மன்னையுமின்னற் குறையில்லாச்
சாகரமுற்றுந் தாவிடுநீரிக் கடறும்
வேகமமைந்தீ ரென்றுவிரிஞ்சன் மகன்விட்டான்.

20 சாம்பனியம்பத் தாழ்வதனத்தா மனாநாப்பண்
ஆம்பல்விரிந்தா லன்னசிரிப்பா னறிவாளன்
கூம்பலொடுஞ்சேர் கைக்கமலத்தன் குலமெல்லாம்
ஏம்பல்வரத்தன் சிந்தைதெரிப்பா னிவைசொன்னான்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

21 இலங்கையையிடந்துவேரோ டிவ்வயிற்றருகென்றாலும்
விலங்கினர்தம்மையெல்லாம் வேரொடுவிளியநூறிப்
பொலங்குழைமயிலைக்கொண்டு போதெனப்புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்ற முடிக்குவல்கடிதுகாண்டிர்.

22 யோசனையொன்றுநூறு முள்ளடியுள்ளதாக
ஈசன்மண்ணளந்ததேய்ப்ப விருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்து மலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லாநூறி நினைத்ததுமுடிப்பல்பின்னும்.

23 நீயிரேநினைவின்முன்னே நெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்தும்வென்று தையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்று புலமைதீர்புன்மைகாண்டற்
கேயினிரென்னினென்னிற் பிறந்தவர்யாவரின்னும்.

24 முற்றுநீருலகமுற்றும் விழுங்குவான்முழங்கிமுந்நீர்
உற்றதேயெனினுமண்ட முடைந்துபோயுயர்ந்ததேனும்
இற்றைநும்மருளுமெங்கோ னேவலுமிரண்டுபாலும்
கற்றைவார்சிறைகளாகக் கலுழனிற்கடப்பல்காண்டிர்.

25 ஈண்டினிதுறைமின்யானே யெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும் விடைதம்மின்விரைவினென்று
ஆண்டவருவந்துவாழ்த்த வலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயத்தெய்வ மகேந்திரத்தும்பர்சென்றான்.

26 பொருவருவேலைதாவும் புந்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன் மேக்குறப்பெயர்ந்ததாள்போல்
உருவறிவடிவனும்ப ரோங்கினனுவமையாலும்
திருவடியென்னுந்தன்மை யாவர்க்குந்தெரியநின்றான்.

27 பார்நிழல்பரவும்பொற்றேர் வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்நிழல்பரப்புமேலோர் புகழெனவுலகம்புக்குத்
தார்நிழல்பரப்புந்தோளான் றடங்கடறாவாமுன்னம்
நீர்நிழலுவரிதாவி யிலங்கைமேற்செல்லநின்றான்.

28 பருவாயமடங்கல்வைகும் படர்வரைமுழுதுமூழ்க்
உருவாயவிடங்கொளுகைத் தொற்றைவால்சுற்றியூழின்
நெருவாயசிகரகோடி நெரிவனதெரியநின்றான்
மகவாமைமுதுகிற்றோன்று மந்தரமெனலுமானான்.

29 மின்னெடுங்கொண்டலுளின் வீக்கியகழலினார்ப்பத்
தன்னெடுந்தோற்றம்வானோர் கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடி மகேந்திரமண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாத சிலையெனப்பொலிந்துநின்றான்.

14-வது. மகேந்திரபடலம் முற்றிற்று. ஆகத்திருவிருத்தம். 29.



S. P. C. K. Press, Vepery, Madras. 1888.